எடுத்துச் சொல்வார்கள். அதாவது தங்கள் கொள்கைக்கு விரோதமாய் உள்ள கட்சியின் கொள்கையை நியாயமாக வும் பூரணமாகவும் எடுத்துச் சொல்வார்கள். பிறகு தங்க ளுடைய விவாதத்தினால் அதை உடைத் தெறிவார்கள். நாமும் நமது கட்சியை ஸ்தாபிக்க இந்த முறையைக் கைக் கொள்ளலாம்.

பிரசங்கத்தில் உபயோகிக்கும் பாஷை முக்கியமாகும். ஆங்கிலத்தில் பேசினால் நல்ல தற்கால ஆங்கில பாஷையைப் பிரயோகிக்க வேண்டும். சிதைந்த பாஷை கூடாது. தமிழில் பேசுவதாயிருந்தாலும் ரொம்ப இலக்கணமாகவும் இருக்கக்கூடாது; அதற்காக மிகவும் கொச்சையான தமி ழாகஇருப்பதும் கூடாது. பேசுவதை ஜனங்கள் நன்கு உணர வேண்டும். பிரசங்க பாஷையும் கம்பீர நடையில் இருக்க வேண்டும். நான் இப்படியே பேச விரும்புகின்றேன். நான் எந்தக் காரியத்துக்காகத் தமிழை உபயோகிக்கிறேனோ அதற்குத் தகுந்த அளவில் பாஷை எனக்கு அமைந்திருக் கிறது என்று சொல்கிறார்கள். உன் அபிப்பிராயம் என் னவோ? அடுத்த கடிதத்தில் மேலும் இதுபற்றியே எழுது கிறேன். இந்த விஷயமாக அக்கடிதமே கடைசி.

*6-6-'41.*

## III

பொதுப் பிரசங்கத்தைப்பற்றி நான் எழுதும் மூன்று வது கடிதம் இது. இதுவே அதைப் பற்றிய கடைசிக் கடித மும் ஆகும். என்னுடைய அபிப்பிராயங்களை இதில் தெரிவிக்கிறேன். பொதுக்கூட்டங்களில் பேசுவதற்கு

உனக்குச் சந்தர்ப்பங்கள் கிடைக்குமா ? என்று நீ எண்ண லாம். ஆம். உனக்கு அந்தச் சந்தர்ப்பம் வாய்க்குமென்றே நான் எண்ணுகிறேன். இந்தியா முழுவதும், பெரிய கூட் டங்களில் பேசுவதற்குச் சவுகர்யமாக நீ தமிழ், ஹிந்துஸ் தானி இரண்டையும் மளமளவென்றும், சரியாகவும் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும். மகாத்மா காந்தி நீ சிறந்த ஹிந்திப் பண்டிதராக விளங்க வேண்டுமென்று விரும்பு கிறார். உனக்கு ஹிந்தி கொஞ்சம் ஏற்கனவே தெரியும். நம் வீட்டுக்கு எதிரேதான் ஹிந்திப் பிரசார சபை இருக் கிறது. நீ அங்கு போகவேண்டும். அங்குள்ள நண்பர் களோடு நீ ஹிந்தியில் பேசவேண்டும். ஹிந்துஸ்தானியில் நடக்கும் விவாதங்களில் கலந்துகொள்ள வேண்டும். அப் படிச் செய்யும் பக்ஷத்தில் உனக்குக் கொஞ்சம் கொஞ்ச மாக ஹிந்தி பேசுவதில் திறமை ஏற்பட்டுவிடும். உன் தாய் பாஷை தமிழ். பள்ளிக்கூடத்தில் அது உன்னுடைய இரண்டாவது இஷ்டபாடம். அதுவும் உனக்குத் தெரியும். நீ "சுதேசமித்திரன்" "ஆனந்த விகடன்" இரண்டையும் தொடர்ச்சியாகப் படிக்கிறாய். பேசவும் பழகி வருகிறாய். சீக்கிரம் உனக்குப் பேச வந்துவிடும். 4-வது வகுப்புக்குப் பிறகு நான்கூடத் தமிழ் படிக்கவில்லை. ஆனால் அனு பவம் காரணமாக நான் தமிழில் பேசக் கற்றுக்கொண்டு விட்டேன்.

பொதுப் பிரசங்கத்துக்கு முக்கியமான அடிப்படையானது கூட்டம். ஆகவே பொதுப்பிரசங்கங்களைச் செய்பவர் தாம் பேசப் போகும் கூட்டத்தாரைக் கவனித்து நிதா னித்துக்கொள்ள வேண்டும். சாத்தியப்படும் போதெல் லாம் சிலர் பேசிய பிறகு நீ பேச வேண்டும். இப்படிச்

செய்தால் கூட்டத்தாரைக் கவனிக்கவும், முன்னால் பேசிய வர்கள் பற்றியும், அவர்கள் சொன்ன கருத்துக்கள் பற்றி யும் கூட்டத்தார் என்னமாதிரி அபிப்பிராயப் படுகின்ற னர் என்பதை நீ தெரிந்துகொள்ள இயலும். இது எப் போதுமே சாத்தியப்படக்கூடிய விஷயமல்ல. நீ கூட்டத் துக்குத் தலைமை வகிக்கும்படி நேரலாம்; அல்லது முதலில் பேசும்படியும் உன் பெயரைக் குறிப்பிட்டிருக்கலாம். அப் படியிருந்தால் நீ பேசத்தான் வேண்டும். இதுபோன்ற சந்தர்ப்பங்களிலெல்லாம் கூட்டத்தார் சாதாரணமான மனோ நிலையில் இருக்கிறார்களென்றும், நேயபாவத்தோடு கூடி இருக்கிறார்கள் என்றும் மனதில் நினைத்துக்கொண்டு நீ உன் பிரசங்கத்தை ஆரம்பிக்க வேண்டும்; இதுவே சிறந்த முறை. ஆனால் ஒன்று, பேசும்போதே நீ கூட்டத் தாரை நன்கு நிதானித்துக்கொண்டு, அவசியமானால் அவர் களது மனோபாவத்துக்குத் தகுந்தாற்போல் பேசவேண்டும். அதற்காக இதை மிகைப்படுத்தி விடுவதும் கூடாது. பேச்சு வன்மைக்கு உண்மைதான் நிச்சயமான அஸ்திவாரம்.

கூட்டங்களில் பலவிதம். பல வகையான கூட்டங்களை நான் பார்த்திருக்கிறேன். நேயபாவத்துடன் கூடிய கூட் டம் உண்டு; இதில் பேசுவது சுலபம். இதில் ஒரே ஒரு அபாயத்தை மட்டும் தவிர்க்கவேண்டும். நேச உணர்ச்சி யுள்ள கூட்டங்களில் நீ அடிக்கடி பேச நேர்ந்தால் உன் பேச்சு தொண தொணப்பாகிவிடும்; சொன்ன விஷயத் தையே திருப்பித் திருப்பிச் சொல்ல நேரும். பிரசங்கங் களைச் சரிவரத் தயார்செய்துகொண்டு கூட்டத்தாரைத் திருப்தி செய்து உற்சாக மூட்ட முடியாது. இந்த அபா யத்தை நீ தவிர்க்க வேண்டும்.

அடுத்த விஷயம். விரோதமான கூட்டம். கூட்டத்தை மொத்தமாக எடுத்துக்கொண்டால் அதிலிருப்பவர்கள் உன்னிடம் நேசபாவம் கொண்டவர்களா யிருப்பார்கள். ஆனால் அங்கேயுள்ள சில எதிரிகள் கூட்டத்தையே உனக்கு எதிராகத் திருப்பிவிட முயற்சி செய்யக்கூடும். நீ சொல்லும் விஷயம் பற்றி பொருத்தமான கேள்விகளை அவர்கள் கேட்டு, கோஷமிட்டு குறுக்குக் கேள்விகளைக் கேட்கலாம். உனக்கு அப்போது சமயோஜித புத்தியும், நிதானமும் இருந்தால் இது போன்ற சந்தர்ப்பங்களில் அவர்களையே திணரச் செய்துவிடலாம். சுருக்கமாக, முக்கியமாக ஹாஸ்யச் சுவையோடு பதில் கொடுத்தால் கூட்டத்திலிருப்பவர்கள் பிரசங்கத்திடையே குறுக்கிட்டுப் பேசுபவர்களைக் கேலி செய்ய ஆரம்பித்து விடுவார்கள். அத்தோடு குறுக்கிட்டவர்கள் வாய் அடைபட்டு விடும்.

இதிலேயே இன்னொரு விதம். அதையும் கேள், சொல்லுகிறேன். வேண்டுமென்றே கேள்விகள் கேட்டு குறுக்கிடும் கோஷ்டி ஒன்றுண்டு. அவர்கள் பதில் பெறவேண்டுமென்று கேள்விகள் கேட்பதில்லை. கூட்டத்தில் குழப்பமேற்பட வேண்டுமென்பதற்காகப் பிரசங்கம் செய்பவரது பேச்சில் குறுக்கிடுவார்கள். இவர்களை சமாளிப்பதெப்படி? கூட்டத்தைவிட்டு அவர்களை வெளியேற்றி விடுவதுதான் சிறந்த மார்க்கம். அவசியமானால் போலீஸாரைக்கொண்டு செய்ய வேண்டும். குறுக்கிடுபவர்களைச் சரிப்படுத்தி அப்புறப் படுத்துவதற்கு என்று பயிற்சி பெற்ற தொண்டர்களைக் கொண்டும் மேற்படி நபர்களை வெளியேற்றி விட வேண்டும். இவர்களைச் சமாளிக்க அடுத்தபடியாக இன்

ஒரு வழியும் உண்டு. குறுக்கிடுபவர்களை அலட்சியமாக எண்ணி அவர்களை மதிக்காமலேயே இருந்துவிட வேண்டும். அவர்களது கேள்விகளுக்கும் பதில் சொல்லக்கூடாது. நான் இதை எப்போதும் செய்திருக்கிறேன். அநேகமாக எல்லாச் சமயங்களிலும் எனக்கு இதில் வெற்றிதான்.

கூட்டத்தார் ரஸிக்க முடியாதபடி நீ பேச நேர்ந்து, அதனால் அவர்கள் உனக்குச் சாதகமாக இல்லாமல் போனால், அப்போது உன் திறமையைப் பிரயோகிக்கும்படி ஏற்படும். நாவன்மையிலுள்ள சகல சாதனங்களையும் நீ அப்போது உபயோகித்துக் கூட்டத்தாருக்குத் திருப்தி பிறக்கச் செய்யவேண்டும். சில சமயங்களில் இது போன்ற அனுபவம் எனக்கேற்பட்டிருக்கின்றது. முக்கியமாக இரு சந்தர்ப்பங்களில் இந்த அனுபவம் எனக்கு. சட்டசபைக்குப் போகவேண்டுமென்று தாஸுடன் நான் பிரசாரம் செய்த போதும், சமீபத்தில் காங்கிரஸ் மந்திரிப்பதவி ஏற்கவேண்டும் என்று சொன்ன போதும் ஏற்பட்டது அந்த அனுபவம். எனக்குக் கூட்டங்களில் எதிர்ப்புகள் இருந்தன. கடைசியில் நான் அவர்களது மனதை மாற்றிவிட்டேன் என்று நினைக்கிறேன்.

அநேகமாக பெண்கள் கூட்டத்திலும், சில சமயங்களில் ஆண்களடங்கிய கூட்டத்திலும் நீ சுகாதாரம், சமூக க்ஷேமாபிவிருத்தி, ஏன்? அரசியல் முதலியவைபற்றி பேசச் சந்தர்ப்பம் வாய்க்கலாம். பேச விரும்பினால் என்னுடைய பெண்ணான நீ என்னைவிட நன்கு பேசவேண்டும். இந்த விஷயத்தில் ஆண்டவன் உனக்கு வெற்றி தருவராக!

7-6-'41.

# மரியாதையான பழக்கம்

என் அன்புள்ள

லக்ஷ்மிக்கு,

'விசுவாஸமுள்ள தன்மை, உன்னதமான மனம் இவற்றின் பயன் கண்யமான நடத்தை'. இப்படி ஓர் ஆங்கிலக் கவிஞன் எழுதினன். அக்கவியின் வாக்கு சரியானது தான். சமூகத்தில் உல்லாசமாக இருப்பவன் மனிதன். எல்லா இடங்களேயும் போல மனிதன் என்ருல் பெண்ணும் அதில் சேர்ந்துதான் இருக்கிருள். குழந்தைப் பருவத்திலிருந்து கிழடு தட்டும் வரையில் ஆடவராயிருந்தாலும் சரி, பெண்களாயிருந்தாலும் சரி, இதர ஆண்களுடனே பெண்களுடனே பழகவே வேண்டியிருக்கும். சமூகம் என்பது இது தான். சமூகச்சக்கரம் சரிவரச் சுழலவேண்டுமானல் அது பரிசுத்தமாயிருக்க வேண்டும்; நன்கு சீராக அமைக்கவேண்டும். நல்ல மரியாதையுள்ள நடவடிக்கைகள் மனித சமூகத்தை செவ்வையாகவும், சந்தோஷமாகவும் நடத்துவதற்கு வழிகளாக அமைந்திருக்கின்றன.

நல்ல மரியாதையுள்ள நடத்தை என்ருல் குறிப்பிட்ட வார்த்தைகளை யோ அல்லது சமிக்ஞைகளையோ நான் சொல்லவில்லை. இவை அவ்வப்போது ஏற்படக் கூடியவை. அடிக்கடி அவசியமாக இருக்கக் கூடிய விஷயமும் ஆகும். நல்ல மரியாதையான நடத்தையை வெளியிடுவதற்கு இவை

வெளிப்படையாகவுள்ள அம்சங்கள். உன்னிடம் பரிச்சயமுள்ளவர்களைக் கவனிப்பதற்கு இரண்டு வழிகள் உண்டு. சில சந்தர்ப்பங்களில் ஒன்று நம்மைப்பற்றியே நாம் நினைத்துக் கொண்டிருந்து விடுகிறோம்; அல்லது மற்றவர்களை அலட்சியமாக நினைத்து அவர்கள் இல்லாததைப் போலவே நடந்துகொள்கிறோம். இது சிலருக்குக் கொஞ்சகாலம் சாத்தியமாயிருக்கலாம். ஆயினும் இதனால் ரொம்பக்கஷ்டம். "மற்றவரைப்பற்றியும் கவனம்செலுத்தவேண்டும்" என்ற கோட்பாட்டைப் பின்பற்ற வேண்டும். அதைவிட "பிறர் உனக்கு என்ன வெல்லாம் செய்ய வேண்டுமென்று நீ விரும்புகிறாயோ, அவற்றை அவர்கள் விஷயத்தில் செய்." இது முறை. நல்ல மரியாதையுள்ள நடத்தையின் உண்மை ரகசியம் இதுதான்.

வெள்ளைக்காரர்களிடமிருந்து சில நல்ல மரியாதையான பழக்கங்களை நாம் தெரிந்துகொண்டிருக்கிறோம். உதாரணமாக நாம் ஒருவரை முதன் முதலில் பார்க்கும்போது 'குட்மார்னிங் (Good morning) என்கிறோம். யாராவது நமக்கு ஏதாவது செய்தால் ("Thank you") வந்தனம் என்கிறோம். இதைக் கேட்டவுடன் உன்னோடு பேசுபவர் "Don't Mention" பரவாயில்லை என்கிறார். இவையெல்லாம் வெற்று சம்பிரதாயங்களாகத் தோன்றலாம். ஆனால் அப்படியில்லை. நமது முன்னோர்களெல்லாம் ஒருவரை ஒருவர் சந்தித்தால் ஆலிங்கனம் (தழுவிக்கொள்ளுதல்) செய்து கொள்வார்கள். அல்லது நமஸ்காரம் செய்வார்கள். நாம் யாருக்கும் பகிரங்கமாக வந்தனம் சொல்வதில்லை. பார்க்கப்போனால் "Thank you" என்ற ஆங்கிலப் பதங்களுக்கு சரியான தமிழ் சொற்கள் இல்லை. நல்ல நடத்தையைக்

குறிப்பதற்கான இந்தப்பழக்கங்களை நாம் அனுஷ்டிக்கலாம் என்பது என் அபிப்பிராயம். உனக்குளன்ன தோன்றுகிறது?

கண்யமான நடத்தையைப் பெருக்கிக்கொள்வதற்கு குறிப்பாக ஒருஅம்சம் உண்டு. நெரிசலாகவுள்ள இடங்களில் நாம் நடமாடும்போது நாம் இந்த அம்சத்தை வளர்த்துக்கொள்ளலாம். இரண்டு மூன்றுபேர்கள் ஒரு அறைக்குள் பிரவேசிக்க வேண்டியிருக்கிறது; அல்லது அறையிலிருந்து வெளியே வரும்படி இருக்கிறது. நமக்கு என்ன செய்வதென்றே தெரிவதில்லை. ஒருவரையொருவர் இடித்துத் தள்ளி எல்லோருக்கும் ஹிம்ஸையை உண்டு பண்ணிவிடுகிறோம். இந்தச் சமயத்தில் ரொம்ப கண்யமான முறை என்ன தெரியுமா? நீ ஓரத்தில் ஒதுங்கி நின்று மற்றவர்கள் முதலில் போகும்படி வழிவிடவேண்டும். இதனால் உனக்கு சுணக்கமாகலாம். ஆனால் இதனாலுள்ள வசதியும், நல்லுணர்ச்சியும் காலதாமதத்தைவிடச் சிறந்தது.

முதலில் வந்தவருக்கு, முதலிடம் என்ற முறையை நாம் அனுஷ்டிக்கலாம். இது கண்யமானது. பஸ்கள், டிராம்கள், ரயில்கள் தியேட்டர்கள் முதலிய இடங்களிலெல்லாம் பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் இவர்களை பற்றிய சிந்தனையே இல்லாமல் ஒருவரோடு ஒருவர் மோதிக் கொள்வதை நீ பார்த்திருப்பாய். இது ரொம்ப மட்டமான நடத்தை. மேலே சொன்ன முறையை நாம் அனுஷ்டித்தால் அது நல்ல பழக்கம்; எல்லோருக்கும் காரியம் சுலபம்.

நீ உன்னையும், உன் உடுப்புகளையும் சுத்தமாக வைத்துக் கொள்வதும் நல்ல பழக்கங்களில் சேர்ந்தவை தான். உன் சுகாதாரத்துக்காக மட்டுமின்றி சமூகத்தில் உன்னோடு

பழகுபவர்களுக்காகவும் சுத்தமாயிருப்பது அவசியம். தேகம், உடுப்பு இவை சுத்தமாக இருப்பதுசொந்த விஷயத்திலிருப்பதைப்போலவே சமூகத்துக்கும் முக்கியமாகும். அது ஒரு கடமை. ஏதாவது வாஸனை போட்டுக்கொள்வது மிகச் சிறந்த காரியம் என்று சொல்லலாம்.

பெண்களை நடத்தும்விஷயத்தில் மேல்நாட்டினரிடமிருந்து நாம் ஏராளமான விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. தங்களுடைய பெண்களை மரியாதையுடன் நடத்துவதென்ற அவர்களது முறை பழைய கால நோக்கத்தை அனுசரித்ததாகும். நமது பெண்களை நாம் **(अबला)** அபலை என்கிறோம். ஆகவே அவர்களை எல்லா விதத்திலும் நன்கு நடத்துவோம். இதை நாம் மிகைப் படுத்தக் கூடாதென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். உதாரணமாக—கூட்டம் நிறைந்த வண்டியில் ஒரு பெண் வந்தால் உன் இடத்தை அவளுக்கு அளிப்பது நல்லது. நடந்து போகும்போது நாம், பெண்களை முன்னால் போகும்படி விடவேண்டும். "சம உரிமை" என்று சமீபகாலமாக ஒரு அபிப்ராயம் உதித்திருக்கிறது. அந்த அபிப்ராயக்காரர்கள் பெண்களை விசேஷமாக, பிரத்யேகமாகப் பாவித்து நடத்தக்கூடாது என்று கூறுகின்றனர். நான் இதை ஒப்புக்கொள்ளவில்லை. நீ இதை ஒப்புக்கொள்கிறாயா என்ன? குழந்தைகள், வயோதிகர்கள் இவர்கள் விஷயத்தில் நாம் மிகவும் அனுதாபங்கொண்டு மரியாதையாக நடக்கவேண்டும்.

சிறந்த பெண்மணியென்றோ, கண்யமுள்ள புருஷன் என்றோ எல்லோரும் எண்ணும்படியாக நடந்துகொள்ளு

வதில் இருக்கவேண்டும். இந்த வார்த்தைகளைச் சுலபமாக வியாக்யானம் செய்யமுடியாது. ஆனால் அவற்றின் கருத்து என்னவென்பது உனக்கும் தெரியும்; எனக்கும் தெரியும். இதற்கெல்லாம் திட்டமான விதிகளை ஏற்படுத்துவது சாத்தியமில்லை.

ஒவ்வொரு பேச்சிலும் அதாவது சம்பாஷணை, உன்னுடைய தொனி, மற்றவர்களிடம் நீ மரியாதையுடன் பழகும் விதம், இவற்றிலிருந்து நீ பெண் என்பதை நிரூபிக்கலாம். உன் நடை, கம்பீரமான போக்கு இவற்றின் மூலமாகவும், கண்யமான பெண் என்பதை தெளிவுபடுத்தலாம்.

பணம், படிப்பு, சமூகத்தில் வசிக்கும் அந்தஸ்து இவற்றைப் பொறுத்ததல்ல மரியாதையான நடத்தை. அவை எல்லாம் அதற்கு உதவி செய்யக்கூடியவைதான். இது இருதயத்தின் தன்மை. நீ நல்ல பெண்மணியாக, எல்லோரிடத்திலும் அன்பாகப் பழகி அனைவருக்கும் சேவைசெய்து நீ போகும் இடங்களில் எல்லாம் சந்தோஷமும், ஆனந்தமும் பரவும்படி செய். சற்று நிதானத்துடனும் இஷ்டத்தோடும் மற்றவர்களுக்குப் பணிந்து நடக்கவேண்டும்.

இதில் தானிருக்கிறது சூட்சமம்.

8-6-'41.

## புத்தகங்கள்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

உனக்குப் புத்தகங்கள் என்றால் ரொம்பப்பிடிக்கிறது. இது என்னுடைய அபிப்பிராயம். உன் அம்மா அபிப்பிராயமும் அதுவேதான். புத்தகங்களைப் படிப்பதற்கு உனக்கு ஆசை இருக்கவேண்டியதுநியாயம்தான். பல விஷயங்களைப் பற்றி அதிகமாகத்தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை புத்தி வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அஸ்திவாரம்போலா கும். நீகுழந்தை; எனவே கதைப் புத்தகங்கள், நாவல்கள், யாத்திரையைப் பற்றிய புத்தகங்கள், இவற்றையெல்லாம் படிக்கவேண்டும் என்று உனக்கு விருப்பம் இருப்பது இயற்கை. இன்னும் பலர் இப்படித்தான். ஆனால் கூடிய சீக்கிரம் நீ இதை விட்டு விடவேண்டும். சரித்திரம், பூகோளசாஸ்திரம், இயற்கை விஞ்ஞானம்-அதாவது மலர் கள், பறவைகள், மிருகங்கள். மனோ தர்ம சாஸ்திரம் மதம், முதலியவைகளைப் பற்றிய புத்தகங்களை யெல்லாம் படித்தறியவேண்டும். நன்கு படித்த பெண்ணாக விளங்க வேண்டும் என்பது உனது லட்சியமாக இருக்கட்டும். நான் மேலே சொன்ன விஷயங்களைப்பற்றி யெல்லாம் படித்து நீ நிபுணத்துவத்தை அடைவது என்பது சாத்தியமில்லை. அதற்கு அவசியமும் கிடையாது. இந்தப் பொதுவான விஷயங்களைப்பற்றி யெல்லாம் பூர்வாங்கமாகப் படித்து

பரிசிலனே செய்து வைத்துக்கொண்டால் போதும். இதனுல் நீ பத்திரிகைகளேயும் மற்றைய சஞ்சிகைகளேயும் படிக்கும் போது அவற்றைப் புத்திசாலித் தனத்துடனும், சிரத்தை யுடனும் பின் பற்ற முடியும்.

பொது அறிவு என்ற புத்தகப் பிரதி ஒன்று உனக்கு வேண்டும் என்று நீ விரும்புகிருய். ஆம். உன்னிடம் அப்புத்தகம் இருக்கவேண்டியதுதான். யுத்தம் முடிந்த பிறகு அன்றைய நிகழ்ச்சிவரையில் சேர்ந்து ஓர் புத்தகம் பிரசுரம் ஆகுமென நம்புகின்றேன். அந்தப் பிரதி உனக்குக் கிடைக்கும். இந்தப் புத்தகப் பிரதியெல்லாம் நீ படிக்க முடியாது என்பது வாஸ்தவம்தான். ஆனல் அவ்வப்போது அப்புத்தகங்களே நீ அடிக்கடி புரட்டி உனது ஞானத் தைப் பெருக்கிக்கொள்ளலாம். அது உனக்குப் பயன் தரத்தக்கதாக இருக்கும்.

இந்தப்பொதுவான அறிவு வளர்ச்சி ஒருபுறமிருக்கட்டும். சரித்திரம், மனேதத்துவம், இயற்கைவிஞ்ஞானம்,இவற்றில் விசேஷ அபிமானம் கொண்டு நீ அதிக சிரத்தையோடு படிப்பாய். அந்தமாதிரி சந்தர்ப்பங்கள் எற்படின், அவ் விஷயங்களேப்பற்றிய புத்தகங்களே தீவிரமாகப்படிக்க வேண்டும். பார்க்கப்போனுல் அவ்விஷயங்களில் உனக் குள்ள சிரத்தை படிக்கவே தூண்டும். அதுபோன்ற படிப்பு, குறிப்பான விஷயத்தில் உனக்கு விசேஷ பரிச் சயத்தை ஏற்படுத்தித் தருவதுடன் பொதுவாக உன்னே நல்ல படிப்பாளியாகவும் செய்துவிடும்.

இது தவிர, ஆங்கிலம், தமிழ், சம்ஸ்கிருதம், ஆகியவற்றில் உள்ள உயர்தர புத்தகங்களேப் படிப்பதிலும் ருசி பிறக்

கும்படி நீ செய்துகொள்ளவேண்டும். ஏற்கனவே இப் பழக்கத்தை நீ அபிவிருத்தி செய்துகொண்டுதான் வரு கிருய். நீ படிக்கும் புத்தகங்களைப்பற்றியெல்லாம் என்ன நினைக்கிருயோ எனக்குத் தெரியாது. சாதாரணமான, தற்கால நாவல்கள் எனக்குப் போதும் போதுமென்று ஆகி விட்டன. இதைப் பகிரங்கமாகக் கூறிவிடுகிறேன். அவை குற்றங்கள், அல்லது ஆடவர் பெண்டிர் இவர்களைப்பற்றிய விவரங்கள் தாங்கி வெளிவருகின்றன. இவை என்னைச் சலித்துப்போகச் செய்கின்றன. ரயில்களி லும் அல்லது வேறு வேலை ஒன்றையும் செய்ய முடியாது போகும் சந்தர்ப்பங்களிலும் பொழுதுபோக்க வேண்டிய சமயத்திலும் மூளைக்கு சிரமத்தை அளிக்காமல் இருக்க வேண்டுமானல் அந்தப் புத்தங்களை நீ படிக்கலாம். ஆனல் அப்புத்தகங்கள் உனது புத்தியை ஊக்கமுறும்படி செய் யவோ உள்ளூர இருக்கும் உணர்ச்சியை எழுப்பவோ உதவாது.

ஆங்கிலப் புத்தகங்கள் சம்பந்தப்பட்டவரை ஷேக்ஸ் பியர் எழுதியுள்ள நாடகங்கள் அனைத்தையும் நீ படிக்க வேண்டுமென்பது என் விருப்பம். அவை பெரிய இலக்கிய மாகும். அவற்றில் சில திரும்பத் திரும்ப உற்சாகத்தோடும் ஊக்கத்தோடும் உனக்குப் படிக்கத் தோன்றும். அடுத்த படியாக மில்டன், வேர்ட்ஸ்ஒர்த், டென்னிஸன், ஷெல்லி, கீட்ஸ் இவர்கள் எழுதிய காவியங்களை நீ படிக்கவேண்டும். கோல்ட்ஸ்மித், ஸ்காட், டிக்கன்ஸ், தாக்கரே, மிஸஸ் ஹென்றி உட் இவர்கள் எழுதிய புத்தகங்களில் எவ்வளவு அதிகமாக நீ படிக்க முடியுமோ அவ்வளவையும் நீ படிக்க வேண்டும் என்பது என் ஆசை. இவர்கள் தவிர இன்னும்

பல எழுத்தாளர்களும் உண்டு. அவர்களது புத்தகங்களை யும் நீ படிக்கலாம். மேலே சொன்ன நூல்களையெல்லாம் படித்தால் ஆங்கில இலக்கியத்தின் பெருமை, அதிலுள்ள இனிமை இவற்றைப்பற்றி நீ கொஞ்சம் தெரிந்துகொண்ட தாக இருக்கும்.

இதை எவ்வாறு சமாளிப்பாயோ எனக்குத் தெரியாது. அல்லது உனக்காக நான் அதை எப்படி சமாளிக்கும்படி செய்யப்போகிறேனே அதுவும் தெரியாது. ஆனால், வால் மீகி, காளிதாஸர், பவபூதி இவர்களது நூல்களையெல்லாம் படித்து ஆனந்திக்கப்போதிய சம்ஸ்கிருத ஞானம் உனக்குக் கிட்டும்படி நீ செய்துகொள்ள வேண்டும். ராமாயணம், சாகுந்தலம், உத்தரராம சரித்திரம் இவற்றையெல்லாம் படித்து அனுபவிப்பது நம் வாழ்க்கையில் கிட்டும் மகத் தான பாக்கியம். நியாயத்திற்கும் ஆத்ம உணர்ச்சிப் பெருக்குக்கும் அவை ஓர் விருந்து. அவற்றை நீ அனுபவிப் பாய் என்று எனக்குத் தெரியும். இன்னும் அதிகமான இலக்கிய இரத்தினங்களை உன்னோடும் உனது தாயின் கூடவும் சேர்ந்தாற்போல கூடிய சீக்கிரம் படித்து ஆனந் திக்கும் நாளை நான் எதிர்பார்க்கிறேன். கம்ப ராமா யணத்தை அனுபவிக்கும் அளவிற்கு நீ தமிழ்ப் பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ள வேண்டும். பி. ஆர். ராஜம் ஐயர் எழுதிய கமலாம்பாள் சரிதை, எ. மாதவய்யா எழு திய பத்மாவதி சரித்திரம் இவற்றையும் நீ படிக்க வேண் டும். அவை அற்புதமான நாவல்கள். தற்காலத் தமிழ் நாவல்களைப்பற்றி நான் லட்சியம் செய்யவில்லை. ஆங்கிலத் தில் உள்ள சிலவற்றைப் போலவே அவை மட்டமாக இருக்

கின்றன. ஆனால் நான் மேலே சொன்ன நாவல் இரண்டும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. ஏற்கனவே நான் எழுதியதைப் போல நீ சில தற்காலத் தமிழ் சஞ்சிகைகளையும் சரிவரப் படிக்க வேண்டும்.

துளஸிதாஸ் ராமாயணத்தைப் பின்பற்றி அனுபவிக்க வசதியாக இன்னும் கொஞ்சம் உனக்கு ஹிந்துஸ்தானி பயில அவகாசமும் சந்தர்ப்பமும் கிடைக்குமென நம்பு கின்றேன்.

சரி, உன் வாழ்நாளுக்கே படிக்க வேண்டியவை எவை என் பதற்கு நான் ஓர் திட்டம் போட்டு விட்டேன். வாழ் நாள் எல்லாம் நாம் மாணவராக இருக்க வேண்டும். இதை விட நான் உனக்குக் கடுமையாக ஓர் வேலைத் திட்டத்தை ஏன் கொடுக்கக் கூடாது? நீ ஏன் ஓரிரு புத்தகங்களை எழுத லாகாது? எனது ஆசை இம்மாதிரியிருக்கிறது. அதை நான் பூர்த்தி செய்வது சாத்தியமாகவே இருக்கும் என்பது எனது நம்பிக்கை. உனக்கு இவ்வாசையிருக்குமானால் வெற்றி கிடைக்கும். ஏனெனில், உனக்குச் சின்ன வயது. எப்படியிருப்பினும் உனக்குப் புத்தகங்களில் ஆசை யிருப்பது பெரிய விசேஷம். அதை விட்டுவிடாதே. ஆனால் ஒன்று. உனக்கு வேண்டிய புத்தகங்களைப் பொறுக்கிக் கொள். அவற்றைப் படித்து உன் அறிவை மென்மேலும் பெருக்கிக் கொள்.

கடவுள் உன்னை ஆசிர்வதிப்பாராக!

9-6-'41.

# பந்தய விளையாட்டுக்கள்

என் அன்புள்ள

லக்ஷ்மிக்கு,

இங்கிலாந்திலுள்ள குழந்தைகள், வாலிபர்கள், பெண்கள் ஆகிய எல்லோரும் பலவிதமான பந்தயவிளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர். பலவிதக் காரணங்களால் நம் நாட்டில் அம்மாதிரியான நிலைமை இல்லை. இப்போது இங்கிலே சிறிது அபிவிருத்தியடைந்து வருகிறது. நம் இளைஞர்கள் பந்தய விளையாட்டுக்களில் பெருவாரியாக ஈடுபடுவதற்கு இட மிருக்கிறது.

நமது கிராமங்களில் வாலிபர்கள் சில்லரையான விளை யாட்டுக்களா யிருந்தாலும் அதிமும்முரமாக முனைந்து விளையாடுவார்கள். இவை சில வருஷங்களுக்குமுன்கூட நடந்துகொண்டுதான் வந்தன. ஆற்று மணலிலோ அல்லது மைதானங்களிலோ அவர்கள் விளையாடுவதுண்டு. விளை யாட்டுச் சற்றுமுரட்டுத்தனமாகக்கூட இருக்கும். அவற்றால் செலவில்லை. ஆனால், அவற்றில் கலந்துகொண்டவர்களுக்கு நல்ல தேகாப்பியாசம் செய்ய வசதியிருந்தது. பாடசாலை களில்கூட பையன்கள் கடுமையான விளையாட்டுகளில் ஈடு படுவதுண்டு. பெண்களுக்குக் கோலாட்டம் போன்ற தேகாப்பியாசம் கொடுக்கும் விளையாட்டுகள் இருந்தன. வருஷம் ஒருமுறை நவராத்ரியின் போதோ அல்லது அதற்

குப் பிறகோ பெண்கள், கோஷ்டி சேர்த்துக்கொண்டு பல காரியங்களில் ஈடுபடுவார்கள். இவை அவர்களுக்கு நல்ல தேகப்பயிற்சி அளித்துவந்தன. இதுபோன்ற விளையாட்டு கள் மீண்டும் புத்துயிர் பெறும்படி செய்யப்படும் என்று நம்புகிறேன். நமது சிறுவர் சிறுமியர்களுக்கு விளையாட நிறையச் சந்தர்ப்பம் கிடைக்கும் என்பதும் என் நம்பிக்கை. உன்னுடைய பள்ளிக்கூடத்தில் சில "டிரில்" கள், தேகாப் பியாச வேலைகள் நடக்கின்றன. அவை போதாது; அவை நல்ல பயன் தரத்தக்கதாயும் இல்லை. தேக வலு வளர்ச்சி பெறுவதற்காக நமது வாலிபர்கள், பெண்கள் இவர்களுக் குப் பயிற்சியளிக்க ஒய். எம். ஸி. ஏ., தேகப்பயிற்சிக் கல் லூரியைச் சேர்ந்த மிஸஸ் பக் மிகவும் உன்னதமான சேவை செய்கிறார். அவர் நடத்தும் வகுப்புகள் சிலவற்றிற்கு நீ போகவேண்டுமென்பது என் எண்ணம். வெளியேபோய் விளையாடக்கூடிய பந்தய விளையாட்டுக்கள் சிலவற்றை நீ கற்றுக்கொள்ள வேண்டுமென்பதும் என் விருப்பம்.

பந்தய விளையாட்டுக்கள் முக்கியமானதென்று நான் எண் ணுகிறேன். கிரிக்கெட், ஹாக்கி, புட்பால் முதலிய விளை யாட்டுக்கள் பெண்களுக்குத் தகுதியற்றவை. ஆனால், டென்னிஸ், பாட்மின்டன். வாலிபால் முதலியவை போன்ற விளையாட்டுகளில் நீ ஈடுபடலாம். நம் நாட்டுப் பெண்கள் இவ்விளையாட்டுகளில் கலந்துகொள்ள வேண்டுமென்று நான் கருதுகிறேன்.

தேகாப்பியாச விளையாட்டுகள் மூலம் நல்ல காற்று கிடைக்கிறது; சந்தோஷமும் ஏற்படுகிறது. இதற்காக மட்டுமில்லாமல் பந்தய விளையாட்டில் கலந்து கொள்வ

தால் கிட்டக்கூடிய சில தன்மைகள் அபிவிருத்தியடைய வேண்டும். பெண்ணாயினும், ஆணாயினும் இவ்விஷயத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்பது என் அவா. நமது நாட்டில் கோஷ்டியாக உணர்ச்சி கொண்டு காரியங்கள் செய்ய வேண்டும் என்ற மனோபாவம் இல்லை. தனித் தனியாகப் பொறுக்கிப் பார்த்தால் நாமெல்லாம் புத்திசாலிகளாகத்தான் இருக்கிறோம். ஆனால் ஒன்று சேர்ந்து காரியங்கள் செய்ய முடியவில்லை. இதைச் செய்வதற்கு நமது கட்சியை நன்கு நிலை பெறும்படிச் செய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். தனிப்பட்ட முறையில் வெற்றி வேண்டுமென்ற ஆசையை அடக்கிக்கொண்டு தன்னைச் சேர்ந்த கோஷ்டிக்கே வெற்றி சித்திக்கவேண்டும் என்ற விருப்பம் மேலோங்கி வளரச்செய்ய வேண்டும். தனி முறையில் வெற்றி பெறவேண்டும் என்ற ஆசைக்கும், கோஷ்டிக்கே வெற்றி கிட்டவேண்டுமென்ற உணர்ச்சிக்கும் வித்தியாசம் உண்டு. அதற்குத் தனியாகச் சில தன்மைகள் வேண்டும். அவற்றை வியாக்யானம் செய்து எழுதுவது சுலபமன்று. கட்சியாகச் சேர்ந்து ஒன்றுபட்டு விளையாடும் போது அந்த விஷயம் என்னவென்பது உனக்குப் புலப்படும். இங்கிலீஷ்காரர்கள் கோஷ்டி கோஷ்யாக நின்று கிரிக்கெட் பந்தயம் ஆடுகிறார்கள். அதை நீ பார்த்தால் கோஷடிக்காக மொத்தமாகச் சேர்ந்து எல்லோரும் உணர்ச்சிகொண்டு விளையாடுவதைக் கவனிக்கலாம். இந்தியக் கிரிக்கெட்டு விளையாட்டு இன்னும் அந்த நிலைமைக்கு வரவில்லை. திறமையுடன் பந்தை நன்கு அடிப்பவர்களோ (Batsmen) பந்து வீசுபவர்களோ (Bowlers) நம் நாட்டில் இல்லாதது அதற்குக் காரணமல்ல. இன்னும் நாம் போதிய

படி கோஷ்டியோடு சேர்ந்து ஒன்றுப்பட்டுச் செய்யவேண்டு மென்ற உணர்ச்சியைப் பெருக்கிக்கொள்ளவில்லை. அது தான் காரணம்.

இரண்டாவதாக ஒரு விஷயம். கட்டுப்பாடு முறையுடன் நடக்கும் பந்தய விளையாட்டுகளால் ஒரு அனுகூலம். அதில் கலந்து கொள்பவருக்குக் கோஷ்டியின் தலைவருக்கு முற்றி லும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்ற தன்மை வளர்ச்சி பெறுகிறது. கண்மூடித்தனமாக யாருக்கும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்பதை நான் ஆதரிக்காதவன். இது உனக்குத் தெரிந்த விஷயம். வெற்றிகரமாக, கட்டுப் பாடாக வேலைகளைச் செய்வதற்கான ஒழுங்குமுறை நம் நாட்டில் போதியபடி வளரவில்லை. நல்ல முறையில் பந்தய விளையாட்டுகளுக்கு ஏற்பாடு செய்து நடத்தினால் நம் மிடையே ஒழுங்கு முறை பெருக உதவியாக இருக்கும். "காரணத்தைக் கேட்கக்கூடாது. செய் என்றால் செய். அதுதான் உன் வேலை" என்று சொல்லும் கோட்பாட்டை நான் சொல்லவில்லை. ஆனால், உனக்குத் தலைவராக ஒரு வரைப் பொறுக்கிவிட்டுப் பந்தய விளையாட்டில் ஈடுபட் டிருக்கும்போது நீ அவருக்கு எதிர் பேசாமல் கீழ்ப்படிந்தே நடக்கவேண்டும். பந்தயம் முடிந்த பின்னர் நீயும் உன் நண்பர்களும் தலைவரிடம் அதிருப்தி கொள்வதாயிருந்தால் அவரை மாற்றிவிட்டு வேறு தலைவரைப் பொறுக்கிக் கொள்ளுங்கள். ஆனால், அவர் தலைவராயிருக்கும் வரை நீங்கள் அவருக்குப் பணிந்துதான் நடக்கவேண்டும். பந்தய விளையாட்டுக்களில் நீ கலந்துகொண்டால் இது உனக்குத் தெரிந்துவிடும்.

கடைசியாக ஒன்று. எல்லா விளையாட்டுகளிலும் சந்தர்ப்பம் என்று ஒன்றுண்டு. நல்ல கட்சி ஜெயிக்கவேண்டுமென்பதுதான் எல்லா நியாய சித்தமுள்ளவர்களின் விருப்பமாயிருக்கும். ஆனால் சிறந்த கட்சியே எப்போதும் ஜெயித்துக்கொண்டிருப்பதில்லை. எந்தக் கட்சி சிறந்தது என்று எப்போதுமே திட்டமாகச் சொல்லிவிடுவதும் சுலபமல்ல. நீ பந்தய விளையாட்டுக்களில் கலந்து கொள்ளும் போது நீயும் உன் கட்சியும் ஜெயித்தாலும் ஜெயிக்கலாம்; அல்லது தோற்கவும் கூடும். அகம்பாவமின்றி வெற்றி பெறக் கற்றுக்கொள்ளவேண்டும். தோற்றாலும் பொறுமை கூடாது. இது மிகவும் மகத்தான தன்மை. மேற்படி பந்தய விளையாட்டுக்களில்எல்லாம் தோல்வி பெற்ற கட்சியின் தலைவரோ அல்லது விளையாட்டில் தோற்ற நபரோ வெற்றி பெற்ற கட்சித் தலைவரை முதன் முதலில் போய் பாராட்டுவார். இது ரொம்ப சரியான காரியம். நீ ஜெயித்தாலும் எப்போதும் உனக்கே வெற்றி என்று நினைக்காமல் மற்றவர்களுக்கும் வெற்றி கிடைக்கும் என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். நீ ஏதாவது பந்தய விளையாட்டுக்களில் பயிற்சி பெற்றுத் திறம்பட விளையாடு.

பிறகு எல்லாம் உனக்குச் சௌகர்யமாயிருக்கும்.

*10-6-'41.*

# கடவுளும் மதமும்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

ஏதாவது முக்கியமான விஷயத்தைப் பற்றி எழுதும்படி நேற்று என்னிடம் நீ தெரிவித்தாய். இதோ எழுதுகிறேன். கடவுள், மதம் இரண்டையும்விட முக்கியமான விஷயங்கள் என்ன இருக்கின்றன? நீ ரொம்பச் சின்னப் பெண். சாதாரணமாகப் பார்த்தால் இந்தக் கடுமையான விஷயங்களைப் பற்றி நான் உனக்கு எழுதியிருக்கமாட்டேன். ஆனால் நீ எழுத வேண்டுமென்று விரும்புவதால் நான் அவை பற்றி எழுதுகிறேன்.

கடவுள் என்று ஒருவருண்டா? அப்படியானால் அவருடைய குணாதிசயங்கள் எவை? அவரது கடமைகள் என்ன? அவர் சர்வத்தையும் அறிந்தவரா? சர்வ வல்லமை படைத்தவரா? எங்கும் நிறைந்தவரா? கடவுளிருப்பது உண்மையானால் நாட்டில் ஏன் இவ்வளவு கேடுகளும் துன்பங்களும் இருக்க வேண்டும்? நரகம் என்றும், சுவர்க்கம் என்றும்இருக்கின்றனவா? ஆத்மா என்று ஒன்றிருக்கிறதா? மரணத்துக்குப் பின்பும் ஆத்மா இருக்கிறதா? அப்படியானல் எந்த உருவில்? மனிதனுடைய முடிவு என்ன?

சாதாரண மனிதர்களின் சொற்களால் இவற்றிற்கும் இவை போன்ற இதர கேள்விகளுக்கும் பதில் சொல்வதற்

கில்லை. ஆண்டவனைப் பற்றியும், பிரும்மத்தைப் பற்றியும் உப நிஷத்துகள் பின் வருமாறு தெரிவிக்கின்றன :—“यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सः”(மனோவாக்குக்கெட்டாதவன்) நிரூபிக்க முடியாத சந்தர்ப்பத்தில் நாம் நம்பிக்கை கொள்ளத்தான் முடியும்.

நம்மையெல்லாம் ஆட்டிவைக்கும் தெய்வீக சக்தியொன்று உண்டு ; கடவுள் ஒருவர் உண்டு என்று நான் நம்புகிறேன். கடவுளின் தன்மை, புகழ் இவை பற்றி எனக்குத் திட்டமான அபிப்ராயம் எதுவும் இல்லை. நம் நாட்டில் அநேகம் மகான்களும் உத்தமர்களும் பல்லாண்டுகளாக, ஏன் இன்று கூடக் கடவுளைப்பற்றி அப்படிச் சொல்லியிருக்கின்றனர். ஆண்டவனை உணர்ந்தவர்களைப்போல் அவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்தியிருக்கின்றனர் ; நடத்தியும் வருகின்றனர் ; நாம் கடவுளை அடைய முடியுமா? நமது யோகிகள் “ஆம் முடியும்” என்று கூறுகின்றனர். அவரை அடைய வேண்டுமானால் அதற்கு அவசியமான ஒழுங்குமுறைப்படி நடக்க வேண்டும்.

இன்னொரு தேசத்துக்கு நாம் போகவேண்டுமென்றால் அதற்காகவுள்ள மார்க்கத்தின்படியே போகவேண்டும். ஆண்டவனை அடைய நாம் விரும்பினால் கடவுளை அடைந்த முனிவர்களது உபதேசத்தைப் பின்பற்றி அவர்கள் மார்க்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இதைச் செய்யாமல் நாஸ்திகவாதம் புரிவதற்கு நாம் அருகதையில்லை. எப்படியிருப்பினும் கடவுள் உண்டு என்று நான் உணர்ச்சி பூர்வமாக உணருகிறேன். நீ என்ன நினைக்கிறாய்?

நம் நாட்டில் மகத்தான மதஸ்தாபகர்களும், ரிஷிகளும் ஆண்டவன் சாஸ்வதமாயிருக்கிறார் என்று பாட்டுகளாகவும், வசனமாகவும் வர்ணித்திருப்பதைத் தெரியாமல் செய்ததாகவோ அல்லது ஜனங்களைத் தவறான பாதையில் திருப்புவதற்காகச் செய்ததாகவோ நாம் நினைக்க முடியுமா? இதை நானே நம்பவில்லை. உலகத்தின் உத்தமர்கள் எல்லோரும் கடவுள் இருக்கிறார் என்று தான் தெரிவித்திருக்கின்றனர்.

கடவுள் நல்லவர்; கருணையுடையவர்; சர்வத்தையும் அறிந்தவர்; எங்கும் நிறைந்தவர். சர்வ மதங்களும் இந்த உண்மையைத் தெரிவிக்கின்றன. கடவுள் நம்மையும் நல்லவர்களாக இருக்கவே விரும்புகிறார். உலகத்தில் ஏன் இந்தத் துன்பங்களும், கேடுகளும் இருக்க வேண்டுமென்ற கேள்விக்குப் பதில் சொல்வது சுலபமல்ல. மனிதன் சந்தர்ப்பங்களுக்கு இலக்கான ஓர் கருவியே. சுயேச்சையாக முயற்சித்து ஒரு காரியத்தைச் சாதிக்க முடியாது என்று கூறுவதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. நமது மதம் அப்படிப் போதிக்கவில்லை. பார்க்கப் போனால் மனிதன் சுயேச்சையாக எதையும் செய்யத் துணிவு கொள்ளலாம். பெரும்பாலான மக்கள் அவரவர்கள் செய்த காரியங்களுக்கு ஏற்பத்தகுந்த பலனை அனுபவிக்கிறார்கள். கடைசியில் நல்லவர்களாக இருப்பவர்கள் சுகமாக வாழ்கிறார்கள். கெட்டவர்களாக இருப்பவர்களுக்குச் சுகவாழ்வில்லை. ஆனால் இதிலும் விலக்குகள் இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். கெட்டவர்கள் செழித்துக் கொழிக்கிறார்கள்: உண்மையில் நல்லவர்களாயிருப்பவர்கள் அவ

திப்படுகிருர்கள். இதற்கு நமது மதம் என்ன சொல்லு கிறது தெரியுமா? இது பூர்வ ஜன்ம கர்மவினை என்று கூறுகிறது. இப் பதில் பூர்ண திருப்தி அளிக்காமலிருக் கலாம். ஆனால் அதுவும் ஓரளவு தக்க சமாதானமாகும். இப்போது நடக்கிறதே இதைப் போன்ற யுத்தங்கள், பூகம் பங்கள், வெள்ளங்கள், தீ விபத்துகள், முதலியவை காரண மாகக் கடவுளிடம் மனிதனுக்குள்ள நம்பிக்கை தளர்ந்து சந்தேகம் எழுகிறது. இந்தக் கேள்விகளைப் பற்றி நான் ஆராய விரும்பவில்லை. இவை தொந்தரவு பிடித்த காரி யங்களாகும். கடவுள் இல்லையென்று நாம் முடிவு செய்து விடுவது சரியா? நான் அப்படிச் சொல்லமாட்டேன். ஒரு எல்லைக்குட்பட்ட நமது புத்தி, இவற்றையெல்லாம் தத்ரூப மாகவுள்ள நிலைமையில் உணர்ந்தறிய முடியாது. நாம் படித்தறிந்து உணரும்போது ஒருக்கால் இவை பற்றித் தெரிந்து கொள்ளக்கூடும்.

தெய்வபக்தி இருப்பது நமது வாழ்வுக்குப் பெரிய உதவி, ஆறுதல், என்பதை என்போலவே நீயும் ஒப்புக்கொள்வாய் என்று நம்புகிறேன். சாதாரணமாகச் சம்பிரதாயத்தை ஒட்டிய மதம், அதை அனுசரித்த கோட்பாடுகள் இவற் றைப்பற்றி நான் சொல்லவில்லை. ஆண்டவனிடம் நிரந்தர மான பக்தி இருப்பது நாம் சிறப்பாக வாழ்வதற்கு உதவி யாகும், என்று சுவாமி விவேகாநந்தர் சொன்னார். அந்த அபிப்ராயப்படி நானும் சொல்லுகிறேன்.

நல்லவர்கள் சுவர்க்கத்துக்கும், கெட்டவர்கள் நரகத் துக்கும் போகிருர்கள். சுர்வக்கம்-நரகம் என்ற இரண்டும் இருக்கின்றனவா? இறுதியில் தீர்ப்புப்பெற ஓர் தின முண்டா? தொடர்ச்சியாகப் பிறவிகளும், மறுபிறவிகளும்

உண்டா? இவையெல்லாம் கஷ்டமான கேள்விகள். திட்டமாக அவற்றிற்கு நான் பதில் சொல்ல முடியவில்லை.

மனிதனின் இறுதியான கதி என்ன: மனிதன் கடைசியில் பரப்பிரும்மத்துடன் ஐக்யமாகிவிடுகிறான் என்பதும் நிபந்தனையில்லாத வாழ்வை அடைகிறான் என்பதும் அத்வைதக் கோட்பாடு. அதை நான் நம்புகிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்ரீ ரமண மஹரிஷி முதலிய பலர் ஜீவன் முக்தர்களாயிருக்கின்றனர். இந்த நிலையை அடைவதற்கு வழி என்ன?

இதில் மனிதன் பல ஜன்மங்கள் எடுக்க நேருகிறதா? அப்படியானால் எந்த முறைப்படி?

இக் கேள்விகளெல்லாம் எனக்கு ஆழம் நிறைந்தவையாகத் தோன்றுகின்றன. நாம் நல்ல வாழ்க்கை நடத்தி, புலன்களைக் கட்டுப்படுத்திக்கொண்டு பிறருக்கு நன்மை தவிர தீமை செய்யாமலிருந்தால் நாம் மோக்ஷத்தை அடையலாம் என்று திண்ணமாக நம்புகிறேன். என்னுடைய அனுஷ்டான மதம் இதுதான்:—

"परोपकारः पुण्याय पापाय परपीडनम्"

பிறருக்கு உபகாரம் செய்வது புண்யம். தீமை செய்வது பாவம்.

இதையே நீயும் அனுஷ்டிக்க வேண்டும். பிறகு நாம் பக்தி, நம்பிக்கை இவற்றுடன் வாழ்க்கையை நடத்தலாம்.

பகவான் பின்வருமாறு தெரிவிக்கிறார்:—

"नहि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति।"

"நன்மை செய்பவனுக்கு கெடுதி ஒரு நாளும் நேராது."

*11-6-'41.*

# உண்மையான மதபக்தி

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

என்னுடைய முந்திய கடிதத்தில் கடவுளைப் பற்றியும், மதத்தைக் குறித்தும் எழுதியிருந்தேன். அத்துடன் கடவுள், மதம் இவற்றின் நல்ல அம்சங்கள், முக்கியமான தத்துவம் ஆகியவை பற்றியும் அதில் உனக்குத் தெரிவித்திருந்தேன். ஆனால் கடவுளின் பெயராலும், மதத்தின் பெயராலும் சமீப காலம் வரையில் அநேகம் குற்றங்கள் இழைக்கப்பட்டு வந்திருக்கின்றன. இது விசித்திரம் தான்.

தெய்வ பக்தி, மதபக்தி இவற்றின் காரணமாக ஜனங்கள் சுகமாக இருக்கவேண்டும் என்றும், அவர்களிடம் குரோதமோ, கொடுமையோ இல்லாமல் இருக்க வேண்டுமென்றும், மனித வர்க்கத்தையும், பிராணிகளையும் அன்புடன் பராமரித்து எல்லோருக்கும் நன்மை செய்ய வேண்டுமென்றும் நீயும், நானும் எண்ணவேண்டும்.

எல்லா மதங்களும் போதிக்கும் உண்மை உபதேசம் இது.

மனிதவர்க்கத்திடம் அன்பு பூண்டு சேவை செய்பவர்கள் கடவுளிடம் நல்லன்பு செலுத்துபவராவர். அபுபென் ஆதத்தின் கதை உனக்குத் தெரிந்ததுதான். உண்மையாக மதத்தைப் பின்பற்றி அனுஷ்டிப்பதென்பது அநேகமாக

மனித சேவை மூலமே உருவடைகிறது. தரித்திர நாரா யணனுக்குச் சேவை புரிவதே கடவுளுக்கு உண்மையில் பக்தி பண்ணுவதாகும் என்ற கொள்கையை அனுசரித்தே நமது நாட்டின் பிரபல ரிஷிகளும், சன்யாசிகளும் நடந் திருக்கின்றனர். ராமகிருஷ்ண மிஷன் இதில் மிகவும் சிறந்த தாகும். கிருஸ்துவர்களும் முக்கியமாக கத்தோலிக்க பாதிரி களும், சன்யாசிகளும் தூய வாழ்க்கையைக் கைக்கொண்டு உயர்ந்த சிந்தனையுடன் தன்னலமின்றி எல்லோருக்கும் சேவை செய்கின்றனர். முக்கியமாக அவர்களெல்லாம் ஏழைகள், அறியாதவர்கள், நோயாளிகள் இவர்களுக்குத் தொண்டு புரிகின்றனர். மதத்தின் உத்தமமான போக் குக்கு இவை சிறந்த ருசுக்கள்.

இந்த மாதிரியான விஷயங்களுக்கு நேர்மாருகச் சரித் திரத்தில் நாம் படித்திருக்கிருேமல்லவா? பல்லாண்டு களாக, ஒரு மதத்தைப் பின்பற்றுபவர்களுக்கும், இன்னெரு மதத்தைப் பின்பற்றுவோருக்கும் அடிக்கடி கையில் வாளேந்தியும், தீயைக்கொண்டும் சதா சண்டை நடந்த தாகப் படிக்க வில்லையா? ஏன் ஒரே மதத்தைச் சேர்ந்தவர் களுக்குள் வகுப்பு வகுப்பாகப் பிரிவினை! ஒருவரை யொரு வர் எதிர்த்துச் சண்டையிட்டுத் தீயிட்டுக் கொளுத்திக் கொலை புரிந்திருக்கின்றனர். இங்கிலாந்தில் கத்தோலிக்கர் களுக்கும்-பிராட்டஸ்டெண்டுகளுக்கும் இது மாதிரியெல் லாம் நடந்திருக்கின்றன!

ஸ்பெயினில் நடந்த மத விசாரணை பற்றியும், அதை அடுத்து நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றியும் நாம் அறிவோம். கிருஸ்துவமதத்தில் நம்பிக்கை கொள்ளாதவர்களை அம்

மதத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று பலாத்காரம் செய்து நடந்த கொடிய அக்கிரமங்கள் பல. இவற்றைப் பார்த்தால் இந்த ஜனங்களெல்லாம் மனிதர்கள்தானு! என்று திகைக்கும்படி இருக்கிறது. பழையகாலத்தில் கிருஸ்தவர்கள் சித்திரவதைக்காளானதைப் படிக்க மனம் சகிக்கவில்லே.

நம் நாட்டையும் எடுத்துக்கொள்வோம். சில முஸ்லீம் தீவிரவாதிகள் ஹிந்துக்களேக் கத்தி முனேயில் இஸ்லாத்துக்கு மாறும்படி செய்ய முயற்சி செய்திருக்கின்றனர். முஸ்லீம்களுக்குள்ளேயே, ஷியாக்களும் ஸுன்னிகளும் சண்டை செய்கிருர்கள். இன்று ஐக்கிய மாகாணத்திலே நடப்பது இதற்கு ஓர் உதாரணம்.

தென்னிந்தியாவில் மதத்தின் பெயரால் ஜெயினர்களும் சைவர்களும் ஒருவரையொருவர் எதிர்த்துக் கொன்று மடிந்திருக்கிருர்கள். இது தவிர சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் அடிக்கடி சண்டை. சாத்விகமானவர்களாதலின் அவர்கள் தங்கள் சண்டையில் ஒருவரையொருவர் கொல்லவில்லே, எரிக்கவுமில்லே. ஆனுல் கண்யமுள்ள எவரும் பேசாத முறையில் மகா மட்டமாக ஒருவரையொருவர் திட்டிக்கொண்டிருக்கின்றனர். இன்று கூடப் பார்க்கலாம். வைஷ்ணவர்கள் ஆலயங்களில் வட கலேயார்களுக்கும்-தென் கலேயார்களுக்கும் கடவுளேச் சாக்கிட்டுத் தகராறுகள்; ஒருவருக்கொருவர் குஸ்தி—இவை கோர்ட்டுகள், போலீஸ் முதலிய இடங்கள் வரையில் போய் விடுகின்றன! மத சம்மந்தமான தங்கள் சண்டை பூசல்களே ஹிந்து மதத்தைச் சேராத ஜட்ஜ்கள் மாஜிஸ்ட்ரேட்டுகள்,போலீஸ்

காரர்கள் ஆகியோர் தீர்த்து வைப்பதில் அவர்களுக்குத் திருப்தி.

மதத்தில் தவருன பக்தி கொண்டு செய்யக்கூடிய அசம்பாவிதங்களை நான் தொகுத்துக் கூறியிருக்கிறேன். இதனுல் என்ன ஏற்படுகிறது? மதம் கெட்டது என்பதில்லை. ஆனுல் நல்ல விஷயத்தைக் கெட்டவர்கள் பாழாக்கிவிடுகிருர்கள் என்பதுதான் முடிவு. நல்ல காலம். இந்தப் பழைய சீர்கேடான நிலைமை மாறிவருகிறதென்றே எனக்குத் தோன்றுகிறது.

மதம் என்பது ஒவ்வொருவரும் வழிபடும் தெய்வத்துக்கும் அவர்களுக்கும் உள்ள சொந்த விஷயம். இதில் யாரும் தலையிட உரிமை இல்லை என்று ஜனங்கள் உணர ஆரம்பித்திருக்கிருர்கள்.

சத்தியம் என்பது குறிப்பாக எந்த ஒரு மதத்துக்கும் ஏகபோக உரிமையல்ல என்பதை நாம் கொஞ்சம் கொஞ்சமாக உணர்ந்தே வருகிறோம். மற்றவர்கள் தங்கள் மதத்தில் நம்பிக்கை கொண்டு அதைப்பற்றி உபதேசிக்கும்படி அனுமதிப்பது விவேகம். நாம் நம் மதவிஷயத்தில் கொண்டாடும் உரிமையைப் போலவே மற்றவர்களுக்கும் அவ்வுரிமை இருக்க வேண்டுமல்லவா? இதைப் பொதுஜன ஒழுங்கு, சீலம் இவற்றை அனுசரித்தே செய்ய வேண்டும்.

ஆனுல் பேசாமலிருந்து நடவடிக்கையில் முனையாமல் இருந்துவரும் மனோபாவம் கூடாது. தெளிந்த நாகரிகத்துக்கு மதம் ஒத்தபடியிருக்கிறது என்று நாம் சொல்ல வேண்டுமாயின் அது திட்டமாக உருவாக வேண்டும்.

கிருஷ்ணபரமாத்மா பின் வருமாறு சொல்லுகிறார்:—
"யார் யார் எப்படி என்னை எண்ணி வழிபடுகிறார்களோ அந்த உருவில் நான் தோன்றுகிறேன்"

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**

சகிப்புத்தன்மை என்பதன் தாத்பர்யம் இதுதான். அமைதி, நியாயம், நாகரிகம், மனித சமுதாயம் இவற்றிற்கெல்லாம் மதம் ஓர் வன்மையுள்ள சக்தியாக இருக்கிறது; அப்படி இருக்கவும் முடியும். ஆனால் அதைப் பரந்த திருஷ்டியோடும், சகிப்புத் தன்மையோடும் அமைக்க வேண்டும்.

ஹிந்து மதம் தீவிரமான உத்வேகமுள்ள மதமாகி விடுமா என்று நேற்று நீ என்னைக்கேட்டாய். ஆகாது என்று பதில் சொன்னேன் நான். இல்லையென்று நான் சொன்னது மதமாற்றத்துக்குத் தான்பொருந்தும். ஹிந்துமதம் சகிப்புத் தன்மையுடன் விளங்கவேண்டும். அதுதான் அதன் உன்னதமான அம்சம்.

*12-6-'41.*

# ஹிந்து மதம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

மதங்களின் பொதுப்படையான அம்சங்கள் ஒருபுறமிருக்கட்டும். நீயும், நானும் ஹிந்து மதத்தின் எதிர்காலம்பற்றி சிரத்தை கொண்டிருக்கிறோம். உலகத்திலேயே ஹிந்து மதம் மிகப்புராதனமானது. ஜெயின மதம், சீக்கியர் மதம் இவற்றைப் போலவே ஹிந்து மதமும் ஒரு வகையில் புத்த மதத்தின் சாயை எனலாம். பிரும்ம சமாஜம், ஆரிய சமாஜம் ஆகியவை ஹிந்து மதத்தைத் தழுவி இயக்கங்களில் ஈடுபட்டவையாகும். ஹிந்து மதம் பெரும்பாலும் இந்தியாவுக்குள்ளேயே வியாபித்திருந்தது. ஆனால் ஒரு காலத்தில் ஹிந்து மிஷனரிகளைச் சேர்ந்தவர்கள் இலங்கை, ஜாவா, மலேயா, பர்மா முதலிய இடங்களுக்குச் சென்றிருந்தார்கள்.

நம்பிக்கையின் காரணமாக, நமது நாட்டில் ஹிந்து மதத்தை ஒன்றுமறியாத கிராமவாசிகள் அனுஷ்டிக்கின்றனர். விஷயமறிந்தவர்கள், அத்வைத சித்தாந்தப்படியோ அல்லது விசிஷ்டாத்வைத முறைப்படியோ அதை அனுஷ்டிக்கிறார்கள். ஹிந்து மதத்தின் எதிர்காலம் செவ்வையாக விளங்கவேண்டுமாயின் நாம் ஓர் பெரிய சீர்திருத்த இயக்கத்தை உருவாக்க வேண்டும்.

நாமெல்லோரும் அநேகமாக சம்பிரதாய நம்பிக்கை கொண்டிருக்கிறோம். ஆனால் இவற்றிற்கு எங்கேயாவது ஓரிடத்தில் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். உதாரணமாக நமது ஆலயங்களில் மிருகபலியிடுவதை ஒழிக்க வேண்டுமென்பது என் விருப்பம். கல்கத்தாவில் காளி கட்டத்தில் மிருகபலி இடப்படுகிறது. இது போன்றவைகளை நிறுத்த வேண்டும். கருணாநிதியாகவுள்ள தெய்வம் இதுபோன்ற பலிகளை ஏற்காது. மிருகபலி கூடாது என்பது நம் தென்னிந்திய ஆலயங்களுக்கும் பொருந்தும். சில யாத்ரீகர்கள் பிரார்த்தனை செய்து கொள்கிறார்கள். அதாவது உடம்பிலும், நாக்கிலும் அலகு குத்திக்கொள்கிறார்கள்; தீ மிதிப்பதாக வேண்டிக்கொள்கிறார்கள். இவை போன்ற தேகத்தில் ரணம் ஏற்படும்படியான பிரார்த்தனைகள் நிற்க வேண்டும். மனித வர்க்கம் சிரமப்படுவது எந்தத் தெய்வத்துக்கும் ப்ரீதியல்ல. நமது கண்யமான உணர்ச்சிக்கும், மனித வர்க்கத்துக்கும் இவை விரோதம்.

நமது ஆலயங்கள் உண்மையில் தெய்வாம்சமுள்ள இடங்களாக இருக்கும்படி செய்வது முக்கியம். இப்போதிருப்பதை விட அவை இன்னும் சுத்தமாக இருக்க வேண்டும். தென்னிந்தியாவின் பல கோயில்கள் பாழாகிக் கிடக்கின்றன. நிறைந்த சொத்துள்ள தேவஸ்தானங்கள் பல இருக்கின்றன. அவை சரியாகப் பரிபாலிக்கப்படவில்லை; தக்க காரியங்களுக்குச் செலவிடப் படவுமில்லை. ஹிந்துமதப் பரிபாலன போர்டார் நிலைமையை அபிவிருத்தி செய்யவில்லை. அந்தந்த இடங்களில் பொது விஷயங்களில் ஊக்கம் கொண்ட பிரதி நிதிகளின் ஒத்துழைப்புடன் சர்க்

கார் மேற்படி தேவஸ்தானங்களின் நிர்வாகத்தை ஏற்க வேண்டும்; ஆலயங்களைப் புதிதாக்கி, சுத்தமாக இருக்கும் படி செய்ய வேண்டும்.

ஆலயங்களை வெளியே புதிதாக்கி, சுத்தமாக்குவது மட்டும் போதாது. உண்மையில் ஆசார சீலர்களாகவும், பயிற்சியும் அனுபவமும் கூடியவர்களாகவும் உள்ள அர்ச்சகர்களைக் கொண்டு ஆலயங்களில் பூஜை செய்யச் சொல்ல வேண்டும். அவர்களுக்கெல்லாம் போதுமானபடி சம்பளம் தரவேண்டும். உண்மையான யாத்ரீகர்கள் தவிர வேறு யாருக்கும் இலவசமாக உணவுகொடுக்கக்கூடாது. இந்த ஏற்பாட்டின் மூலம் மிஞ்சும் பணத்தைத் தகுதியுள்ள மாணவர்களுக்கு—அவர்கள் எம்மதத்தினராயினும் சரி—வேதங்கள், ஆகமங்கள், தேவாரம் இவற்றைப் போதிப்பதற்காகச் செலவிடவேண்டும். பூஜைகளையும் உற்சவங்களையும் சரிவர, பக்தி சிரத்தையோடு நடத்தவேண்டும். ஹிந்து மதத்தையொட்டி நடப்பவர்கள் இவ்வாலயங்களுக்கு வர வசதி இருக்கவேண்டும். மத விவகாரங்களிலெல்லாம் நிர்ப்பந்தம் கூடாதென்பதை ஒப்புக்கொள்கிறேன். நல்ல பிரசாரம் செய்தால் அநேகமாக எல்லா ஹிந்துக்களும் இந்த முக்கிய சீர்திருத்தத்தைச் செய்ய சம்மதிப்பார்கள் என்றே நம்புகிறேன்.

ஆலயங்களில் பக்தர்களிடையே வித்தியாசம் கூடாது. அதாவது பிராமணர், பிராமணரல்லாதார் என்பது போன்ற வேற்றுமைகள் கூடாது.

கிருஸ்துவ மதத்தினரும், முஸ்லிம்களும் தங்கள் தங்கள் மதத்தினரோடு ஒன்ருகச் சேர்ந்து தெய்வ வழிபாடு நடத்து

கின்றனர். இவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் ஹிந்து மதத்தைச் சேர்ந்த நாம் வெகுவாகப் பின்னணியில் இருப்ப தாகவே தோன்றுகிறது. நம்முடைய ஆலயங்களிலெல் லாம் இப்படி நடப்பதில்லே, ஆனால் ஒன்று. தற்காலத்தில் பஜனை கோஷ்டிகள் நடத்தப்படுகின்றன. இது நல்லது தான். குறைந்தது வாரம் ஒரு முறையாவது நாம் நமது ஆலயங்களில் ஒன்றுகக்கூடி கடவுளைத் தரிசிக்க வேண்டும்; பொதுவாக ஓர் பிரார்த்தனையென வைத்துக்கொள்ள வேண்டும்; ஏதாவது ஒரு மத விஷயமான உபந்நியாசத் தைச் செய்த பிறகு பகவானுக்கு ஆரத்தி, எடுக்க வேண் டும். இதற்கு நாம் ஏதாவது ஒரு ஏற்பாடு செய்ய வேண்டும் இதனால் ஹிந்துக்களிடையே ஒற்றுமை பெருக வேண்டு மென்ற தூண்டுதல் பிறக்கும்; ஜாதித் தடைகள், கட்டுப் பாடுகள் மறையும். ஹிந்துக்கள் தலை நிமிர்ந்து வாழலாம். இன்றைய நிலைமைக்கு இது அத்தியாவசியம். ஹிந்துக்களை யும், ஹிந்து மதத்தையும் தாக்குவதை அஹிம்ஸா பூர்வ வாகவோ அல்லது பலாத்காரமாகவோ எதிர்த்து நின்று பாது காக்கவும் முடியும்.

இந்தியாவுக்கு வெளியே ஹிந்து மதத்தின் செய்தியைப் பரப்புவது ஒரு புறமிருக்கட்டும். நமது அரும்பெரும் ஆசார்யர்களைக் கொண்டு நம்மக்களுக்கே ஹிந்து மதத்தின் சிறந்த உண்மைத் தத்துவங்களை உபதேசிக்க வேண்டுமென் பது என் அவா. நமது மடாதிபதிகளில் சிலர் இத்துறையில் கொஞ்சம் சேவை செய்து வருகின்றனர். ஆனால் இன்னும் இதைவிட அதிகமாகவும், தொடர்ச்சியான ஏற் பாட்டின்படியும் முக்கியமாக ஹரிஜனங்களிடையே இது பற்றிப் பிரசாரம் செய்வதவசியம். அவர்களும் நம்மைப்

போல நல்ல ஹிந்துக்கள் தான். எனவே நாம் அவர்களுக்கு நம்மாலான சேவையைச் செய்ய வேண்டும்.

ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளும் நாம் ஓர் கோட்பாட்டை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்; அதன் படி நடக்கவும் வேண்டும்.

"மரத்தை அது தரும் பழத்தைக்கொண்டே மதிக்க வேண்டும்."

ஹிந்துக்களாகிய நாம் பரிசுத்தமான தூய வாழ்வு வாழ வேண்டும்; தர்ம சிந்தனையுடனும் சகிப்புத்தன்மையுடனும் இருத்தல் வேண்டும். நமது வாழ்க்கை, சேவை இவற்றின் மூலம் கடவுளிடம் நமக்குள்ள அசையாத பக்தியை நாம் நிரூபிக்க வேண்டும். நமது குழந்தைகளுக்கும் அம்மாதிரியான பழக்கம் படியும்படி செய்யவேண்டும். இதை எவ்வளவுக் கெவ்வளவு கவனித்துச் செய்கிறோமோ அந்த அளவுக்கு நாம் ஹிந்து மதத்துக்கு உண்மையான சேவை செய்தவர்களாவோம்.

ஹிந்து மதத்துக்கு நல்ல எதிர்காலமிருக்கிறது. ஆனால் அந்த எதிர்காலம் இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்களையும், வருங்காலத் தலைமுறையைச் சேர்ந்தவர்களையும் பொறுத்தே இருக்கிறது. அவர்கள் சமயத்துக்கு அனுசரணையாகக் கடமைகளைச் செய்வார்களென நம்புகிறேன்.

13-6-'41.

## நாடகம் ✓

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

கடவுள், மதம் இரண்டையும் பற்றி உனக்கு எழுதியிருந்தேன். இப்போது எழுதுவது நாடகத்தைப்பற்றி. ரொம்ப கடுமையாகவும், தீவிரமாகவும் உள்ள விஷயங்களைப்பற்றி எழுதிய கையோடு சற்று சில்லரையாகவுள்ள விஷயம் குறித்து எழுதுகிறேன். இது மாறுதலை உத்தேசித்து.

நாடகத்துக்கும், தெய்வம், ஆலயம்இவற்றிற்கும் சம்பந்தம் உண்டு. தஞ்சாவூரில் இன்றுகூட ஸ்ரீ பிரஹதீஸ்வரர் ஆலயத்தில் பிரதி வருஷமும் அவ்வூரைச் சேர்ந்த தாஸிகள் ஓர் நாடகத்தை நடிக்கின்றனர்.

வாழ்க்கை பலதரப்பட்டதாக இருக்கிறது. நமது சகோதர சகோதரிகள் ருசியில்லாமலும், சோர்வு உள்ள இடங்களிலும் வசிக்கிறார்கள். சூழ் நிலை சரியில்லாததால், நாடக மேடைமீது வாழ்க்கையின் அம்சங்களைத் தத்ரூபமாக நடித்துக்காட்டுவதைப் பார்த்து சந்தோஷிக்க அவர்கள்எண்ணுகின்றனர்.

பூர்வீக இந்தியாவிலும், கிரீஸிலும் இடைக்காலத்தில் இங்கிலாந்து, ஐரோப்பா ஆகிய இடங்களிலும் நாடகங்கள் பிரசித்தமாக விளங்கின. அப்போது அவை எல்லாம்

மதம், புராணம், அல்லது சரித்திரம் இவற்றைத் தழுவிய தாக இருக்கும்.

அந்தக் காலத்தில் நாடகங்கள் எல்லாம் வெட்ட வெளி யிலே நடைபெறும். அனைவரும் இலவசமாகப் போய்ப் பார்க்கலாம். சிலருக்கு மட்டும் விசேஷமாக அங்கே இடங் கள் போடப்பட்டிருக்கும். நாடகம் வெகு நேரம் வரையில் நடக்கும். சில சமயத்தில் இரவு பூராவுமே நடப்பதும் உண்டு.

தென்னிந்தியாவில் கூடப்பாரேன். இப்பவும் கூட "மார்க்கண்டேயர்", "ஹரிச்சந்திரா" போன்ற கதைகள் தெருக்கூத்துகளாக நடக்கின்றன. நாடகம் ராத்திரி 10 மணிக்கு ஆரம்பமாகும். விடிய விடிய, நடக்கும். காலை 6 மணிக்குத்தான் முடியும். நடிப்பு, காட்சிகள், உடுப்பு இவை எல்லாம் அவற்றில் ரொம்ப எளிய முறையிலிருக் கும். நாகரிகமாகவும் இராது. சிற்சில சந்தர்ப்பங்களில் இந்த நாடகங்களில் பாட்டுக்களும், நடிப்பும் தரமாயிருக் கின்றன.

நமது நாட்டு நாடகங்கள் ஒருபுறமிருக்கட்டும். கிரேக்க நாட்டு நாடகங்கள் மிக்க உயர்தரமானவை. அவற்றில் சில படிப்பதற்கு அற்புதமாயிருக்கின்றன. ரஷ்ய தேசத்து நாடகம் நன்றாக இருக்குமாம்; ஜெர்மன் நாடகமான "பாஸ்ட்" என்பதும் அப்படியேதானும். ஆனால் இவை பற்றிஎனக்கு எதுவும்தெரியாது.ஆங்கில நாடகங்களுக்குள் ரொம்பப் பிரபல்யமானவை ஷேக்ஸ்பியர் எழுதியவைதான். சில நாடகங்கள் நடித்தால்தான் நன்றாக அனுபவிக்க முடி யும். இன்னும் சில படிக்கும்போதுதான் நன்கு ரஸிக்க

முடியும். ஆனால் ஷேக்ஸ்பியர் எழுதியவையெல்லாம் படித்தாலும் சரி, நடித்தாலும் சரி, ரொம்ப ஆனந்தமாயிருக்கும். இதே போலத்தான் சம்ஸ்கிருதத்தில் காளிதாஸன் எழுதிய நாடகங்களும். ஷேக்ஸ்பியர் நாடகங்களை எழுதியதோடு மட்டுமில்லை, நாடகமேடையில் தீவிரமாகப் பங்கும் எடுத்துக்கொண்டிருந்தார். அதனால்தான் அவரது நாடகங்கள் அதி அற்புதமாயிருக்கின்றன.

இங்கிலாந்திலே தற்போதைய நாடகங்கள் ஒரு கதம்பம் மாதிரியிருக்கின்றன. தற்காலத் தீவிரப் பிரச்னைகள் சம்பந்தமாக ரொம்பத் திறம்பட்ட முறையில் உள்ள நாடகங்கள் சில இருக்கின்றன. இன்னும் சில அம்மாதிரி இல்லாமலும் இருக்கின்றன. இதுபோன்ற நாடகங்கள் ஒன்று காதல் ரஸம் பொருந்தியனவாயிருக்கின்றன; அல்லது மட்டமான ஹாஸ்ய உணர்ச்சி கொண்டவையாயும் அமைந்திருக்கின்றன.

காளிதாஸைத் தவிர இன்னும் பல பிரபல சம்ஸ்கிருத நாடகாசிரியர்களும் உண்டு. பவபூதி, பாஸா, போன்ற சிறந்த நாடகாசிரியர்களிருந்திருக்கின்றனர். சம்ஸ்கிருதத்தில் பல பெரிய நாடகங்களிருக்கின்றன. தற்காலச் சமூகப் பிரச்னைகள் தவிர மற்ற சகல விஷயங்களைப் பற்றியும் அந்த நாடகங்கள் கூறுகின்றன. ஏன் தற்கால சமூகப் பிரச்னைகளைப்பற்றி அவற்றில் பிரஸ்தாபம் இல்லையென்றால், காரணம் வெளிப்படை. முழுக்க முழுக்க ஹாஸ்யமான நாடகங்கள் உட்பட பல நாடகங்கள் சம்ஸ்கிருதத்தில் உண்டு. இலக்கியத் துறையில் சம்ஸ்கிருத நாடகங்கள் மிக்க உயர்வான நிலையில் இருந்தது. மிக்க கண்யமான,

நாகரிகமான முறையில் சிருங்கார ரஸத்தைப்பற்றி, அவற்றில் எழுதப் பெற்றிருக்கின்றன. எனவே மிக உன்னதமான இலக்கியமாக அவை திகழ்கின்றன. எனக்குத் தெரிந்தவரை புராதன தமிழ் இலக்கியம் எந்த நாடகத்தையும் நமக்குச் செய்து வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

சென்ற 50 ஆண்டுகளாக நம் நாட்டில் நாடகம் நிலை பெற்று வந்திருக்கிறது. ஹிந்தி, உர்து, தமிழ், தெலுங்கு, வங்காளி, மராத்தி ஆகிய பாஷைகளில் அநேகம் சிறந்த நாடகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவற்றில் சில வெகு உயர்தரமாக இருக்கின்றன. இந்த நாடகங்களில் பல நாடெங்கும் நடிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் நடிக்கவும் நடிக்கின்றனர். பலர் அவற்றைப் பார்த்தானந்திக்கின்றனர். இதிகாஸங்கள், புராணங்கள் முதலியவற்றிலிருந்து பக்திநிறைந்த கட்டங்கள் நாடகங்களாக நடிக்கப்படுகின்றன. இன்னும் சில நாடகங்களுக்கு இந்திய தேசசரித்திர சம்பவங்கள் நாடகக் கட்டிடங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. தற்கால சமூகப் பிரச்னைகளைக் குறித்த நாடகங்கள் சொற்பம். நமக்காக நாம் ஒரு நாடகபாணியை வைத்துக்கொண்டு அதை அபிவிருத்தி செய்து வருகிறோம்.

காலஞ்சென்ற பெல்லாரி ஸ்ரீகிருஷ்ணமாச்சார்லு தெலுங்கில் பல நாடகங்கள் எழுதியுள்ளார். அதேபோல என் நண்பர் ஸ்ரீ பி. சம்பந்த முதலியார் தமிழில் நாடகங்கள் பல எழுதியிருக்கிறார். அவை நடிக்கப்படுகின்றன. இத்துறையில் அவர்கள் மகத்தான சேவை செய்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் எழுதிய நாடகங்களில் பெரும்பான்மை

யும் மதசம்பந்தமானவை ; புராணத்தைப் பற்றியவை, அல்லது காதல் ரஸமுள்ளவையாகவிருக்கின்றன. தற்கால வாழ்க்கையைப்பற்றியோ, நிலைமைகளைக் குறிப்பதாகவோ அந்நாடகங்கள் அமையவில்லை. மேலே சொன்ன நாடகங்கள் சிறந்தவை என்றாலும் அவை குறிப்பிட்ட ஒரு துறையில் தான் என்று சொல்லவேண்டும்.

தற்கால வாழ்க்கையையும், நிலைமைகளையும் சித்தரித்துக் காட்டும்படி முக்கியமான பாஷைகளில் இந்திய நாடகங்கள் இன்னும் உருப்பெறவில்லை. தற்கால இந்தியாவில், சிக்கல்கள் மலிந்துள்ள வாழ்க்கைப்பிரச்னைகள் இவற்றைப் பற்றியெல்லாம் சில நாடகாசிரியர்கள் நாடகங்கள் எழுதலாம். இதன் மூலம் அவர்கள் மகிழ்ச்சிக்கு ஏற்பாடு செய்வதுடன் இந்தியாவுக்குப் போதனை செய்வதாகவும் இருக்கும்.

இதைப்பற்றி அடுத்த கடிதத்தில் மேலும் எழுதுகிறேன்.

*14-6-'41.*

## II

நாடகத்தின் சரித்திர பூர்வமான அம்சம் குறித்தும், தற்கால இந்திய நாடகம் பற்றியும் சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். அதில் சில நாடக ஆசிரியர்களைப் பற்றியும் பிரஸ்தாபித்திருந்தேன். இந்திய நாடக மறுமலர்ச்சிக்காக டாக்டர் ரவீந்திரநாத் தாகூர் செய்திருக்கும் மகத்தான சேவையை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ரவீந்திரர் பெரிய கவி; நாடகாசிரியர்; அவரே பிரபல நடிகரும் கூட. கல்விக்கும், கலா நாகரிகத்துக்கும் உறைவிடமாக விளங்கும் சாந்தி நிகேதனத்தின் ஸ்தாபகரும் அவர்தான்.

தற்கால வங்காளி நாடகம் சீரான முறையில் அபிவிருத்தி யடைவதற்காக அவர் செய்திருக்கும் தொண்டு கொஞ்ச நஞ்சமல்ல.

நாடகத்தை மேடைமீது நடிப்பதன் மூலமே நன்கு சித்தரித்துக் காட்ட முடியும் என்பது உனக்குத் தெரிந்த விஷயம். நடிப்புத் தவிர, மேடை, காட்சிகள், விளக்குகளைப் பொருத்தும் வேலை, உடை, வேஷம், நாடகசாலையின் அமைப்பு, பின்னணிச் சங்கீதம் முதலிய எல்லாம் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அநேகமாகச் செவ்வையான நிலைமையில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் யுத்தகோரத்திலிருந்து தப்பி, மிஞ்சி நிலைபெற்றிருக்கும் என நம்புகிறேன். இந்தியாவில் இவற்றை நாம் பூர்த்தி செய்யும்படியாக அதிகமான வேலைகள் இருக்கின்றன.

கல்கத்தா, பம்பாய் ஆகிய இடங்களில் நவீன முறையில் சில தியேட்டர்கள் இருக்கின்றன. மற்றபடி நமது இதர தியேட்டர்களெல்லாம் போதிய இடவசதியுள்ள பிரதேசத்தில் இல்லை; காற்றோட்ட சாதனத்துடன் கூடியதாகவும் இல்லை. தியேட்டர்களுக்குள்ளே இடவசதி ஏற்பாடுகள் திருப்திகரமாக இல்லை. சுகாதாரத்துக்காகச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளோ நவீன முறைப்படி இல்லை. ஜோடனைகள் எல்லாம் அநேகமாகக் கலை அழகுடன் அமைவதில்லை. நாடகங்களுக்கு உகந்த முறையில் அவை உதவியாகவும் இருப்பதில்லை. பார்க்கப்போனால் அந்த ஜோடனைகள் எல்லாம் உண்மையான முறையில் நாடகத்தைச் சித்தரித்துக் காட்டவொட்டாமல் தடையாகவும் இருக்கின்றன.

நமது நடிகர், நடிகைகள் தரித்துக்கொள்ளும் உடையைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை, இவ்விஷயத்தில் சரியான முறையைப் பின்பற்றியோ, சரித்திரத்தை ஒட்டியோ கவனம் செலுத்தப்படவில்லை. கண்யமான முறையில் உடுப்பதும் கிடையாது. நாடகங்களைச் செவ்வனே நடித்துக் காட்டுவதற்கு இவைகளெல்லாம் அத்தியாவசியமானவை என்று சொல்லாவிட்டாலும் அவை ரொம்ப முக்கியமான விஷயங்கள் என்பதை நீ ஒப்புக்கொள்ள வேண்டும். நாடகத்தில், பின்னால் ஜோடனையுள்ள அமைப்பு மிக முக்கியமானது. நாடகத்தைப்பற்றிய உணர்ச்சியும், பிரேமையும் பார்ப்பவர்கள் மனதில் குடிகொள்ளும்படி செய்ய வேண்டுமானால், நடிக, நடிகைகள் திறம்பட நடிப்பதுமட்டுமின்றி, ஜோடனைகளையும் உதவியாக இருக்கும்படி அமைக்க வேண்டும். நடிக, நடிகைகள் சமயத்துக்கு ஏற்றபடி நல்ல மாதிரியில் உடுப்புகள் தரிக்க வேண்டும்.

சரித்திர சம்பந்தமாகவுள்ள நாடகங்களை நடிக்க நேருவதாக வைத்துக்கொள்வோம். எந்தக் காலத்தில் அந்தச் சரித்திர சம்பவம் நிகழ்ந்தது என்பதை நன்கு பரிசிலனை செய்யவேண்டும். அத்துடன் அந்தக் காலத்திலே எந்த விதமான உடுப்பு உபயோகத்தில் இருந்தது என்பதையும் கவனிக்க வேண்டும். இதை அனுசரித்து நாடகப் பாத்திரங்களுக்கு வேஷம் அமைத்து உடுப்புகளைத் தரிக்கும்படிச் செய்ய வேண்டும். புராண சம்பந்தமான நாடகம் நடிக்க வேண்டுமானால், ரவி வர்மா தமது படங்களை வர்ணம் தீட்டுகையில் கவனித்துச் செய்ததைப்போல நாம் ஏதாவது ஒரு சம்பிரதாயத்தை ஒட்டிச் செய்ய வேண்டும். தற்கால இந்

திய நாடகங்களைப் பற்றியமட்டுமே வேஷம் புனைவதற்கு உடை பற்றிய வேலை சுலபம். ஆயினும் இவ்விஷயத்திலும் போதிய கவனம் செலுத்தப்படவில்லை. நாடகமேடை மீது தீபங்களை அமைப்பது ரொம்ப முக்கியமான அம்சம். நாடகசாலையில், மேடைமீது மட்டும் வெளிச்சம் தெரியும்படி செய்து, சபையில் விளக்கில்லாமல் செய்தால், நடிப்பின் திறமையை உயர்வாகக் காட்டலாம். இது சுலபமானதொரு யுக்தி. நமது தியேட்டர்கள் பலவற்றில் இம்முறை அனுஷ்டிக்கப்படவில்லை. மேடைமீதுள்ள விளக்குகளைத் திறமையான முறையில் எரியவிட்டோ அணையும்படி செய்தோ நாடகக் கட்டங்களுக்கு ஏற்ப ஏற்பாடுகளைச் செய்தால், நாடகத்தில் மிகவும் அபூர்வமாக சோபை ஏற்படும்படிச் செய்யலாம்; இது பிரமிப்புத் தட்டும் வண்ணமும் இருக்கும்.

பொருத்தமான நடிக நடிகைகளைப் பொறுக்குவது சுலபமான காரியமல்ல. நான் ஒரு நடிகனாக இருந்திருக்கிறேன். எனவே இதிலுள்ள கஷ்டத்தைப் போதியபடி நான் உணர்ந்திருக்கிறேன். அத்தோடு நடிப்பிலுள்ள கவர்ச்சி மிகுந்த தன்மையையும் அறிவேன். நீ கூட உன் பள்ளிக்கூட நாடகத்தில் நடித்திருக்கிறாய். ஸெயிண்டு தாமஸ் கான்வெண்டில் நடந்த நாடகத்தில் நாட்டுப்புறத்து ஸ்பானியப் பெண் வேஷத்தில் உன்னை நான் பார்த்திருப்பதாக ஞாபகம். முதலில் உன்னை எனக்கு அடையாளமே தெரியவில்லை. பிறகுதான் உன் அம்மா எனக்குச் சொன்னாள். நடிப்பது ரொம்பச் சிரமமான காரியம்; ஏனெனில், உன்னுடைய சொந்த உணர்ச்சிகளையெல்லாம் அடக்கிக் கொண்டு நாடக பாத்திரத்துக்குள்ள உணர்ச்சியைப்

றனர். சகோதரர்களை எதிர்த்துப் போராடுவது உண்மையான மதமல்ல. சகோதரத்வம் இஸ்லாத்தின் அடிப்படை; ஹிந்து மதத்தின் அடிப்படை தர்மம். இது அரசியல் அல்ல. குறுகிய நோக்கத்துடன் கவனித்தாலும், இந்தக் கலகங்களால் எந்த வகுப்புக்கு லாபம்? இதனுல் என்ன பயன்? இது விகாரமான அம்சம். இந்தியாவிலிருந்து இது மறையவேண்டும். சீக்கிரம் மறையுமென்றே நான் நம்புகிறேன்.

*4-7-'41.*

## அஹிம்ஸா தர்மம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

யுத்தத்தைப்பற்றியும் நமது நாட்டிலே நடக்கும் வகுப்புக் கலகங்கள் குறித்தும் சென்ற என் இரண்டு கடிதங்களில் உனக்கு எழுதியிருந்தேன். நியாய சித்தமுள்ளவர்க ளெல்லாம் இது போன்ற சம்பவங்கள் நடப்பது கண்டு வருந்துகின்றனர். இவற்றிற்கெல்லாம் உன்னதமான பரிகாரம் அஹிம்ஸா தர்மமே என்று மகாத்மா காந்தி உபதேசிக்கிறார். தன்னால் முடிந்த அளவுக்கு அவரும் அந்தக் கொள்கையைப் பின் பற்றி நடக்கிறார். சண்டையைக் கண்டு பயந்து ஓடும் பயங்காளியின் அஹிம்ஸா முறையல்ல அது. அந்தரங்க சுத்தியில்லாமல் அஹிம்ஸா முறையைக் கைக்கொள்வதும் அவர் முறை ஆகாது. ஆனால் பலாத்காரத்தையும் தீமையையும் எதிர்த்துத் தியாகங்கள் செய்து அதன் மூலம் அஹிம்ஸா தர்மத்தை உறுதியோடும், வீரத்தோடும் பின்பற்றும் முறையே மகாத்மாஜீயினுடையதாகும். பலாத்காரச்செயலுக்கு எதிராகப் பலாத்காரத்தில் ஈடுபடாமல் தானே கஷ்டங்களுக்கு உட்படும் முறையையே மகாத்மா கைக்கொண்டிருக்கிறார்.

சமீபத்தில், சில வருஷங்களுக்கு முன்னர் நான் மகாத்மாவுடன் இருந்தபோது எல்லைப்புற மாகாணம் ஆகிய இடங்

களிலிருந்து திடகாத்திரமுள்ள சிலர் அங்கு வந்திருந் தார்கள். தங்களது மாகாணங்களில் முஸ்லிம்கள் அக்ர மம் புரிகின்றனர் என்றும், சொத்துக்களுக்குச் சேதம் விளைவித்துத் தங்கள் ஸ்திரீகளை உபத்திரவிக்கிறார்களென் றும் அவர்கள் மகாத்மாவிடம் புகார்கூறினார்கள். காந்திஜீ பின்வருமாறு அவர்களிடம் சொன்னார் :—"நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள். கடமையைச் செய்து தீர்க்கவேண் டிய இடத்தை விட்டு நீங்கள் ஓடி வந்திருக்கக்கூடாது. காலாடிகள் தங்களுடைய திருவிளையாடல்களைத் துவங்கு முன்னரே நீங்கள் உங்களையே தியாகம் செய்து கொண்டி ருக்க வேண்டும்."

ஆனால் ஒரு விஷயம், வகுப்புச் சண்டைகளிலும், கலவரங் களிலும் வீரத்தோடு பரிசுத்தமான அஹிம்ஸா தர்மத்தை கைக்கொள்வதால் தற்போதுள்ள மனித வர்க்கத்துக்கு அது எவ்வளவு தூரம் பயன்படும் என்பது கேள்வி. இது வரை அது பயன்பட்டதாகத் தெரியக்காணோம். பெரு வாரியானமுறையில் இக் கொள்கை அனுஷ்டிக்கப்பட வில்லை என்பது உண்மையே. இம்முறைக்கு அவசியமான மனோபக்குவம் ஏற்படவில்லை என்றே எனக்குத் தோன்று கிறது. அஹிம்ஸா தர்மப்படி தானே தன்னை வருத்திக் கொள்வதால் எதிராளிக்கு அந்தச் சமயத்தில் மனம் இள கும். இது உதாரணமாக மனைவி—புருஷன்; தந்தை— குழந்தை; சகோதரன்—சகோதரி; நண்பர்கள்; கிராம வாசிகள் ஒரே நாட்டினர் முதலியவர்களிடையே பந்துத் வம் உள்ளவர்களிடம் இருப்பின் அது சாத்தியமாக இருக் கக்கூடும். ஆனால் இப்போதிருப்பதை வைத்துக்கொண்டு பார்த்தால் அஹிம்ஸை வெற்றி பெறுமென்று எனக்குத் தோன்றவில்லை.

மனிதன் நாகரிகத்தில் முதிர்ச்சி அடையும்போது இறுதியில் அஹிம்ஸா தர்மம் மெய்யாகி வெற்றிபெறும் என்பது அடிப்படையான உண்மைதான்.

இந்தக் கலகங்களெல்லாம் நடவாத வழியில் நம்மவர்களைச் சரிப்படுத்திக்கொள்ளவேண்டியது அவசியம்; அப்படியே கலகங்கள் ஏற்படுகிற தென்றாலும் அவற்றைச் சீக்கிரத்தில் அடக்கவும் வேண்டும். இதற்கு உடனடியாகவுள்ள பரிகாரம் போன கடிதத்தில் உனக்கு நான் எழுதியிருப்பதுபோல போலீஸ் உதவிதான். நாளாவட்டத்தில் உபயோகத்தில் வைத்துக்கொள்ளக்கூடிய பரிகாரம் அஹிம்ஸை. எப்படியும் அதைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டியதுதான்.

அஹிம்ஸா தர்மத்தைக்கொண்டு, சர்வ தேசச் சிக்கல்கள் காரணமாக மூளும் உலக மகாயுத்தங்களை நிறுத்தவோ தடுக்கவோ முடியுமா? மகாத்மாஜி சிறிதும் தயங்காமல் "முடியும்" என்கிறார். டால்ஸ்டாய் கூட அப்படியே சொல்லியிருக்கிறார். ஏசுகிருஸ்து வும் அங்ஙனம் தெரிவித்திருக்கிறார். புத்தர் கூறியதும் அப்படியே. கலிங்கர்களை வெற்றிகொண்ட பின்னர் அசோக சக்ரவர்த்தி விடுத்த பிரகடனத்தில் அஹிம்ஸா தர்மத்தின் வெற்றி வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. நாம் "अहिंसा परमो धर्मः" அஹிம்ஸா பரமோ தர்ம: என்கிறோம்.

மனிதவர்க்கத்தின் சரிதை முழுதிலும் அஹிம்ஸா தர்மம் ஓர் கோட்பாடாக இருந்தே வந்திருக்கிறது. ஆனால் அம்முறை பெருவாரியாகவோ போதுமான அளவிலோ அனுஷ்டிக்கப்படவில்லை அது வெற்றி பெறவில்லை. ஆனால்

அது தோற்றுவிட்டதென்று சொல்லவும் முடியாது. ஏனெனில் அம்முறையைப் பரீட்சித்துப் பார்க்கவில்லை. ஸெக்கோஸ்லேவகியாவும் மற்ற நாடுகளும் இதற்கு உதாரணங்களன்று. அஹிம்ஸா தர்மத்துக்கு அவை உதாரணங்களில்லை. சண்டை செய்ய முடியாததால் அந்நாடுகள் சரண் புகுந்து விட்டன. முடிந்திருந்தால் அந்நாட்டினர் சண்டை போட்டிருப்பார்கள்.

தற்போது போகும் முறையில் யுத்தம் போய்க்கொண்டிருந்தால் மனித வர்க்கத்துக்கு நிச்சயமான எதிர்காலம் உண்டென்று சொல்ல முடியாது. ஒரேயடியாகப் பரஸ்பரம் அழிய வேண்டியதுதான். இக்கருத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். இக்கேட்டை நிறுத்த ஏதாவது செய்தாக வேண்டும். அஹிம்ஸா முறையால் யுத்தங்களையெல்லாம் நிறுத்திவிட முடியும் என்று மகாத்மா காந்திஜீ கருதுகிறார். இப்போதும், எப்போதும் இந்தியா அஹிம்ஸையைப் பின்பற்றி நடக்க வேண்டுமென்று மகாத்மா அந்தரங்க சுத்தியோடு ஆசைப்படுகிறார். இந்தியா மீது படையெடுப்பு நேரிடுமானால் அஹிம்ஸா முறைப்படி அதை இந்தியா எதிர்க்க வேண்டும். தான் ரத்தம் சிந்தவேண்டுமேயன்றி பிறர் ரத்தம் சிந்தக்கூடாது. எதிரிகளோடு இந்தியா ஒத்துழைக்காது. ஆனால் பலாத்கார முறையைக் கையாண்டு எதிரியோடு இந்நாடு போராடாது. இது மகாத்மாவின் கருத்து.

இந்தியாவுக்கு இது பயன்படுமா? எல்லா இந்தியர்களும் ஒன்றுபட்டு, எந்த இந்தியனும் எதிரியோடு ஒத்துழைக்காமல் இருந்தால் இம்முறை பயன்படக்கூடும். ஆனால்

இந்தியாவின் துக்ககரமான சரித்திரத்தைப் பார்த்தால் இந்நாட்டில் எதிரியுடன் பணத்துக்காகவோ, பயம் காரண மாகவோ சேர்ந்து ஒத்துழைத்தவர்கள் பலர் இருந்திருக் கின்றனர். இன்றைய நிலைமையில் கூடப் பலர் அப்படி இருக்கின்றனர். அஹிம்ஸா தர்மத்துக்கு நூற்றுக்கு நூறு ஒத்துழைப்பு நம்மவரிடையே இருக்கவேண்டும். இந்த அம்சம் இப்போது இல்லை. வர வெகு நாளாகும்.

எல்லா இந்தியர்களும் ஒன்றுபட்டிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். இந்தத் தற்கால, கொடிய யுத்த முறையில் எவ்வளவு காலத்துக்கு அஹிம்ஸா முறையை அனுஷ்டிக்க முடியும்? மிருகத்தனமான அடக்குமுறையைக் கையாண்டு ஜனங்களிடையே மிக்க பலிஷ்டர்களின் எதிர்ப்பையும் எதிரிகள் ஒடுக்கிவிடுவார்கள்.

இந்தியாவில் அஹிம்ஸா முறையைக் கைக்கொள்வதில் இன்னும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இம்முறையில் நம்பிக்கை யில்லாமல் ஏழெட்டுக் கோடி முஸ்லிம்கள் இருக் கின்றனர். தற்காப்புக்கு பலாத்காரத்தைப் பிரயோகிப்பது நியாயம் என்று கருதும் ஹிந்துக்களும் பெருவாரியாக இருக்கின்றனர். ஸ்ரீமான் முன்ஷி, பண்டித மதன்மோ ஹன் மாளவியா, ஹிந்து மகாசபையினர் ஆகியவர்கள் இருக்கின்றனர். இப்படியாயின் அஹிம்ஸைக்கு ஏதாவது மார்க்கமுண்டா?

*5-7-'41.*

# சர்வதேச சங்கம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

அஹிம்ஸா தர்மத்தை லட்சியமாக்கிக்கொள்ள முயல வேண்டியதுதான். ஆனால் இன்றுள்ள நிலைமையில் அதை அனுபவ சாத்தியமாக்கிக்கொள்ள வேண்டுமென்றால் அது பயன் பெறுமென்று தோன்றவில்லை. சென்ற என்னுடைய இரண்டு கடிதங்களிலிருந்தும் இதை நீ உணர்ந்து கொண்டிருப்பாய். இது ஏமாற்றத்தைத் தரக்கூடிய முடிவுதான். ஆனால் உண்மையை நிதானித்துதானே பார்க்கவேண்டியிருக்கிறது? இந்த லக்ஷியம் சித்தி பெறுவதற்கு ஓரள வேனும் ஏதாவது செய்ய முடியுமா? செய்ய முடியும்; செய்ய வேண்டும்.

வகுப்புக் கலகங்கள் சம்பந்தப்பட்ட வரையில் நாம் விவேகத்தை உபயோகித்து நடக்க வேண்டும். எல்லா வகுப்புகளிலும் நல்லவர்கள், கெட்டவர்கள் இருக்கின்றனர். அடியோடு கெட்டதாகவோ, அல்லது முற்றிலும் நல்லதாகவோ எந்த வகுப்பும் கிடையாது. ஆத்திரமுற்ற சமயத்தில் முஸ்லிம்களும் தங்களை மறந்து செயல்புரிகின்றனர். அமைதியாயிருக்கையில் கலவரங்களின்போது தாங்கள் செய்த காரியங்களை நினைந்து அவர்கள் வருந்தி வெட்கப்படுவர். இதை நாம் உணர வேண்டும். எல்

லோருமே அப்படி இல்லாவிட்டாலும் சிலரேனும் மேற் சொன்ன மாதிரி நினைப்பார்கள். அவர்கள் யார் என் பதை அறிந்துகொள்ள வேண்டும். கலவரங்கள் நடக்கும் பொழுது மூர்க்கமான ஹிந்துக்களிடமிருந்து நிரபராதி களான முஸ்லிம்களைப் பாதுகாப்பதற்கு ஹிந்துக்கள் அஹிம்ஸா தர்மத்தைக் கைக்கொள்ளலாம். வகுப்பு களிடையே அமைதியும், செளஜன்யமும் நிலவச் செய்வ தற்கு இதைவிடச் சிறந்த மார்க்கம் வேறில்லை.

இவற்றை யெல்லாம்விட சாதாரண காலங்களில் நம் நாட்டின் அன்றாட வாழ்வில் அஹிம்ஸா தர்மத்தை எல்லா வகுப்பினரும் கடைப்பிடிக்க வேண்டும். ' ஹிந்துபாணி ' முஸ்லிம் பாணி ' ' ஹிந்து சா ' ' முஸ்லிம் சா ' ' ஹிந்து கானு ' ' முஸ்லிம் கானு ' இப்படியெல்லாம் இந்தியா விலுள்ள ரயில்வே பிளாட்பாரங்களில் வெகு சாதாரண மாகக் கூவுகின்றனர். ஹிந்துக்கள் முஸ்லிம்களின் கடை யிலும் முஸ்லிம்கள் ஹிந்துக்களின் கடைகளிலும் யாதொன்றும் வாங்க மாட்டார்கள். இவையெல்லாம் ஒழிய வேண்டும். எப்போதாவது தகராறு இருந்த போதிலும் நாம் எல்லோரும் ஒன்றுபட்டுச் சேவைசெய்து சகோதரர்கள் போல் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

சர்வதேச விவகாரங்களில் ஏதாவது கொஞ்சமாவது அஹிம்ஸா தர்ம அனுஷ்டானத்துக்கு இடமுண்டா? இட முண்டு; ஆனால் ஒன்று. பெரிய நாடுகள் நாட்டாசையை விட்டு அந்தரங்க சுத்தியோடு அமைதியாக மற்றைய நாடு களுடன் வாழ முற்பட்டால் அது சாத்தியமே. இத் துறையில் அகாலமரணமடைந்த சர்வதேச சங்கம்

உருவான முயற்சி செய்தது. ஆனால் அது மிகக் கேவலமாக முறிந்து போயிற்று. ஆரம்பமே சரியா யில்லை. இது உருவடைவதற்குப் பொறுப்பாளியாயிருந் தவர் ஓர் அமெரிக்க ஜனாதிபதி. ஆனால் அமெரிக்கா அதில் சேரவில்லை. பின்னர் இத்தாலி, ரஷ்ய, ஜர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளும் விலகிக்கொண்டு விட்டன. எஞ்சி அங்கம் வகித்த நாடுகளும் இதர நாடுகளைப் பற்றியோ உலக சமாதானத்தைப் பற்றியோ யில்லாமல் தங்கள் விஷயத்தையே கவனித்துக்கொண்டிருந்தன.

பொருளாதாரத் துறையிலேனும், அதாவது நாட்டாசை கொண்ட நாடுகளுக்கு எண்ணெயையோ, யுத்த தளவாடங் களையோ விற்பனை செய்யாமல் ஏற்பாடுகள் செய்திருந் தால் சர்வ தேச சங்கம் ஏதோ ஒன்றைச் செய்ததாக இருக்கும். ஆனால் அது அங்ஙனம் செய்யவே இல்லை. ஜப்பான் சீனாவிடமிருந்து மஞ்சூரியாவைப் பிடித்துக் கொண்டு அதற்கு 'மஞ்சுகோ' என்ற பெயரிட்டபோது சீனாவுக்கு சர்வதேச சங்கம் உதவவில்லை. அபிஸீனியா விலும் அப்படியே. இத்தாலிக்கு அப்போது எண்ணெய் விற்பனை செய்யப்பட்டது. தொடர்ச்சியாக அநேகம் விஷயங்களில் சர்வதேச சங்கம் வழிகாட்டத்தவறிவிட்டது.

சர்வதேச சங்கம் தோல்வியுற்றதற்குக் காரணம் என்ன? அது உண்மையான சர்வதேச சங்கமாக அமையவில்லை என்பதுதான். இதில் சீனா ஒரு மெம்பர். ஆனால் அதற்கு உண்மையான செல்வாக்கு அதில் இல்லை. இந்தியாவும் அதில் ஒரு மெம்பர்தான். அனுஷ்டானத்தில் இது பிரிட்ட னுக்கு அதிகப்படியாக ஓர் ஓட்டு என்பதைத் தவிர

வேறில்லை. உலக ஜனத்தொகையில் பாதிப் பங்குள்ள ஒரு சமாஜத்துக்கு உண்மையான செல்வாக்கில்லையானுல் எப்படி சர்வதேச சங்கம் வெற்றி பெறும்?

இதனுல் அஹிம்ஸா முறைக்குச் சர்வதேசத்தில் கிஞ்சிற்றும் இடமில்லையென்று அர்த்தமா? இல்லையென்று சொல்ல நான் தயங்குகிறேன். திட்டமாக இடமுண்டு என்று இப்போது சொல்லவும் முடியாது. சக்திக்குப் பதிலாக விவாதம், மத்தியஸ்தம் முதலியவற்றைக்கூடுமான வரையில் கையாண்டு பார்க்கவேண்டும். ஆனுல் இதுவரை இது வெற்றிபெறவில்லை. சர்வதேசச் சச்சரவுகள் பலவற்றை நீதிபதிகள் உள்ள விசாரணை சபையைக்கொண்டு ஏன் தீர்க்கலாகாது? இந்த யுத்தத்திற்குப் பிறகாவது விவேகமுள்ள உலக நிலை உதயமாகுமென நான் நம்புகிறேன். சீனுவும், இந்தியாவும் சுயமான அந்தஸ்தை அடைந்தால் மத்தியஸ்தின் மூலம்உலக சமாதானத்தைப் பராமரிக்கும் விஷயத்தில் அவை பெரிதும் உதவக்கூடும். யுத்தங்களால் சச்சரவுகள் தீராது; ஆனுல் அவற்றுல் மேலும் யுத்தங்களே தலையெடுக்கும் என்பதை ஐயோப்பியநாடுகள் உணர நேரும். அப்படிப்பினையை உணரும்பக்ஷத்தில் புதிய, பரிசுத்தமான சர்வதேச சங்கம் உதிக்கும். இதற்கிடையே யுத்தக்கொடுமையைத் தணித்து, அமைதியை நிலைநாட்ட சமாதானவாதிகள் விரும்பும் சிலவழிகள் உண்டு. அவற்றை அடுத்த கடிதத்தில் தெரிவிக்கிறேன்.

6-7-'41.

## யுத்தக்கொடுமைகள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

யுத்தங்கள் நடக்கத்தான் வேண்டுமென்ருல் அதன் கொடுமைகளைக் குறைப்பதற்காகவாவது பலவேறு நாட்டினரும் முயலலாம். தேசங்கள் போர்களில் ஈடுபட வேண்டுமென்ருல் சர்வதேசச் சட்டப்படியோ அல்லது கட்டுப் பாட்டின்படியோ பழக்கப்பட்டு அதற்காக ஈடு செலுத்தப் பட்ட ஸோல்ஜர்கள், மாலுமிகள், விமானிகள் இவர்களுடன் மாத்திரம் ஏன் யுத்தத்தை நிறுத்தி விடக் கூடாது? அவர்கள் சண்டை யிடட்டும். தேசங்களின் கதியை நிர்ணயிப்பதற்குப் பலாத்காரமே ஓர் நீதிபதியாயின் தேக வலுவுள்ளவர்களின் கோஷ்டி வெற்றி பெறட்டும்.

ஓர் நாட்டை முற்றுகையிட்டு அங்குள்ளவர்களை யெல்லாம் பட்டினி போட்டு அதன் மூலம் அவர்களைப் பணிய வைப்பதென்பது மனிதவர்க்கத்திடம் அனுதாபமில்லாமல் நடந்து கொள்வதாகும். இந்த ஆசைக்கு எந்த நாடும் விலக்கில்லை.

முதலடியாக யுத்த காலங்களில் கூட உணவுப் பொருள்கள், உடைகள் இவை விஷயத்தில் போக்கு வரத்துக்களைப் பாதுகாக்க வேண்டும். அடுத்தபடியாக ஸ்திரீகள், குழந்தைகள், புருஷர்கள் முதலியவர்கள் உள்ள கப்பல்

களைச் சப்மரீன்களைக் கொண்டு மூழ்கடிக்கும் முறையைச் சர்வதேசக் கட்டுப்பாடுகளால் தடைசெய்ய வேண்டும். மேற்சொன்ன மாதிரி சப்மரீன்களைக் கொண்டு புரியும் கொடுஞ்செயல் யுத்தவீரமல்ல. இது பயங்காளித்தன மாகும். யுத்தக் கப்பல்கள் சண்டை போடட்டும்; வலு வுள்ளவை ஜெயிக்கட்டும். ஏன் ஒவ்வொரு நாடும் மறை முகமாகத் தாக்கிக்கொள்ள வேண்டும்?

மேலும் சாமான்ய மக்களையும், அவர்கள் வசிக்கும் இடங் களையும், சரித்திர பூர்வமான அபூர்வக் கட்டிடங்களையும் குண்டு வீசிக் கொன்று நாசஞ் செய்து குவிப்பது அநாக ரிகச் செயல். விமானத்திலிருந்து குண்டெறிவதை அடி யோடு நிறுத்த வேண்டுமென்று நான் அபிப்பிராயப்படு கிறேன். இதற்குச் சம்பந்தப்பட்ட நாடுகள் தயாராக இல்லாவிட்டால் ராணுவ நிலையங்களோடு மட்டும் குண்டு வீசுவதை வைத்துக் கொள்ளட்டும்; விவேக மில்லாமல் குண்டுகள் வீசுவதை நிறுத்தட்டும். விமானத்திலிருந்து குண்டுகளை வீசுவதால் கண்டபடியெல்லாம் அவற்றைப் போடும்படி நேரும். ஆனால் ஒருவிதமான கட்டுப்பாடும் இல்லாமல் இருப்பதற்குப் பதிலாக ஏதாவது ஒரு வரை யறை செய்துகொள்வது மேல். சில வருஷங்களுக்கு முன் னர் சர்வதேச சங்கத்தின் கூட்டத்தில், எல்லா நாடுகளும் சாமான்ய ஜனங்களின் மீது குண்டுகள் போடக் கூடாது என்று உத்தேசிக்கப்பட்டது. ஆனால் துன்பம் தரக்கூடிய செய்தி என்னவெனில், இதைப் பிரிட்டன் ஆக்ஷேபித்தது. இந்தியாவில் வடமேற்கு எல்லைப் புறத்தில் குண்டுகளை வீசும் அதிகாரம் தனக்கிருக்கவேண்டுமென்ற ஒரு கார ணத்தைதான் அது தெரிவித்தது.

பிறகு, யுத்த தளவாடங்களைச் சொந்த ஹோதாவில் உற்பத்தி செய்வதையும், எண்ணெய், பெட்ரோல் இவற்றைச் சொந்தமாகப் பாவித்துத் தனி உரிமைகொண்டாடும் வழக்கத்தையும் எல்லா தேசங்களும் தடை செய்யவேண்டும். யுத்தத்தில் ஈடுபடும் நாட்டின் இளைஞர்கள் பலியாகின்றனர். மற்ற நாடுகள் ஆயுதங்களையும், தளவாடங்களையும் யுத்தத்தில் சிக்கிய நாட்டினருக்கு வித்தியாசமின்றி விற்பனை செய்து லாபம் சம்பாதிக்கின்றன. இது மனிதருக்கும், கடவுளுக்கும் எதிராக இழைக்கும் குற்றமல்லவா ? யுத்த தளவாட உற்பத்தியைச் செய்வதற்குச் சர்க்காருக்கே உரிமை இருக்கவேண்டும் ; படையெடுப்புக்கு ஆளான நாடுகளுக்கின்றி படையெடுக்கும் நாடுகளுக்கெல்லாம் யுத்த தளவாடங்களை விற்பனை செய்யக் கூடாது. அப்படிச் செய்தால்தான் மேற்சொன்ன விபரீதத்தைத் தடுக்க இயலும்.

இதே போலவே எண்ணெய், பெட்ரோல் இவற்றின் விஷயத்திலும் ஏற்பாடு செய்யவேண்டும். தற்கால யுத்தங்கள் இவையின்றி நடக்கமுடியாது. எண்ணெய்க் கிணறுகளைக் கைப்பற்றுவதற்காகவே இந்த யுத்தமுள்பட அநேகம் யுத்தங்கள் நடக்கின்றன. ஆங்கிலோ - பர்ஸியன் எண்ணெய்க் கம்பெனி, பர்மாஷெல் முதலியவைகள் சொந்த ஹோதாவில் நடக்கின்றன. இவற்றையெல்லாம் சர்க்கார்கள் தங்கள் வசமாக்கிக்கொள்ளவேண்டும். நாட்டாசை பிடித்த நாடுகளுக்கு அவற்றை விற்பனை செய்யக் கூடாது.

இவை அனைத்தும் வெறும் கருவிகள். இதில் முக்கிய மானவன் மனிதன்தான். சாமான்யமான மனிதன் யுத் தத்தை விரும்புகிறானா? தற்கால யுத்தத்தை யாரும் விரும்பவில்லையென்றே நான் நம்புகிறேன். சாதாரண மான ஆங்கிலேயனோ, பிரஞ்சு, ரஷ்ய நாட்டவரோ ஜர்மனியனோ இந்தப் பெருவாரியான நாசத்தைக்காண விரும்புகின்றனரா? இருக்காது. மற்றொருவன் அழிந்தா லன்றி தான் வாழவோ உயிரோடிருக்கவோ முடியா தென்று அவன் கருதுகிறான். இந்த மனோபாவத்தை மாற்ற ஏதாவது வகை செய்யக்கூடாதா? நான் இறுதி யான விஷயங்கள் குறித்து எழுதவில்லை. உடனே இதில் ஏதாவது செய்யமுடியாதா? முடியும். ஜனநாயக நாடு களேனும் ஒரு விஷயத்தைச் செய்யவேண்டும். அதைச் செய்யவும் முடியும். ஜனநாயகமென்றால் முக்கியமான விஷயங்களில் பஹிரங்க விவாதத்தைக்கொண்டு நடத்தப் படும் சர்க்கார். இவற்றில் மிக முக்கியமானது ஒரு நாட் டின் அயல் நாட்டுக்கொள்கை. யுத்தமா-சமாதானமா என்ற விஷயம் அயல் நாட்டுக் கொள்கையைப் பொறுத் திருக்கிறது. ஆனால் இதுதான் பரம ரகசியமாகக் கருதப் படுகிறது. யுத்தம் துவங்கும் வரையில் சாதாரணப் பேர் வழிகளுக்கு எவ்விதத் தகவலும் தெரிவதில்லை. அவன் அதற்காகக் கவலைப்படுவதும் கிடையாது. எனவே யுத்த மேற்பட்டபின் அவன் எதையும் செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டுப் போகிறது. எனவே கூடுமான வரையில் அந்நிய நாட்டு விவகாரங்களைப் பஹிரங்கமாக நடத்த வேண்டும்; எவ்விதமான ரகசிய உடன்படிக்கைகளும் கூடாது. இது என்னுடைய யோசனை. சென்ற யுத்தத்

தின் சரித்திரமும், தற்போது நடக்கும் யுத்தத்தின் சரித்திரமும் இரகசிய ராஜ தந்திரத்தில் ஏற்படக்கூடிய விபரீதத்தை நன்கு விளக்குபவையாகும். பிரான்ஸ் ஏன் திடீரென்று வீழ்ச்சியடையவேண்டும்? ரஷ்யாவும்—ஜெர்மனியும் பரஸ்பரம் ஏன் நேச ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டும்? இப்போது அவ்விரு நாடுகளுக்கிடையே யுத்தமேன்? இது வரையில் அமெரிக்கா யுத்த விஷயத்தில் வாளா விருப்பானேன்? துருக்கியும், எகிப்தும் இதுவரை ஏன் நடு நிலைமை வகிக்கவேண்டும்? அயர்லாந்து ஏன் இன்னும் நடு நிலைமை வகித்து வருகிறது? இக்கேள்விகளெல்லாம் "ஏன்" என்றே தான் எதிரொலிக்கின்றன.

பொதுவான ராஜ தந்திர முறையை அனுஷ்டித்திருந்தால் தரமா யிருந்திருக்கும்.

7-7-'41.

## II

யுத்தக் கொடுமைகளைப் பற்றியும், அவற்றைத் தடுப்பது பற்றியோ, வேகத்தைக் குறைப்பது பற்றியோ எழுதும் போது ஒரு எண்ணம் மனத்தில் உதிக்கிறது. விஞ்ஞானத்தைத் தற்கால யுத்தத்தில் துஷ் பிரயோகம் செய்யவில்லையா? மனித வர்க்கத்தின் ஆரம்பத்தில் மனிதன் மனிதனோடு சண்டையிட்டான். அதாவது வில்கள், அம்புகள் முதலிய பழைய கருவிகளை வைத்துக்கொண்டே அவர்கள் சண்டையிட்டார்கள். ராமாயணம், மஹாபாரதம் இவற்றில் அஸ்திரங்கள், சாஸ்திரங்கள் இவற்றைப்

பற்றியெல்லாம் பிரஸ்தாபித்திருப்பதைக் கவனித்தால் தற்கால யுத்தத்தில் உபயோகிக்கப்படும் சில ஆயுதங் களைப்பற்றிய நினைவு ஏற்படுகிறது. ஆனால் தற்காலத்தில் பிரயோகிக்கப்படும் நாசகரமான ஆயுதங்களுக்கு அவை ஈடானவையல்ல.

உதாரணமாக விமானத்தை எடுத்துக்கொள்ளலாம். இது மிக்க விசேஷமான ஆராய்ச்சி. மனிதன் இயற்கையை வெற்றி கொண்டு அதைப் பயன்படுத்திக்கொண்டதற்கு இது ஒரு ருசு. பறவைகள்போலப் பறந்து திரிந்து, பல இடங்களுக்கும் சென்று இடம், பொழுது இவற்றை அடி யோடு லட்சியம் செய்யாமலிருப்பதென்பது ஓர் நூதன அனுபவம்; ஆச்சர்யகரமான உணர்ச்சி. விமானங்களைப் பிரயாணத்துக்கும், வியாபாரத்துக்கும் உபயோகித்து, மக்களின் வாழ்வைச் சந்தோஷமாக்கும்படி செய்யும் பக்ஷத்தில் அது ரொம்ப விசேஷம்தான். ராமாயணத்தில் "புஷ்பக விமானம்" என்பதுபற்றி நீ படித்திருக்கிறாய். ஆனால் அது ஜனங்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குக் கொண்டு சேர்ப்பதற்காகத்தான் உபயோகப் படுத்தப்பட்டது. ஜனங்கள் மீது குண்டெறியும் நோக்கத் தோடு ராவணன்கூட அதை உபயோகிக்கவில்லை. ஏற் கனவே நான் உனக்கு எழுதியதைப்போல ஜனங்கள் மீதும், கட்டிடங்கள் மீதும், விமானங்களிலிருந்து குண்டுகள் வீசு வதை அடியோடு நிறுத்தவேண்டும்.

அடுத்தபடியாகச் சப்மரீன். இது நாசவேலையைத் தரும் கொடிய ஆயுதம். கப்பல் படை ஆராய்ச்சியின் மூலம் கிடைத்த அதிசயமான கருவி இது. வெகுநேரம் வரையில்

ஜலமட்டத்துக்கடியில் இருந்து அங்கேயே ஸஞ்சாரம் செய்து ஜல மட்டத்துக்கு மேலே கப்பல்கள் செல்வதை யெல்லாம் கவனிப்பதென்றால் அது ஆச்சர்யமான விஷய மாகும். ஆனால் இதன் நோக்கம் என்ன? ஜனங்களைக் கொன்று சொத்துக்களை நாசமாக்குவதுதான். இது விஷசக்ரம்போன்றதாகும். டார்பிடோப் படகுகள், சுரங்க வெடிகள், மின்சாரச் சுரங்க வெடிகள்முதலியன இந்த வகையைச் சேர்ந்தவை

விஷவாயுவின் நிலைமை ஒருபுறம். இது பெரிய அசுரன்! வெடிகுண்டுகளைக்கொண்டு வான முழுதும் வாயுமய மாக்குவது. அல்லது பூமியிலிருந்து பீரங்கிகளினின்று விஷவாயுவைப் பிரயோகிப்பது. எதுவாயினும் இதில் வேற்றுமை கிடையாது. உயிருள்ள எதுவும் இதனால் கொல்லப்பட்டுவிடுகின்றன. விஞ்ஞானிகள் விஷ வாயுக் களை மென்மேலும் அபிவிருத்தி செய்து அதன் வேகத்தை அதிகமாக்குகின்றனர். தற்கால யுத்தத்தின் வேகம் அபார மாயிருக்கிறதென்பதற்கான காரணங்களை நான் மேலும் மேலும் அடுக்கிக்கொண்டே போகலாம். விஞ்ஞான ஆராய்ச்சியின் விபரீதங்கள் இவை. எனவே இந்த நாச கரமான காரியங்களுக்கெல்லாம் விஞ்ஞானம் ஓரளவு காரணமில்லையா என்று நினைக்க இடமுண்டல்லவா? இரண்டு வருஷங்களுக்கு முன்னால் பங்களூர் விஞ்ஞானக் கழகத்தில் பேசும்போது நான் அங்ஙனம் சொன்னேன். ஸர். ஸி. வி. ராமன், லேடி ராமன் இவர்களுடைய விருந் தாளியாகப் போயிருந்தபோது ஸர். ஸி. வி. ராமன் அக்கி ராஸனத்திலேயே நான் அப்போது பேசினேன். இதற்கு விஞ்ஞானத்தைக் குறை கூறிப் பயனில்லை யென்றும், அது

துஷ்பிரயோகம் செய்யப்படுகிறதென்றும் ஸர். ராமன் பலமாக எதிர் வாதம் செய்தார். அவர் சொன்னது வாஸ்தவம் தான். ஆனால் இந்தத் துஷ்பிரயோகத்தை எப்படித் தடுப்பது?

அறிவு நிரம்பிய விஷயங்களைப்பற்றி நமது முன்னோர்கள் ஒரு விதியை அனுஷ்டித்து வந்தார்கள். அதாவது அந்த விஷயங்களைத் தகுதியாகவுள்ள சிஷ்யர்களுக்கு மட்டுமே அதுவும் ரகசியமாக இருக்க வேண்டுமென்ற பிரமாணத்தின் பேரில் உபதேசிப்பார்கள். அவர்கள் செய்தது தவறா?

துரிதமாக அறிவு வளர்ச்சி ஏற்படுவதற்கு, சில இனங்களில் இது தடையாகும் என்றாலும் இதை நாசவேலையுடன் ஒத்திட்டுப் பார்க்கையில் இது ஒரு நஷ்டமா? இதற்கு ஒரு யோசனை நான் சொல்லுவேன். உலகத்திலுள்ள விஞ்ஞானிகள் எல்லாருமாக ஒன்று சேர்ந்து உபயோகமற்ற நபர்களிடம் விஞ்ஞானத்தின் மூலம் கிடைத்த அறிவைப் பரப்பி அதை நாசவேலைகளுக்கு உபயோகமாகாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். இது சுலபமானதில்லை. அப்படியாயின் அறிவு விஞ்ஞானிகளுடனேயே நின்றுவிடும்படியிருக்கும்.

பறக்கும் வித்தையையும், ஜனங்கள் மீது குண்டு வீசும் முறையையும் கற்றுக் கொள்ளாமல் போயிருந்தால் இன்றிருப்பதைவிட மனித வர்க்கத்துக்கு சந்தோஷம் குன்றிப் போய் விடுமா ?

எனவே விபரீத ஞானத்துக்கும், அறியாமைக்கும் வித்தியாசமுண்டு. நாசத்தை உண்டுபண்ணக்கூடிய இதர என்ஜின்கள் விஷயமும் இப்படியேதான். மனிதர்களி

டையே ஞான வளர்ச்சி வேண்டுமென்ற உணர்ச்சி நியாயமே. ஆனால் அதற்கு நம்மை அருகதையுள்ளவர்களாகச் செய்துகொள்ளவேண்டும். ஆனால் விஞ்ஞானம் மனித வர்க்கத்துக்கு க்ஷேமமில்லாமல் செய்து விட்டது என்னவோ உண்மைதான். இதை நிறுத்துவதற்கானகாலம் வந்து விட்டது. மனிதன் தானே இவ்விஷயத்தில் ஒரு கட்டுப்பாட்டை அனுஷ்டிக்கவேண்டும். அறிவு வளர்ச்சியை அழிவுக்கின்றி மனிதவர்க்கத்துக்கு ஆறுதல் தரும் இனங்களில் பிரயோகிக்கவேண்டுமென்ற உணர்ச்சி பெற்ற பிறகே மேற்கொண்டு புதிய விஷயங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் புக வேண்டும். இம்மாதிரியான தியாகத்தைச் செய்ய முடியுமாவென்பது சந்தேகமாக இருக்கிறது. ஆனால் விஞ்ஞானிகள் மனித வர்க்கத்துக்குச் செய்யவேண்டிய கடமை ஒன்றுண்டு. பிராங்கின் ஸ்டீன் அசுரன் கதையை அவர்கள் மறந்துவிடக்கூடாது.

மேல் நாட்டு விஞ்ஞானிகளைப் பற்றி எனக்கு விரிவாகத் தெரியாது. ஆனால் இந்திய விஞ்ஞானிகள் இத்துறையில் வழி காட்டியாக இருந்து ஓர் உதாரணமாக விளங்க வேண்டும்.

*8-7-'41.*

## யந்திர சாதனம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

இன்று நீ உன்னுடைய பள்ளிக்கூடத்தில் "மனிதனும் யந்திரங்களும்' என்ற விஷயமாக நடக்கும் விவாதத்தில் கலந்து கொள்ளப் போவதாக என்னிடம் தெரிவித்தாய். இது பற்றி உனக்கு நான் சில யோசனைகள் சொன்னேன். அவற்றை இங்கு எழுத்தில் குறிப்பிடுகிறேன்.

மனிதனுக்கும் யந்திரத்துக்கும் அவசியமான முரண்பாடு ஏதும் கிடையாது. பார்க்கப் போனால் யந்திரம் மனிதனுடைய சிருஷ்டி.–அது அவனுக்கு உடன்பட்டு நடக்க வேண்டியதாகும். ஆனால் மனிதனுக்கும், யந்திரத்துக்கும் அளிக்கவேண்டிய ஸ்தானத்தைப்பற்றியே முரண்பாடுகளெல்லாம்.

ஒருவிஷயத்தை உடனே ஒப்புக்கொண்டு விடலாம். உலக ஆரம்பத்தில் மனிதன் தன்னுடைய கை கால்களாலேயே எல்லாவற்றையும் செய்து கொள்ளும் படியிருந்தது. எனவே அதிகமாக எதையும் மனிதன் செய்ய முடியவில்லை. பெரிய வேலைகளைச் சாதிக்கவும் முடியவில்லை, உழைப்போ ரொம்ப அதிகம். முதலில் போக்குவரத்தை எடுத்துக் கொள்ளலாம். முன்காலத்தில் எல்லா இடங்களுக்கும் நடந்தே தான் செல்லவேண்டும். பிறகு மனிதர்கள் தூக்கிச் செல்லக் கூடிய பல்லக்குகள் ஏற்பட்டன.

பின்னர் குதிரை வண்டிகள், காளைகள், கோவேறு கழுதை கள், கழுதைகள், ஒட்டகங்கள், யானைகள் முதலியவற்றைப் போக்குவரத்துக்காக உபயோகப்படுத்திக்கொண்டார்கள். இதற்குப் பிற்பாடுதான் ரயில்வே என்ஜின்களும், ரயில் வண்டிகளும் ஏற்பட்டன. இதே மாதிரி கப்பல், ஸ்டீமர், விமானம் முதலியன உபயோகத்துக்கு வந்தன. இவை யெல் லாம் நல்லதுதான். இதில் இன்னொரு விஷயமும் இருக் கிறது. என்னுடைய பாலிய பருவத்தில் கட்டை வண்டியில் ஊருக்குப் போன நாட்களும், வழி நெடுக இயற்கை காக்ஷி களைக் கண்டானந்தித்துக் கொண்டே, கட்டுச் சாதம் சாப்பிட்ட தினங்களும் எனக்கு ஞாபகமிருக்கிறது. இது சௌக்கியமில்லாமல் தான் இருந்தது. ஆயினும் இதில் சில அழகான அம்சங்கள் இருக்கத்தான் இருந்தன.

அடுத்தபடியாக விளக்கும் நெருப்பும். மனிதன் ஆரம்ப காலத்தில் வெளிச்சம், நெருப்பு இவற்றிற்கு என்னவோ செய்து கொண்டு காலத்தைத் தள்ளும்படி இருந்தது. நாம் அந்தக் காலத்தைப் போல் இருக்கமுடியாது.

கிரஸின், பெட்ரோல், காஸ், மின்சார விசை இவற்றின் காரணமாக பிரச்னைகள் தீர்ந்துவிட்டன. பெட்ரோல், மின்சாரம் இவை இரண்டைமட்டும் சர்க்கார் ஏகபோக உரிமையாகக் கொண்டு எல்லா ஜனங்களுக்கும் மலிவாகக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். லாபம் முழுதும் சர்க் காருக்கு அதாவது ஜனங்களுக்குப் போய்ச் சேர வேண்டும். ஆகவே அவசியமான யந்திர சாதனத்தை உபயோகித்துக் கொள்வதற்கு ஆக்ஷேபனை கிடையாது.

மனிதனுக்கு உணவும் உடையும் அத்தியாவசியமான தேவைகள். உணவு சம்பந்தப்பட்ட வரையில், அதை யந்திர உதவி யிருப்பினும் மனிதர்களே பெருவாரியாக உற்பத்தி செய்ய வேண்டும். நமது நாட்டில், மக்களுக்கு விவசாயமே முக்கியமான தொழில். யந்திர சாதனத்தைப் பயன்படுத்திக்கொள்வதன் மூலம் இன்னும் இதை அபி விருத்தி செய்துகொள்ளலாம், ஆனால் அதன் உபயோ கத்தை ஓர் கட்டுப்பாட்டுக்குள் அடக்கி வைத்துக்கொள்ள வேண்டும். உணவு உற்பத்தி விஷயத்தில் மனிதனே முக்கியமான பாகத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

உணவு உற்பத்தியில் யந்திரங்கள் எவ்வளவு தீங்கை விளைவிக்க முடியும் என்பதற்கு நான் ஓர் உதாரணம் சொல்லுகிறேன். அரிசியில் இரண்டு வகை. மில்லில் குத்திய அரிசி ; கைக் குத்தல் அரிசி.

மகாத்மாஜினாலும் அகில இந்திய கிராமத்தொழில் சங்கத்தினாலும் கைக்குத்தல் அரிசியின் அனுகூலங்களை நாம் இப்போது உணர்ந்திருக்கிறோம்.

இதைப்பற்றிப் பிரஸ்தாபிக்கையில் ஓர் முக்கியமான விஷயம் எனக்குத் தோன்றுகிறது. தேக உழைப்பைக் கொண்டு செய்யும் தொந்திரவிலிருந்து மனிதன் விடுபட்டு, அவனுக்கு ஓய்வும், புத்தி வளர்ச்சிக்கான சந்தர்ப்பமும் கிடைக்குமானால் அது விசேஷம்தான். மனிதனுக்கு எல்லை யில்லாமல் சந்தர்ப்பங்களிருக்கின்றன. இன்னும் மனித னுடைய சக்தி உச்சத்தை அடையவில்லை. ஒரு காலத்தில் அந்நிலையை அவன் அடையக்கூடும். இதற்கு அவனுக்கு ஓய்விருக்கவேண்டும்.

ஆனால் இதிலும் இன்னொரு விஷயமிருக்கிறது. நமது நாட்டில் பெருவாரியாக யந்திரங்களை உபயோகிப்பது விரும்பத்தக்கதா? மேலே நான் சொன்னபடி உடை மனிதனுக்கு முக்கியமான தேவை. நெசவாலைகளும், நூல் நூற்றல் முதலியனவும் நம் நாட்டில் இருக்கின்றன. கைத்தறி நெசவாளர்களும் இருக்கின்றனர். கதர் வேறு இருக்கிறது. மில்கள் மேன்மேலும் வியாபகமடைந்தால் நமது நாட்டின் தேவை அனைத்தையுமே அவற்றால் பூர்த்தி செய்ய முடியலாம். ஆனால் லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்கள் வேலையற்றுப் போவார்கள். ஏற்கனவே இம் மாதிரி ஏற்பட்டுப் போயிருக்கிறது. இதனால் கதருக்கு எதிர்காலம் இல்லாமல் போய்விடும் ஆகையினால் இம்மூன்று உற்பத்திகளுக்கிடையே ஓர் ஒருமைப்பாடு இருக்கவேண்டும். யந்திரங்கள் மனிதர்களை அடியோடு விலக்கிவிடக் கூடாது.

நமது நாட்டில் நமது கிராமவாசிகளுக்கும் விவசாயிகளுக்கும் உபதொழில் தேடிக்கொடுப்பதென்ற மகத்தான பிரச்னை யொன்றிருக்கிறது. மேற்படி இரண்டு சாராரும் வருஷத்தில் பாதிக் காலம் வேலையில்லாமல் இருக்க வேண்டியிருக்கிறது. பறவை வளர்த்தல், பண்ணை நடத்துதல், தேனீ வளர்த்தல் இவற்றை யெல்லாம் யந்திரங்களைக் கொண்டு செய்து விட முடியாது. தொழில் துறையில் மிகவும் முற்போக்கடைந்திருக்கும், ஜப்பான், ஸ்விட்ஜர்லந்து போன்ற நாடுகளில்கூட சிறு தொழில்கள் இருந்தே வருகின்றன. கையால் தயாரித்த பொருள்களுக்கு யந்திரத்தால் செய்யப்பட்ட சாமான்களை விடத் தனியாக ஓர் அழகு இருக்கத்தான் இருக்கிறது. மலிவான

மின்சார விசையும், கிராமப் போக்குவரத்துக்கு நல்லவசதி இருக்குமாயின் நம் நாட்டில் நல்ல குடிசைத் தொழில்கள் ஏற்படக்கூடும்.

ஏழ்மை வேலையில்லாத் திண்டாட்டம் ஆகிய சிக்கல் மிகுந்த பிரச்னைகளை யந்திரங்கள் தீர்த்து விடவில்லை. இந்த விஷயத்தில் அமெரிக்காவும், ஐரோப்பாவிலுள்ள இன்னும் அநேகம் நாடுகளும் விலக்கில்லை. உண்மையில் இவ்வளவு பிரும்மாண்டமான தொழிற்சாலைகளில் பெரிய பெரிய யந்திரங்கள் இயங்குகின்றன. இவற்றால் சேரிகளில் கூட்டம் அதிகரிக்கின்றது. அதிகக் கூட்டத்தால் வியாதி பரவுகிறது. இப்பிரச்னையைச் சமாளிக்கவேண்டிய நிலைமையும் ஏற்படுகிறது.

மனிதனுடைய சோர்வைப் போக்கி, சுகத்தைக்கொடுக்க யந்திர சாதனங்கள் ஏற்படுவதை நாம் வரவேற்க வேண்டியதுதான். அத்தோடு மனிதரைப்பற்றிய நினைவையும் நாம் மறந்து விடாமல் யந்திரத்துக்கும் மனிதனுக்கும் ஓர் ஒருமைப்பாடு இருக்கும்படி பார்த்துக்கொள்ளவேண்டும்.

*9-7-'41.*

# திருமண நிகழ்ச்சிகள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

கண்யமான ஒரு விருந்தாளி என்ற முறையில் நேற்று ஒரு நண்பருடைய கல்யாணத்துக்கு நீ போயிருந்தாய். என்னுடனே அல்லது உன்னுடைய அம்மாவுடனே நீ அநேகம் கல்யாணங்களுக்கு போயிருக்கிறாய். ஆனால் தனியாக ஒரு கல்யாணத்துக்கு போவதென்பது இதுவே உனக்கு முதல் தடவையென்று நான் எண்ணுகிறேன். நீ அந்தக் கல்யாணத்தில் பரிபூர்ணமான சந்தோஷத்துடன் கலந்துகொண்டு தம்பதிகளை ஆசீர்வாதம் செய்திருப்பாய். கல்யாணங்களைத் தடபுடலாக நடத்த வேண்டுமென்பது ரொம்ப நியாயம்; அதற்கு எவ்வளவு நண்பர்களும், உறவினர்களும் வர வேண்டுமோ அவ்வளவு பேரும் போகவே வேண்டும்.

உறவினர்களும், நண்பர்களும் ஏன் போக வேண்டுமென்று சிலர் கேட்கிறார்கள். எளிய முறை என்றும், சிக்கன வாழ்வு என்றும் சொல்லிக்கொண்டுசிலர்சந்தோஷகரமான அம்சத்தை நசுக்கி விடுகின்றனர். இவர்களைக் கண்டால் எனக்குப் பிடிப்பதில்லை. ஆடம்பரமான, விகாரமான முறையில் செலவுகள் செய்ய வேண்டுமென்று நான் சொல்லவில்லை. இளமையுள்ள இரண்டு பேர்களை நெடு நாள் வாழ்வுக்குஉறவுஉண்டுபண்ணி வைக்கும் சந்தர்ப்பம் கல்யாணம். அது வரையில் அவ்விருவரும் அந்நியர்கள்.

தந்தை, தாய், குழந்தைகள், சகோதர சகோதரிகள் இவர்கள் கடவுளால் உறவினர்களாகச் செய்யப்பட்டிருக் கின்றனர். கல்யாணம் புது உறவு. எனவே கல்யாணத் தைக் கூடுமான வரையில் உன்னதமாகச் செய்து ரொம்ப சந்தோஷகரமான காட்சிகளை நிலவும்படி செய்வதவசிய மில்லையா ?

கல்யாணம் என்பது நம்மவர்களுக்கு ஓர் ஒப்பந்தம் அல்ல. அது ஒரு புனிதமான சடங்கு. சில சீர்திருத்தவாதிகள் சொல்வதைப்போல ஒரு புருஷனும் ஒரு ஸ்திரீயும் விவாக ரிஜிஸ்திராரிடம் சென்று ஓர் ஒப்பந்தம் செய்து கொள் வதில் பிரயோசனமில்லை. கிருஸ்துவ மதத்தில் இந்தச் சடங்குகளுக்கு ஆதரவிருக்கிறது. இஸ்லாத்தில் இது அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. இப்போது நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக மாறிவருகிறது. சாதா ரணமாகப் பெண்ணும் மாப்பிள்ளையும் குழந்தைகளில்லை. நம்முடைய கல்யாணங்களைப் பற்றியசில சம்பிரதாயங்களை வெகுவாக மாற்றிக்கொள்ள வேண்டும் அல்லது கைவிட்டு விடவாவது வேண்டும். மாலை மாற்றுவதற்காக மாமன் மார்கள் முன்வர மாட்டார்கள். அப்படியே அவர்கள் வருவதாகவே வைத்துக் கொண்டாலும் பெண்ணோ மாப் பிள்ளையோ மரியாதையாக தோள் தூக்குவதை வேண்டா மென்று தடுத்து விடுவார்கள். ஆயினும் மாலைமாற்றிக் கொள்வதென்பது மட்டும் தொடர்ந்து நடக்கும் என்று நம்புகிறேன். இது நல்ல சம்பிரதாயம். எதிர்காலத்தில் புருஷன் மனைவியாக வாழ்க்கை நடத்தப்போகிறவர்களுக்கு சங்கோஜம் நீங்கி பரஸ்பரம் பார்த்துக்கொள்ள மாலை மாற்றிக்கொள்ளும் முறை ஓர் சந்தர்ப்பத்தை அளிக்கிறது.

அடுத்தபடியாக ஊர்வலம்; முதலில் மாப்பிள்ளை அழைத்தல், பிறகு பெண்ணும் மாப்பிள்ளையும் சேர்த்து உட்கார வைத்து நடத்தும் ஊர்வலம். பெரிய நகரங்களிலுள்ளவர்களின் நடத்தை காரணமாக ஊர்வலத்தின் மதிப்புக் குறைந்து விட்டது. கிராமங்களில் இந்த சம்பிரதாயம் இருந்து வருகிறது. பக்கத்திலிருப்பவர்களுடைய நல்லுணர்ச்சியை அறிந்து கொள்ளுவதற்கும் ஆரதி எடுத்துத் தம்பதிகளை ஆசீர்வதிப்பதற்கும் ஊர்வலங்கள் சந்தர்ப்பத்தை அளிக்கிறது. நல்ல நாகஸ்வரக்கச்சேரி வைக்கும் பக்ஷத்தில் ஊர்வலங்கள் காரணமாக சங்கீத விருந்தையும் அனுபவிக்க முடிகிறது.

பல்வேறு ஜாதியாரும், மதத்தாரும் வெவ்வேறு விதமான முறையைக் கல்யாணங்களில் அனுஷ்டிக்கிறார்கள். காரணங்கள் எதுவாக இருந்த போதிலும் பிராமணர்களிடையே ஓர் விதமான அனுஷ்டானமுண்டு. அதாவது விவாகத்தில் இஷ்டமில்லாத ஒரு பிரம்மச்சாரி அவனைப் பெண்ணின் பெற்றோர்கள் போய் பிரார்த்தித்து தங்களுடைய கன்னியைத் தானமாக ஏற்றுக்கொள்ளும்படி கேட்பர்.

பாணிக்கிரஹணம் அக்னிஹோத்ரம் முதலியவைகள் முக்கியமான வைதிகக் காரியங்களாகும். இவற்றையெல்லாம் புரோகிதர்கள் உதவியோடு, விவாஹத்துக்காக அழைக்கப்பட்ட வருந்தினர் முன்பாக நடைபெறும்.

மந்திரங்களெல்லாம் ரொம்ப முக்கியமானவை. கிருஹஸ்தன் என்ற முறையிலும், தம்பதிகள் பரஸ்பரம் உன்னத

மான காரியங்களைச் செய்ய வேண்டி யிருக்கிறதென்பதை அறிவுறுத்தும் மந்திரங்கள். மந்திரங்களின் அர்த்தத்தை தெரிந்துகொண்டு உரிய காலத்தில் உனக்குப் போதிக்கலாமென்று நம்பி யிருக்கிறேன்.

கல்யாணத்துக்கு அடுத்த நாலுநாட்களிலும் தம்பதிகள் அக்னிபூசை செய்கிருர்கள். இது வேத கால சம்பிரதாயம். இதைப் பெண் வீட்டிலேயே செய்கிருர்களாயினும் மாப்பிள்ளை வீட்டிலேயேதான் செய்ய வேண்டும்.

நாலுநாட்களும், ஏன் ஐந்தாவது நாள்கூட நலங்கு, ஊஞ்சல் இவை இரண்டும் நடக்கும். இதைப் பார்ப்பதில் எனக்கு ரொம்ப இஷ்டம். உனக்கும் இது பிடித்திருக்கும் என நம்புகிறேன். இவை மிகவும் சந்தோஷகரமான வைபவங்கள். இதன் முக்கிய நோக்கம் என்ன தெரியுமா? மணமகனும், மணமகளும் பரஸ்பரம் ஒருவரையொருவர் நன்கு தெரிந்துகொண்டு, விளையாடவும், சங்கோஜத்தைவிடவும் இவ்வைபவங்கள் உதவுகின்றன. இந்த சமயங்களில் வீட்டில் நன்ருகப் பாடும் ஸ்திரீகள் பாடிஞல் சந்தோஷத்துக்கு அளவே கிடையாது. சமீப வருஷங்களில் நான் சில கல்யாணங்களில் ஒரு விஷயத்தைக் கவனித்திருக்கிறேன். கிட்டிய பந்துக்கள் உள்பட விருந்தாளிகளெல்லாம் சாப்பாடு காப்பி முதலியவற்றிலேயே அதிகக்கவனம் செலுத்துகின்றனர். அவர்களுக்கு நலங்கு, ஊஞ்சல்போன்ற சந்தோஷகரமான வைபவங்களில் கவனம் இருப்பதில்லை. சில சமயங்களில் அவர்கள் இந்த வைபவங்களைத் துரிதப்படுத்தி சீக்கிரம் சாப்பிடலாமென்றும் சொல்லுவர். இவர்களெல்லாம் சொல்வது அடியோடு தவறு. ஒரு யுவனும், ஒரு யுவதியும்

ஒரு முறைதான் கல்யாணம் செய்து கொள்கின்றனர். அவர்கள் பூர்ண சந்தோஷமாயிருக்க அனுமதிக்க வேண்டும். நாமும் அவர்களுடன் சந்தோஷமாகஇருப்பதன் மூலம் அவர்களது சந்தோஷத்தைப் பெருக்க வேண்டும்.

நான்கு நாள் கல்யாணம் கஷ்டமான காரியம். ஆனால் அது விசேஷமானதுதான். சந்தோஷகரமான திருமணம் மனித வர்க்கத்துக்கு உகந்ததொரு அம்சம்.

*10-7-'41.*

## பெண்களும் உயர்தரக் கல்வியும்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நேற்று நீ என்னிடம் தெரிவித்தபடி பெண்களும் உயர் தரக் கல்வியும் என்பது பற்றி இங்கு எழுதுகிறேன். இவ் விஷயத்தில் உனக்குத் திட்டமான அபிப்ராயங்கள் உண் டென்பதை நான் அறிவேன். கொள்கைகள் சம்பந்தப் பட்டமட்டில் நீ சொல்வது வாஸ்தவமே. புத்தி வளர்ச்சி பெற்று ஞானத்தைச் சம்பாதித்துக்கொள்ளும் விஷயத்தில் ஆண்களாயினும் சரி பெண்களானாலும் சரி அதில் வேற்றுமை இல்லை. சாதாரணமான பெண்ணுக்கோ ஆட வர்களைப் போலன்றி வேறு விதமான கடமையிருக்கிறது. பெண் தாயாவாள். வீட்டுக்கு அவள் லட்சுமிபோல. இந்த ஸ்தானத்தை ஆடவர் வகிக்க முடியாது. நமது நாட்டில் பெண்களுக்குள்ள தாய்மை அந்தஸ்தை மேல்நோக்காகப் பார்க்கும்போது குறைவாகக் காணப்படினும் அது அங்ஙனம் இருக்கவேண்டியதே யில்லை. இத் தவறுக்கு ஆடவர் விடை தந்தாகவேண்டும். பெண்களுக்கு சம அந்தஸ்து கொடுத்து நடத்துவதன் மூலம் ஸ்திரீகள் தங்கள் குடும்பத்தைக் கண்டு கண்யமுற்றுச் சுய மரியாதையுடன் இருக்கும்படி செய்யவேண்டிய வேலை ஆடவருடையது.

எனவே பெண்களின் உயர்தரக் கல்வி எனும்போது மேலே சொன்ன விஷயங்களை மனதில் கொண்டு கவனிக்க

வேண்டும். நமது பெண்கள் எவ்வளவு மேல் படிப்பு வேண்டுமாயினும் படிக்கட்டும். நான் வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் ஒன்று. பெண்களும் அவர்கள் விஷயத்தில் பொறுப்பேற்றுக் கொண்டிருப்பவர்களும் பெண்களெல்லோரும் சம்பாதிக்க வேண்டியவர்களில்லை யென்பதையும், குழந்தைகளை நன்கு வளர்க்கவேண்டிய பொறுப்பு அவர்களுக்கிருக்கிறதென்பதையும் உணர வேண்டும். ஸ்திரீ தன் கணவனுக்குக் குடும்பத்தில் உதவி யாக இருக்கவேண்டுமேயன்றி அவனது சிரமத்தை இரட்டிப்பாக்கக் கூடாது. இதையும் அறிவது அவசியம்.

பெண்களுக்கு உயர்தரக் கல்வி வேண்டுமென்றால் காலேஜ் படிப்பு வேண்டுமென்ற அவசியமா? கல்வி என்பது ஆயுள் பூராவும் செலவிடவேண்டிய முறை. கல்விக்குப் புத்தகங்கள் மட்டுமே மார்க்கம் என்பது கிடையாது. தொழில் துறையில் உபாத்தியாயராக இருப்பவர்கள்தான் உபாத்தியாயர் என்பதும் இல்லை. பரீட்சைகளும் பட்டங்களும் மட்டும் கல்வியின் சின்னங்களில்லை. பிரபஞ்சம், இயற்கை வாழ்க்கை இவையெல்லாம் பெரிய ஆசிரியர்கள். நாம் வாழ்கிறோம்; வாழ்வின் மூலம் கற்கிறோம். "இதையே ஆடவர்கள் விஷயத்திலும் ஏன் அனுஷ்டிக்கக்கூடாது?" என்று நீ கேட்கலாம். அவர்கள் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. தொழிற் பயிற்சியை அவர்கள் அடையவேண்டும்.

கல்வி இல்லாமலேயே இரண்டு பெரிய ஸ்திரீகள் என் வாழ்க்கையை எப்படி உருவாக்கினார்கள் என்பதைச் சொல்கிறேன் கேள். இரண்டு உதாரணங்கள், என் அம்மாவும், பாட்டியும். இருவருக்கும் எழுதவோ, படிக்கவோ,

கணக்குப் போடவோ தெரியாது. ஆனால், உன்பாட்டி இதிஹாசம், புராணம், இவற்றிலிருந்து ஒப்பற்ற கதைகளை வெகு சாதுர்யமாக எனக்குச் சொல்லுவாள். அவளுக்கு வைத்தியம் ரொம்ப நன்ருகத் தெரியும். குழந்தைகள் வியாதிகள் எல்லாவற்றிற்கும் அவளே பரிகாரம் செய்து கொடுத்துக் குணமாக்கிவிடுவாள். அவள் ஒரு பெரிய குடும்பத்துக்குத் தாயாராக இருந்து எங்களையெல்லாம் பக்ஷமாகவும், புத்திசாலித்தனமாகவும் கவனித்து வந்தாள். நாங்கள் அவளையே 'அம்மா' என்று அழைப்போம்.

அடுத்தபடியாக என் அம்மா; அதாவது உன் பாட்டி. அவளுக்கு நான் என்ன செய்யக்கூடாது? 32-வது வயதில் அப்பா தவறிப்போய்விட்டார். பெரிய குடும்பம்; ஐவேஜு சொல்பம். உதவிக்கு யாரும் இல்லை. கிட்டிய பந்துக்கள் விரோதம். இந்த நிலையில் அவள் எங்களையெல்லாம் முன்னுக்குக் கொண்டுவந்து இதற்காகத் தன்னையே அர்ப்பணம் செய்துகொண்டாள். குடும்ப விவகாரங்களைத் திறமையாகவும், தைரியமாகவும் கவனித்து நடத்திஞள்.

படிப்பில்லாத ஆடவர்களிடையேகூட இது போன்ற உதாரணங்களைச் சொல்லலாம். ஆனல் உயர்தரப் படிப்பு படிக்கும் சிறுவர்களுக்கு எதிராக இந்த வாதத்தை உபயோகிக்கக்கூடாது. இதைப் பெண்கள் விஷயத்திலும் சொல்லக்கூடாது என்று நீ சொல்வாய். ஒப்புக் கொள்கிறேன். காலேஜ் படிப்பில்லை என்பதற்காக பெரிய சந்தர்ப்பங்கள தவறிப்போய்விடாது என்றுமட்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஹிந்தி, தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய பல பாஷை இலக்கியங்களிலே நமது பெண்கள் எவ்வளவு மேலான

படிப்பைப் பெறலாமோ அவ்வளவையும் பெறவேண்டு மென்பது என் விருப்பம். இவைகளில் எல்லாம் அல்லது ஒரு சில வற்றிலாவது நீ நிபுணத்வம் அடையவேண்டு மென்பது என் ஆசை. உலக விவகாரங்களை அறிய உலக சரித்திரம் பூகோளம் இவற்றை நீ தெரிந்துகொள்ள வேண்டும். விஞ்ஞான விஷயத்தையும் அறிய வேண்டும். குடும்ப சுகாதாரம், பொது சுகாதாரம் இவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும். நமது தேச சரித்திரம், பூகோளம், அரசியல் முதலியவற்றை நன்கு தெரிந்துகொள்வதவசியம். சங்கீதம், சித்திரம் இற்றில் ஏதாவது ஒன்றையேனும் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். புத்தகத்தின் மூலம் மேற்கொண்டு விஷயங்களைக் கிரஹித்துக்கொள்ளும் வகையில் நீ கல்வி அறிவைப் பெற வேண்டும். தற்கால பிரச்னைகளை நெருங்கியவர்களுடன் விவாதிக்கும் சக்தி வேண்டும்.

இவையும் வேண்டும். இன்னும் அதிகமாகவும் வேண்டும். இருப்பினும், பொதுவாக காலேஜ்களில் ஸ்திரீகள் சேர் வதை நான் ஆதரிக்கவில்லை. ஒரு காலத்தில் அவர்கள் மெட்ரிகுலேசன் வகுப்புவரை படிக்கவேண்டுமென்று நினைத்தேன். அந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டு, பெண்கள் இண்டர் மீடியேட்வரை படிக்கலாமென் றெண் ணுகிறேன். அந்த மனமாற்றத்துக்கு நீயேதான் காரணம். கணவன் சம்மதப்பட்டால் பி.ஏ., பி.ஏ., ஆனர்ஸ் வரை கூடப் படிக்கலாம். இது என் அபிப்பிராயம், நீ ஒப்புக் கொள்கிறாயா?

பிறகு விவாதிப்போம்.

11-7-'41.

# குடும்பமும் ஹாஸ்டலும்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பதினெட்டாந் தேதியன்று சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தில் "மாணவர்கள் ஹாஸ்டல் வாழ்க்கையும்—வீட்டு வாழ்க்கையும்" என்ற விஷயமாக நடக்கப் போகும் விவாதத்தில் நீ கலந்துகொள்ளப்போவதாக அறிகிறேன். நான் அதைக் கேட்க விரும்புகிறேன். நீ இவ் விஷயமாக எழுதியிருந்த கையெழுத்துப் பிரதியை என்னிடம் படித்துக் காட்டினுய். அதற்காக நான் உன்னை பாராட்டுகிறேன்.

இதர விவாதங்களில் உள்ளதைப் போலவே எந்த விஷயத்திலும் உண்மை என்பது ஒரே பக்கத்தில்தான் இருக்கும் என்பதில்லை. இருதரப்புக்குமிடையே உண்மை இருக்கும். விவாதம் என்று வந்துவிட்டால் நீ ஏதாவது ஒரு பக்கத்தில் தான் இருக்க முடியும். ஆனுல், நாம் நமது நிலைமையை உணர்ந்து கொண்டு எதிர் தரப்பிலும் ஏதாவது விஷயங்கள் இருக்கக் கூடும் என்பதை அறியவேண்டும்.

இந்த விவாதம் சம்பந்தப்பட்ட வரையில் முக்கியமான அம்சம் இதுதான். நல்ல எதிர்கால முன்னேற்றம் வேண்டுமென்ற நோக்குடன் கவனித்தால் சிறுவருக்கோ அல்லது பெண்ணுக்கோ எது சிறந்தது? என்பது தான் அந்தமுக்கியமான அம்சம்.

நமது பையன்களும், பெண்களும், நல்ல பிரஜைகளாக வேண்டுமென்பதுதான் நமது விருப்பம். இந்த விஷயத்தில் குடும்பமும், பள்ளிக்கூடமும் செய்யவேண்டிய கடமை மகத்தானது. வெகு தொலைவுக்கப்பால் உள்ள பெற்றோர்களையுடைய குழந்தைகளை போர்டிங் பாடசாலைகளில் சேர்ப்பது நல்லது. குடும்பத்தில் இல்லாமல் வெளி அலுவல்களையுடைய பெற்றோர்களைப் பற்றியும், குழந்தைகள் விஷயத்தில் போதியபடி கவனம் செலுத்த அவகாசமில்லாத பெற்றோர்களைப் பற்றியுமே நான் இங்கு நினைத்து எழுதுகிறேன்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் குழந்தைகள் தங்கி வசிக்கும்படியான போர்டிங் பாடசாலை இருப்பது சிறந்த மாற்று. நீ உன்னுடைய கையெழுத்துப் பிரதியில் குறிப்பிட்டிருப்பதைப் போலவே தனிப்பட்ட முறையில் கவனம் செலுத்த முடியாதபடி போர்டிங் பாடசாலை மிக்க விரிவாக இருக்கக்கூடாது. மேலும், இங்குள்ள குழந்தைகளுக்குக் குறைந்தது இரண்டு மாதமாவது விடுமுறை இருக்க வேண்டும். அவர்கள் அதைத் தங்கள் பெற்றோர்களுடனோ நெருங்கிய பந்துக்களுடனோ செலவிடும்படி இருக்க வேண்டும். இதைத் தவிர இப் பாடசாலையிலுள்ள குழந்தைகள் பரஸ்பரம் பெற்றோர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளும்படி பயிற்சி அளிக்கவேண்டும்.

பள்ளிக்கூட வாழ்க்கைக்கு அனுகூலமாகக் குடும்ப வாழ்க்கையும் அமைவது அவசியம். சாதாரணமாகப் பெற்றோர்கள் முக்கியமாக தந்தையாயிருப்பவர்கள் தங்கள் குழந்தைகள் விஷயத்தில் செலுத்த வேண்டிய அளவில்

கவனம் செலுத்துவதில்லை. தாய்மார்களும் அவர்களுடைய முன்னேற்ற விஷயத்தைக் கவனிப்பதில்லை. பல குழந்தைகளையுடைய தகப்பனார், அவர்களைப்பற்றி வேண்டிய அளவு தகவலைத் தெரிந்துகொள்வது கிடையாது. இவை அனைத்தும் தவறு. குழந்தைகள் குடும்பத்தில் முக்யமானவர்கள். அவர்களைச் சரியாக உற்சாகப்படுத்தி வளர்த்தால், குடும்ப வாழ்வு அவர்களுக்கு செவ்வையாக உருவகமடையும்.

குழந்தைகளும் குடும்பத்தைப்பற்றிச் சீரான அபிப்பிராயம் கொள்ள வேண்டும். அதாவது தங்களுடைய கல்வி பூர்ண பக்குவமடைந்து செம்மை யடைவதற்கு வீடுகள் சிறந்த இடமென்பதை அவர்கள் உணரவேண்டும். பள்ளிக்கூடத்தில் மட்டும்தான் ஒழுங்காகவும் சீலத்தோடும் நடக்க வேண்டுமென்றும், வீட்டில் அப்படியிருக்கத் தேவையில்லை யென்றும் எண்ணக்கூடாது. பெற்றோர்களுக்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமை என்னவென்பதை அவர்கள் உணர்ந்து, பள்ளிக்கூடத்தில் தங்களுடைய அனுபவங்கள் என்னென்ன உண்டோ அவற்றை தாய் தந்தையரிடம் தெரிவிக்க வேண்டும்.

சிறு குழந்தைகளுக்கு "போர்டிங் பாடசாலை" யால் தெளிவான ஓர் அனுகூலம் உண்டு. அதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நமது குழந்தைகள் சீக்கிரமாகவும், போதியபடியும் கற்றுக்கொண்டு தாங்களாகவே தங்கள் காரியங்களைக் கவனித்துக் கொள்வதில்லை. அவர்களது உடைகளை யாராவது துவைத்துத்தர வேண்டியதிருக்கிறது; குளிப்பாட்டிவிட வேண்டியதிருக்கிறது; சில

சமயங்களில் உணவு ஊட்டும்படியும் நேருகிறது. அவர்களது வேலையைப்பற்றி நினைவுபடுத்தும்படியும் ஆகிறது. போர்டிங் படசாலையில் அப்படியில்லை. தானாகவே தன் காரியங்களைக் கவனித்துக்கொள்ள கற்கமுடியும். இதனால் தன்னம்பிக்கை ஏற்படுகிறது.

ஆனால் அளவிற்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம். சிறு குழந்தைகளை வீட்டு வாசனையின்றிப் பள்ளிக்கூடங்களிலேயே விட்டுவைப்பதும் கெடுதல்தான். வீட்டு வாழ்க்கையும் நல்ல பள்ளிக்கூட வாழ்க்கையும் கலந்திருத்தல் தான் நல்லது.

சரிசமதையானவர்களுடனும், பெரியவர்களுடனும் பழக நேருவதால், சிறுவர் சிறுமியரிடையே காணப்படும் துர்க்குணங்கள் மறைந்து, நல்ல அறிவு ஏற்படுகிறது. நற்குணங்கள் படிவதற்கும் இடமுண்டாகிறது. இதெல்லாம் நல்ல விஷயங்கள்.

வயது வந்த மாணவ மாணவிகள் சம்பந்தப்பட்ட வரையில் சில வருஷங்கள் "ஹாஸ்டல்" வாழ்க்கையில் இருப்பது சிறந்தது. இதை அனுபவத்தைக்கொண்டு சொல்லுகிறேன். பதினாறு அல்லது பதினேழு வயதுள்ள மாணவ மாணவிகள் ஹாஸ்டல் வாழ்க்கையில் இருக்கலாம். இதற்கிடையே குடும்பத்தின் மூலம் போதிய பயிற்சி கிட்டியிருக்கும். காலேஜ்களில் நீண்ட விடுமுறைகள் உண்டு. அப்போதெல்லாம மாணவர்கள் தங்கள் ஊர் போய் சேரலாம். ஹாஸ்டல் வாழ்க்கையில் நல்ல குணங்களைப் பெருக்கிக் கொள்ளலாம். நட்பு, தன்னம்பிக்கை, தன் விஷயத்தைத்

தானே நிர்வகிப்பது ஆகியவற்றை அபிவிருத்தி செய்து கொள்ளவும் கூடும்.

விவாதத்திற்கான இவ்விஷயம்பற்றித் திட்டமாக எந்த பதிலையும் சொல்லமுடியாது. ஆனால், உன் போன்ற வயதுள்ளவர்களுக்கு நல்ல குடும்ப வாழ்க்கைக்கும் பள்ளிக்கூட வாழ்க்கைக்கும் ஓர் ஒருமைப்பாடு இருக்கும் படிச் செய்வது விசேஷம்.

கடவுள் உன்னைக் காப்பாராக!

*12-7-'41.*

# மூட நம்பிக்கை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பழக்கம் காரணமாகச் சில வார்த்தைகள் திட்டுவதைப் போன்ற அர்த்தத்தைக் கொடுக்கின்றன. "மூட நம்பிக்கை" என்பதும் அவற்றில் ஒன்ருகும். "மூடநம்பிக்கையுள்ளவர்கள்" என்று நம்மை யாரேனும் சொன்னுல் வெட்கமாக இருக்கிறது.

சில விஷயங்களில் காரணமில்லாமல் நம்பிக்கை வைப்பதை மூடநம்பிக்கை எனலாம். இதற்குக் காரணம் என்னவென்று கேட்டால் நமக்குத் தெரியவில்லை. சிலரைப் பற்றியோ அல்லது சில விஷயங்களைப் பற்றியோ நமக்குத் திட்டமான உணர்ச்சி ஏற்படுகிறது. சில சம்பவங்களைப் பற்றியும், சில பிராணிகள் குறித்தும் அதே போன்ற அபிப்பிராயம் கொள்கிருேம். ஒரு வாரத்தில் சில தினங்கள் பற்றியோ, அல்லது நேரம் பற்றியோ ஒரு விதமாக அபிப்பிராயப்படுகிருேம். இவற்றில் சிலவற்றை நாம் ஏற்றுக்கொள்கிருேம். மற்றவற்றை விரும்புவதில்லை.

காரணரீதியாகப் பர்க்கையில் இவையெல்லாம் தவறென்றும், முட்டாள்தனமானதென்றும் நாம் சொல்லலாம் ஆனுல் இதனுல் எதுவும் விளங்குவதில்லை. ஏனெனில்

ஜனங்கள் அம்மாதிரியான நம்பிக்கையுடையவர்களாக இருக்கின்றனர். அப்படி இல்லாமல் இருப்பவர்கள் சொற்பம். ஹிந்துக்களாகிய நாம் சிலவற்றில் நம்பிக்கை அதிகம் கொண்டிருக்கிறோம், முஸ்லிம்களும், கிருஸ்துவர்களும் இதுபோலத்தான் நடக்கின்றனர் என்று நான் நம்புகிறேன். பார்க்கப்போனால் எல்லாரும் இதேபோல நம்பிக்கைகள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். 13-வது நம்பர் என்றால் ஐரோப்பியருக்கு திகில். ஏணிக்குக் கீழ் பக்கமாக ஐரோப்பியர் நடந்து செல்வதில்லை. வெள்ளிக்கிழமைகளைக் கண்டால் அவர்களுக்குப் பிடிப்பதில்லை. இன்னும் எவ்வளவோ உதாரணங்களைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

மற்றவர்களுக்குக் கொடுமை இழைக்கும்படியாகவுள்ள பழக்கங்களையும், நம்பிக்கைகளையும் நாம் விட்டுவது நலம். அதாவது மிருகபலி, சித்திரவதை, தானாகவே அலகு குத்திக்கொள்வது போன்ற காரியங்கள் இவற்றையெல்லாம் விட்டுவது விவேகம். நம்பிக்கை என்ற காரணத்துக்காகப் பிறருக்கோ அல்லது நமக்கோ கஷ்டம் விளைவிப்பது சரியல்ல. மிகவும் நல்ல காரியத்துக்காகத் தவிர்க்க முடியாது போனாலன்றி ஹிம்ஸை செய்துகொள்வது கடவுளுக்குப் ப்ரீதியல்ல. இதை நான் ஏற்கனவே உனக்கு எழுதி யிருக்கிறேன்.

மூட நம்பிக்கை மனிதனுடன் பிறவிக்குணமாக அமைந்திருக்கிறது. நமக்குத் தெரிந்த விஷயங்கள் சொற்பம். தெரியாத விஷயங்களோ அபாரம். நிரூபிக்கமுடியாத சந்தர்ப்பங்களில் நாம் நம்பிக்கைதான் கொள்ளவேண்டி

யிருக்கிறது. ஆகவே மனிதர்கள், தங்கள் பிள்ளைப் பிராயத்திலிருந்து சொல்லப்பட்டுவந்த விஷயங்களை நம்பிக் கொண்டே வந்திருக்கின்றனர்.

விக்ரஹ ஆராதனை என்பது ஒரு நம்பிக்கை. ஹிந்துக்களாகிய நாமெல்லோரும் கோயில்களிலும், ஸ்வாமி தரிசனத்திலும் நம்பிக்கை கொண்டிருக்கிறோம். வீட்டில் கூட நாம் படங்கள், ஸாளிக்கிராமங்கள் இவற்றை வைத்துப் பூஜிக்கிறோம். கடவுள் இருப்பதாக வைத்துக்கொண்டாலும் உயிரற்ற உருக்களில் அவர் வசிக்கமாட்டார் என்று காரணவாதி வாதிக்கலாம். இதில் அவருக்குத்தான் திருப்தி. எனவே அவர் நம்மெல்லோரையும் மூட நம்பிக்கை யுள்ளவர்கள் என்று கருதுகிறார்.

நாம் இதை ஒப்புக் கொள்ளவில்லை ; நாம் நமது வழக்கப்படி பூஜை செய்கிறோம். இது மூட நம்பிக்கையா ?

'இல்லை' என்பதே என்பதில்.

கடவுள் யார் ? எப்படி யிருப்பார் ? எங்கிருப்பார் ? என்ற விவரங்களை யாரும் திட்டமாக விவரிக்கவில்லை. அவர் எங்கும் நிறைந்தவர் என்று சர்வ மதங்களும் கூறுகின்றன. ஆகவே இந்த உருவங்களிலும் அவர் இருக்கத்தான் இருக்கிறார். இந்த விக்ரஹங்கள்தான் கடவுள் என்றால் யார் இல்லையென்று சொல்ல முடியும் ?

சிதம்பரத்தில் நடந்த ஒரு சம்பவம் எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது. அங்கு ஸ்ரீ நடராஜா கோயிலில் ஆயிரக் கால் மண்டபத்திலிருந்து ஸ்ரீ நடராஜ மூர்த்தியைத் தீக்ஷிதர்கள் எழுந்தருளச் செய்கின்றனர். இந்த தரிசனம்

வெகு விசேஷமானது. நான் ஸ்வாமியைத் தரிசித்தேன். ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஏக காலத்தில் கை தூக்கித் தொழுது "ஹர ஹர மகா தேவா" என்று கோஷித்தனர். அந்தச் சம்பவம் இன்று கூட என்னை நெக்குருகச் செய்கிறது. கடவுள் இல்லையென்று யார் சொல்ல முடியும்? நான் அப்படிச் சொல்லவே மாட்டேன்.

கல்மஷமில்லாத சில நம்பிக்கைகள் உண்டு. அவை யாருக்கும் கெடுதியல்ல. ஆனால் நன்மை பயக்கக் கூடியவைதான். தினசரி ராகு காலத்தில் எந்த நல்ல காரியத்தையும் ஆரம்பிக்கக் கூடாது. இது எவ்வளவு உண்மையானது என்பதை என் சொந்த அனுபவத்தைக் கொண்டு சொல்ல முடியும். இந்தக் காலத்தை விட்டால் வேறு கிடையாதென்னும்படி நமக்கு அவ்வளவு அவசர காரியம் எதுவும் கிடையாது.

சில தினங்களில் நாம் சில திசைகளை நோக்கிப் பிரயாணம் செய்யக் கூடாது. எந்த விஷயமாக இருந்தாலும் மூன்று பிராமணர்கள் சேர்ந்தாப் போல போகக்கூடாது. சில வருஷங்களுக்கு முன் நானுள்பட மொத்தம் மூன்று பிராமணர்கள் ஒரு ஏலத்துக்குப் போனோம். என்ன நடந்து விடும் என்று நினைத்தேன். ஆனால் ஏலம் ஒத்திப் போடப்பட்டு விட்டது! ஏதாவது ஒரு காரியத்தை ஆரம்பிக்கும் போது யாரேனும் தும்மினால் அக்காரியத்தை நிறுத்தி விட்டு பிறகே ஆரம்பிக்க வேண்டும். வடக்கு திக்கில் தலையை வைத்துப் படுத்துக் கொள்ளக் கூடாது. காலை வெயிலில் திரியக்கூடாது. காலையில் கருட தரிசனம் செய்வது நல்லது. இந்த நம்பிக்கைகளெல்லாம் யாருக்கும்

கெடுதி தரத் தக்கவையன்று. இவற்றில் சில சாஸ்திரீய முறையில் அவசியமானவையுமாகும்.

இதற்கடுத்தபடியாகச் சகுணங்கள். இவற்றை அனுஷ்டிக்கலாம். இது சிலருக்கு ஆட்சேபகரமாகவும் பொறுமையாகவும் இருக்கலாம். இருப்பினும் இதைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மொத்தத்தில் பல்லாண்டுகளாக மனிதர்கள் உலகமெங்கும் ஏதோ சில நம்பிக்கைகளைக் கடைப்பிடித்தே நடந்திருக்கின்றனர். இதைத் தொடர்ந்தும் அவர்கள் பின்பற்றுவாறென்றே தோன்றுகிறது. ஆகவே நாம் இதற்காக ஆத்திரமடையாமல் அவற்றின் மூலமும் அனுகூலமடைவோமாக.

*13-7-'41.*

## சமூக சீர்திருத்தம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

"சமூக சீர்திருத்தம்" என்று சொல்லுவது குறித்து நீ அடிக்கடி கேள்விப்பட்டிருப்பாய். இவ் விஷயமாக நான் உனக்கு இரண்டு, மூன்று கடிதங்கள் எழுத விரும்புகிறேன். இது முதல் கடிதம்.

ஜனங்களின் பொருளாதார நிலைமையை உயர்த்தவேண்டுமென்ற பிரச்னை சம்பந்தமாக இங்கு எழுதப் போகிறேன்.

இன்று அல்லது யுத்தத்துக்கு முன்னர் மேல் நாடுகளில் சமூகச் சீர்திருத்தம் என்று சொன்னால் பொருளாதார நிலைமையை அபிவிருத்தி செய்வதென்பது தான் அதன் கருத்து.

சமூகம் சீர்பட வேண்டுமானால் ஏழ்மை, பட்டினி, அறியாமை, தீராத நோய்கள், அதிகக் கூட்டம் இவையெல்லாம் இருக்கக் கூடாது என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வார்கள். பணத்தை இன்னதுதான் செய்வதென்று வகை தெரியாமல் விழிப்பவர்கள் மட்டுமே பணத்தில் மூழ்கியிருக்க வேண்டுமென்பதும் மற்றவர்களெல்லாம் சகிக்க முடியாத கஷ்டங்களில் உழன்று வாட வேண்டுமென்பதும் கடவுளின் நியதியல்ல. இந்தியா சீனாபோன்ற

அபிவிருத்தி யில்லாத இடங்களில்மட்டுமே இந்தமாதிரி யான நிலை என்பது கிடையாது. அமெரிக்கா, பிரிட்டன் போன்ற தொழில் வளத்தில் சிறந்த நாடுகளில்கூட இம் மாதிரியான நிலை இருக்கத்தான் இருக்கிறது.

பகவான் இந்தப் பூமியில் அநேக விஷயங்களைச் சிருஷ்டித் திருக்கிறார். இயற்கையே செழித்திருக்கிறது. மனிதர்கள் தன்னலமின்றியும், கொடுமையாக இல்லாமலும் இருக்கும் பக்ஷத்தில் உலகத்தில் எல்லோருக்கும் உணவுண்டு; உடையுமுண்டு. இவை அளவுக்கு அதிகமாகக் கூடக் கிடைக்கும்.

ஏழ்மையையும், அதனால் ஏற்படக்கூடிய கேடுகளையும் நிவர்த்திக்க வேண்டுமென்ற லட்சிய சித்திக்குக் குறுகிய மார்க்கம் எதுவும் கிடையாது. இந்தத் துன்பங்களுக் கெல்லாம் சோஸலிஸமே சிறந்த பரிகாரம் என்று நம் நாட்டில் சில நண்பர்கள் கூறுகிறார்கள். சமீப கால மாகப் பொதுவுடமையைப் பற்றிப் பேசுவது சம்பிரதாய மாகிவிட்டது. யுத்தம் ஏற்பட்ட பின்னரும், ரஷ்யா இதில் ஏற்றுக்கொண்டுள்ள பாகத்தை முன்னிட்டும் பொதுவுடமைப் பேச்சு சற்று மட்டுப்பட்டிருக்கிறது.

இந்திய நிலைமைகளை உணர்ந்த இந்தியன் என்ற முறையில் நான் சொல்லுகிறேன். சோஸலிஷமோ, அதைவிடத் தீவிரமாகவுள்ள கம்யூனிஸமோ நமக்குப் பயன் படாது. தனிப்பட்டவர் என்பதை அடியோடு குலைத்து எல்லோருக்கும் ஜீவனத்துக்கு வகை காண்பதாக உத்திர வாதம் அளிக்கும் சர்க்காரை உன்னதமாக்கி வைத்து, தனிப்பட்டவரை ஓர் அணுவாகச் செய்வதே மேற்படி

இரண்டு முறைகளுடைய அடிப்படைச் சித்தாந்தம். எந்த இடத்தில் இக் கொள்கைகள் உருவாகி அமுல் நடக்கிறதோ அங்கேயே அவை பரிபூர்ணமாக வெற்றிபெற வில்லை. அப்படியே அவை வெற்றி பெற்றிருக்கிறதென்ருலும் நமக்கு அவை உபயோகமில்லை. நல்ல உணவும், உடையும், இருக்க வீடும் கொடுத்து தேசத்தாரைக் காப்பாற்ற வேண்டுமென்பது மட்டும் நமது லட்சியமில்லை. தனிப்பட்டவர் முக்கியமானவர் என்பதையறிந்து நடக்க நாம் விரும்புகிருேம். இதற்கு மாருகவுள்ள தீவிர முறை எதுவும் நமக்குப் பொருத்தமாகப் படவில்லை.

சோஸலிஸத்தின் மூன்று முக்கிய அம்சங்கள் வருமாறு:— பொதுஜன முக்கியமான பொருள்கள் தனிப்பட்டவர் சொத்தாக இருப்பதை ஒழித்தல்; தொழிலாளர் சமாஜத்தினரே அரசுரிமை வகித்தல்; நமது சமூகத்தில் சதா இருந்துவருவதாக மார்க்ஸைப் பின்பற்றுவோர் கூறும் வகுப்பு யுத்தம் என்பது.

தனிப்பட்டவருக்குச் சொத்து உரிமை இருக்கவேண்டுமென்பது இந்தியர்களாகிய நமக்கு விருப்பம். நம்மில் மிக ஏழையாக இருப்பவர்கள்கூட சிறிய வீடுகளும் சொற்ப நிலமும் வேண்டுமென்று எண்ணுகின்றனர். நமது குழந்தைகள் அம்மாதிரி இடங்களிலே பிறந்து வளர வேண்டுமென்று ஆசைப்படுகிருேம். இது இயற்கை. ஆகவே தனிப்பட்டவருக்கு சொத்து இருக்கக்கூடாது என்ற சித்தாந்தத்தை இந்தியா ஒப்புக்கொள்ளாது. பணக்காரர் மற்றவர்களைச் சுரண்டாமல் தடுத்து அவர்கள் லாபமடை

வதைக் கட்டுப்படுத்தவே இம்முயற்சி எனும் பட்சத்தில் எல்லோரும் அதை ஒப்புக்கொள்ளுவார்கள்.

ஐரோப்பாவில் அநேகம் நாடுகள் தொழில் மயமாகி விட்டன. அங்கெல்லாம் பூசல். இது இந்தியாவுக்குப் பொருந்தியதல்ல. நமது தொழிலாளர்களின் சத விகிதம் 100-க்கு ஒன்றுகூட இல்லை. 100-க்கு 80 பேர் இங்கு விவசாயிகள். நமது நாட்டில் எந்த விதமான சர்வாதிகார முறையும் பயன்படாது. இவற்றையெல்லாம் நாம் பார்த் தாகிவிட்டது. அவை வேண்டாம்.

சோஸலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும்—'பணக்காரர் களுக்கும், பணமில்லாதவர்களுக்கும் போராட்டம் ஏற்படுவது நிச்சயம்' என்று சொல்கிறார்கள். நாம் அப்படி எண்ணவில்லை. ஏழ்மையும் அதனால் விளையக்கூடிய கொடுமைகளும் தீரும் முறையில் இந்தியாவிலுள்ள சமூகப் பொருளாதார நிலைமைகளைச் சரிப்படுத்த வேண்டும் என்று நாம் கருதுகிறோம். நாம் மேலே சொன்ன சச்சரவுகளை விரும்பவில்லை.

அஹிம்ஸா தர்மத்தை நாட்டின் அபிவிருத்தி விஷயத்தில் கைக்கொண்டிருப்பது மாத்திரம் இதற்குக் காரணமன்று. பார்க்கப் போனால் இந்த விஷயம் ஓர் சிறிய விவகாரமே. நமது நாட்டில் பொருளாதாரத் துறையில் ஏற்படும் சச் சரவானது வகுப்புக் கலவரமாக மாறி நாட்டின் முன்னேற் றமே சாத்தியமில்லாமல் தடைப்பட்டுப்போனாலும்போகும். அநேகம் மாகாணங்களில் நிலைமை அப்படி இருக்கிறது.

ஆகவே நமது நாட்டில் உடனே பொருளாதார சீர் திருத்தம் வேண்டும்; ஆனால் 'அது சோஸலிஸத்தின்

மூலமோ, கம்யூனிஸத்தின் மூலமோ வேண்டாம்; இதைப் பெறுவதெப்படி? எந்த லட்சியங்களை நாம் அடையவேண்டும்? சச்சரவில்லாது அவற்றை அடையலாமா? இவற்றையெல்லாம் அடுத்த கடிதத்தில் உனக்கு எழுதுகிறேன்.

*14-7-'41.*

## II

ஒருவரிடம் ஏராளமான ஆஸ்தி இருந்தால் எஞ்சியுள்ளதை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்று நம்மவர்கள் மத பூர்வமாகக் கடமையென்று நினைக்கிறார்கள். ஆகவே பணக்காரர்களுக்கும், பணமில்லாதவர்களுக்கும் சச்சரவுகளே இல்லாமல் பொருளாதாரத் துறையில் புது அமைப்பைச் செய்யலாம் என்பது என் நம்பிக்கை. நமக்குள் தற்கால மேல்நாட்டு நாகரீகம் புகுந்ததால் சமீப காலமாக மேலே சொன்ன அபிப்ராயத்துக்குள்ள மதிப்பு வெகுவாகக் குறைந்து விட்டதென்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் இதன் அடிப்படைக் கருத்து இன்னும் நிலையாக இருக்கிறது. நல்ல சுமுகமான சந்தர்ப்பங்களில் அக்கருத்து உருவகமடையும். மகாத்மா காந்தி இந்த அம்சத்தில் விசேஷ கவனம் செலுத்துகிறார்.

ஏற்கனவே நான் உனக்கு எழுதியதுபோலவே நமது பிரச்னை விவசாயத்தைப் பொறுத்ததாகும். தொழில் நிலையங்களிலுள்ளதைவிட மனித உழைப்பிலுள்ள அம்சம் முக்கியமானதாக இருக்கிறது. நிலமில்லாத தொழிலாளரின் பிரச்னை வெகு கஷ்டமானது. உத்தியோகத்தில் பாதுகாப்போ, குறைந்தபட்ச சம்பளமோ,

அல்லது இருக்க வீடோ அவர்களுக்கு கிடையாது. அவசியமானல் சட்டபூர்வமாகவாவது தீவிரமான ஓர் சீர்திருத்தத்தைச் செய்யவேண்டுமென்று நான் கருதுகிறேன். அதாவது விவசாயத்தில் ஈடுபடும் எல்லாத் தொழிலாளர்களுக்கும் நிலத்தில் அனுபோக பாத்தியதை இருக்க வேண்டும். பணமாக இல்லாமல் பண்டமாக அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தாருக்கும் ஊதிய மளிக்க வேண்டும். சௌகர்யமான வீட்டு வசதியும் தரவேண்டும். இதுபோன்ற முறை சில கிராமங்களில் அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. இதை எங்கும் பொருந்தும்படி செய்ய வேண்டும்.

நிலத்துக்குச் சொந்தக்காரராக இருக்கும் மிராசுதார் அவ்விடத்தில் இல்லாமற் போனல் அவருக்குச் சர்க்கார் கடுமையான தீர்வை விதிக்கவேண்டும். பண்ணை வைத்துக்கொண்டு நிலத்தைச் சாகுபடி செய்யும் நடுத்தர நிலையிலுள்ள குடியானவனுக்கு நாம் ஆக்கமளிக்க வேண்டும். விவசாயத் தொழிலில் நடுவிலுள்ள வியாபாரிகள்-தரகர்கள் அநேகர் இருக்கின்றனர். அவர்களுக்குத்தேவை எதுவும் கிடையாது. அவர்களையெல்லாம் விலக்கவேண்டும். நிலங்களுக்கெல்லாம் சர்க்கார் தரவாரியாகத் தீர்வை முறையை வைத்துக்கொள்ள வேண்டும். பெரிய மிராசுதாருக்கு விதிப்பது போலச் சிறிய நிலச்சுவான்தாருக்கு தீர்வை விதிக்கக் கூடாது. விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்துக்கும் வருமான வரி விதிக்க வேண்டும்.

இச் சீர்திருத்தங்கள் ஒருபுறமிருப்பினும் பெருவாரியாக நிலமில்லாத தொழிலாளர்கள் எஞ்சி நிற்பர். இவர்களுக்

கும் ஏதாவது செய்தாக வேண்டும். தரிசாகக் கிடக்கும் நிலங்களைச் சாகுபடிக்கு உபயோகிக்கவேண்டும். இது சுலபமில்லைதான். இருப்பினும் தீவிரமாகச் சாகுபடி செய்து பலவிதமான பயிர்களையும், வியாபாரத்துக்கான வேறு வகைப் பயிர்களையும் சாகுபடி செய்ய வேண்டும். இவ்வேலைகளில் எல்லாம் நடுவில் உள்ளவர்களும், முதலாளிகளும் மற்றவர்களைச் சுரண்டாமல் பார்த்துக்கொண்டு, உண்மையான விவசாயத் தொழிலாளர்களுக்கு ஆதரவளிக்கவேண்டும். இதற்கடுத்தபடியாக, ஏற்கனவே என்னுடைய முந்திய கடிதங்களில் உனக்குக் குறிப்பிட்டு எழுதியது போல நமது விவசாயிகளுக்கு நாம் குடிசைத் தொழில்களை ஏற்படுத்தித் தரவேண்டும். அதிருஷ்டவசமாக இந்தத் தொழில்கள் சம்பந்தப்பட்டவரையில் முதலாளிகள் சுரண்டுவதென்ற நிலை கிடையாது. இந்த அபிவிருத்தி வேலைக்காக மூன்று விஷயங்களைச் செய்ய வேண்டும்.

(1) கிராமங்களுக்கு மலிவான விகிதத்தில் மின்சாரவிசை கிடைக்கும்படி செய்வது; (2) கிராமங்களுக்கு நல்ல போக்குவரத்துகளை ஏற்படுத்துவது; (3) இடையே ஊடாடும் ஆசாமிகளை விலக்கி சாமான்களைக் கொள்ளவோ கொடுக்கவோ கூட்டுறவுச் சங்கங்களை ஸ்தாபித்தல்.

பெரிய தொழில்கள் சம்பந்தப்பட்டவரையில் அவற்றிற்கான பாதுகாப்புகள் இருக்கின்றன, அதாவது பண்டம் உபயோகிப்பவர் தேவைக்கு அதிகமாகக் கொடுக்கக்கூடிய தொழில்கள் அவை. ஆகவே தொழிலாளர்களைச் செவ்வையாக நடத்திக் குறைந்தபட்ச சம்பளத்தை நிர்ணயம்

செய்து, வேலைநேரம், சௌகரியமான இருப்பிட வசதி முதலியவற்றைச் செய்து தரவேண்டுமென்று வற்புறுத்தச் சர்க்காருக்கு உரிமை உண்டு. முதலாளிகளை விலக்கித் தொழில்களை யெல்லாம் தேசிய மயமாக்க வேண்டுமென்று சொல்லப்படுமானுல் இப்போது அதை நான் ஒப்புக் கொள்ளமாட்டேன். முன்பு நான் வேறுவிதமாக எண்ணினேன். ஆனுல் நான் நெருங்கி கூர்ந்து கவனித்தபோது, அதாவது ரயில்வேக்களைச் சர்க்கார் நிர்வகிப்பதைப் பார்த்ததிலிருந்து தொழில் நிர்வாகங்களைச் சர்க்கார் மட்டுமே தனியாக நடத்த முடியாது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நிலைமை அப்படி யிருப்பதே இக்கருத்துக்குக் காரணம். சம்பளமோ அல்லது லாபத்தில் ஒரு பகுதியையோ பெறும் மானேஜர்கள் ஸ்தாபனத்தின் வெற்றியைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆகவே அவர்கள் அலட்சியமாக இருக்கின்றனர். கொள்ளை லாபம் அடிப்பதைத் தடுத்து உத்தமமான நிலைமைகளில் தொழில் நடப்பதற்குக் கூட்டுப்பங்கு ஸ்தாபன முறையே பொதுவாகச் சிறந்ததென்று நான் எண்ணுகிறேன். இதில் 51 பங்கு சர்க்காருக்கும் 49 பங்கு தனிப்பட்ட பங்குதாரர்களுக்குமாக இருக்கலாம். இதனுல் அனுகூலம் உண்டு.

இதுபோன்ற நிலைமையில் பணக்காரர் ஏழை என்ற சச்சரவுக்கு அவசியமே இல்லை. இவற்றை யெல்லாம் விட இந்தியாவிலே நாம் ஜனநாயகம் வேண்டுமென்ற கொள்கை உடையவர்களாக இருக்கிரும். இம்முறை சரிவர வேலை செய்யுமானுல் — செய்யவேண்டும் — குறுக்கு வழிகளுக்கு இடம் கிடையாது. சட்ட சபைகள் சாதாரணமாக நடந்து, பொறுப்பு வாய்ந்த மந்திரி சபைகள் இருக்குமானுல்

தொழிலாளர்களின் நியாயமான காரியங்களுக்கு உத்தர வாதம் அளிக்கப்படும். அம் மந்திரி சபைகள் அவற்றைக் கவனிக்கவேண்டும்.

தொழில் மயமான நாடுகளிலுள்ள போராட்டங்களை இந்தியா ஏன் அனுபவிக்கவேண்டும்? அந்நாடுகளின் உதாரணத்தைக் கண்டு நாம் பயன் பெறவேண்டும். ஆகவே சச்சரவு ஏதுமின்றி நாம் இந்தியாவில் சமூகப் பொருளாதார சீர்திருத்தத்தைப் பெறலாம்; பெற வேண்டும்.

*15-7-'41.*

## III

சென்ற இரண்டு கடிதங்களிலும் பொருளாதாரத் துறையில் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள்பற்றி எழுதினேன். நமது நாட்டில் பொதுப்படையாகக் கருதப்படும் "சமூக சீர்திருத்தம்" எது என்பதுபற்றி இக்கடிதத்தில் எழுதுகிறேன்.

சமுதாயம் முழுதும் அபிவிருத்தி அடையும் வகையில் நமது ஜனங்களின் பழக்க வழக்கங்களைச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று நாம் நினைக்கிறோம். இந்தியாவில் இருப்பவர்களெல்லாரும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், அல்லது கிருஸ்துவர்கள்.

கிருஸ்துவர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் சமூக சீர்திருத்த இயக்கங்கள் இருப்பதாக நம் காதில் அதிகமாகப்படவில்லை. அவர்களெல்லாம் தற்கால முறைப்படி முன்னேற்றமடைந்தே இருக்கின்றனர். ஆண், பெண், இருபாலரும் நன்கு படித்திருக்கின்றனர். விவாக ரத்து

அவர்களிடையே அனுஷ்டானத்திலிருக்கிறது சொத்துரிமை, வார்ஸ் உரிமை முதலியவற்றில் அவர்கள் கொண்டுள்ள சட்டம் தற்கால ரீதிக்கு அனுசரணையாயிருக்கிறது.

முஸ்லிம்களிடையேயும் சமூக சீர்திருத்தம் பற்றிய பேச்சுவார்த்தைகளைக் காணும். அம்மாதிரி சீர்திருத்தம் அவர்களுக்குத் தேவையில்லை என்பதால் அல்ல. அவர்கள் பல தாரங்களை மணம் புரியலாம். ஒருவர் நான்கு ஸ்திரீகளை மணந்து கொள்ளலாம். ஆனால் அப்படி செய்து கொள்பவர்கள் சொற்பம். விவாகம், விவாக ரத்து, சொத்துரிமை, வாரிஸ் உரிமை முதலியவை பற்றிய சட்ட திட்டங்களெல்லாம் அவர்களிடையேயும் திருப்திகரமாக இருக்கின்றன.

ஆனால் அவர்களிடம் பர்தா முறை இருக்கிறது. இதை முஸ்லிம்கள் மட்டும்தான் அனுஷ்டிக்கின்றனர் என்பதில்லை. வட இந்தியாவில் அநேகம் ஹிந்துக்கள் கூட இம்முறையைப் பின்பற்றுகின்றனர்.

முகத்தை மட்டும் மறைத்துக்கொள்வதோடு நிற்காமல் அநேகம் லக்ஷக்கணக்கான ஸ்திரீகள் காற்றோ, வெளிச்சமோ இல்லாமல் அடைபட்டுக் கிடக்கின்றனர். இது பற்றி எழுதுவதற்குத் தயங்கவேண்டி யிருக்கிறது. இது போன்ற பெருவாரியான கட்டுப்பாட்டுக்கு குர்ரானில் ஆதாரமில்லையென்றே தெரிகிறது. பெண்கள் அடக்கமாக இருக்க வேண்டுமென்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். தற்கால முஸ்லிம் நாடுகளிலும் முக்கியமாகத் துருக்கியிலும் இந்த 'பர்தா' முறை கைவிடப்பட்டுவிட்டது.

இந்தியாவிலும் இதற்கு ஏதாவது செய்தாகவேண்டும். சட்டம் செய்வது சுலபமான பரிகாரமல்ல. ஹிந்துக்கள் சாரதா சட்டம், ஆலயப் பிரவேசச் சட்டம் முதலியவற்றிற்கு ஆளாக வேண்டியிருப்பினும் முஸ்லிம்கள் 'பர்தா' முறை பற்றியமட்டில் கடுமையாக ஆக்ஷேபிக்கின்றனர். 'பர்தா' முறைக் கட்டுப்பாட்டை அடியோடு ஒழிக்காவிட்டாலும் அம்முறையின் வேகத்தைத் தளர்த்தவாவது ஏன் சட்டம் செய்யக்கூடாது? இதற்காக முஸ்லிம்களே தான் முன் வந்து முயற்சி செய்யவேண்டும். முஸ்லிம் ஸ்திரீகள் பலரைக்கொண்ட அ. இ. ஸ்திரீகள் மகாநாடு இவ்விஷயமாகத் தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். ஹிந்துக்கள் 'பர்தா' முறையைக் அனுஷ்டிப்பதைச் சட்ட பூர்வமாகத் தடுக்கலாம்.

ஹிந்துக்களைப் பொறுத்தவரையில் சமூக சீர்திருத்தப் பேச்சு அநேக வருஷங்களாக இருந்து வருகிறது. இப்போது இது முக்கியப் பிரச்னையாகிவிட்டது. ஹிந்துக்கள் விவாகச் சட்டம், சொத்து, வாரிஸ் உரிமைகள், தீண்டாமை முதலிய பிரச்னைகள் பொதுஜனங்களின் மனத்தைக் கவர்ந்திருக்கின்றன. இவற்றை யெல்லாம் சீர்திருத்த சட்ட பூர்வமாகவோ அல்லது வேறு வழியிலோ முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன.

ஸ்திரீகளுக்கும்-முக்கியமாக பெண்கள், மனைவிகள் இவர்களுக்குச் சொத்துரிமை சம்பந்தமாக அளிக்க வேண்டிய ஸ்தானத்தைப் பற்றிய ஹிந்து சட்டத்தைச் சீர்திருத்தம் செய்வது அவசரம். சில்லரையாகப் பல சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பலன் என்னவோ மகிழ்ச்சி

தரத்தக்கதாயில்லை. ஸர். பி. என். ராவ் தலைமையில் இப்பிரச்னை முழுதையும் கவனித்து ஆராய்ச்சி செய்ய ஓர் கமிட்டியை நியமித்தது நல்ல காரியம்.

தற்கால அபிப்பிராயங்களுக்கு ஏற்ற முறையில் கூடிய விரைவில் இது சம்பந்தமான சட்டம் ஒன்று கொண்டு வரப்படும் என்று நம்பலாம். அவசியமான சீர்திருத்தம் என்னவெனில் ஹிந்து சமூகத்தில் முக்கியமாகப் பெண்ணுக்கும், மனைவிக்கும் சொத்துரிமை இருக்கும்படி செய்வதாகும்.

இந்தப் பிரச்னைபற்றி குறிப்பிடுகையில் ஹிந்துக்கள் விவாகம் சம்பந்தமாகச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய பிரச்னை பற்றி எனக்கு நினைவு வருகிறது. நம் சமூகத்தை தலைகீழாக்கிப் புதிதாக அமைக்க வேண்டுமென்ற கூற்றுக்குச் செவி சாய்க்க எனக்குப் பொறுமையில்லை. சீரான வகையில் பழைய கால சம்பிரதாயத்தை அனுஷ்டிப்பது நல்ல பலமுள்ளதாகும். பழத்தின் ருசியிலிருந்தே மரத்தின் தன்மையை நிதானிக்க வேண்டும். ஹிந்துக்களின் விவாகங்கள் பயனற்றதென்பதற்கில்லை.

சிலரைத் தவிர பால்ய விவாகம் என்பதெல்லாம் பழங்கால விவகாரமாகிவிட்டது. ரொம்ப நாள் கழித்தே கல்யாணம் நடக்கிறது. ஆனால் நான், வெகுகாலம் கழித்துக் கல்யாணம் செய்வதை விரும்பவில்லை. இது சுமுகமாக இல்லை. அநேகம் கஷ்டங்கள் வந்து சேருகின்றன. நமது இளம் குழந்தைகள் தங்கள் மனைவி, புருஷர்களை தெரிந்தெடுத்துக்கொள்ள லாயக்குள்ளவர்களா என்பது காலப்போக்கில்தான் தெரியவேண்டும். ஆனால்

தற்காலம் இருந்துவரும் முறைதான் எனக்குப் பிடிக்கிறது. அதாவது பெற்றோர்களே வரன் தேடுவதென்னும் முறை. ஆனால் இதில் கூட நாளாவட்டத்தில் மாறுதல் ஏற்படலாம்.

முன்னேற்ற நோக்கமுள்ள ஹிந்து ஸ்திரீகள் கூட விவாகரத்தை விரும்பவில்லையென்றுதான் நான் நினைக்கிறேன். நல்ல நாகரீகப் பண்புள்ள குடும்பங்களில் கூட கல்யாணங்கள் பற்றி அநேக விதமான பண விவகாரங்கள் ஏற்பட்டுப் போகின்றன. ஸ்திரீகளுக்குப் பொருளாதாரத் துறையில் ஓர் ஸ்தானம் ஏற்பட்டுப் போனால் இவைபோன்ற விவகாரங்கள் ஏற்படாது.

ஹிந்துக்கள் விவாகம் சம்பந்தப்பட்ட மட்டில் ["பாதி வ்ருத்தியம்"] கற்புநிலை முக்கியமானது. அருந்ததி, சாவித்திரி, சீதை இவர்களைப் பின்பற்றிய தர்மம் அது. அதை நாம் காப்பாற்ற வேண்டும்.

*16-7-'41.*

## தீண்டாமை விலக்கு

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

தீண்டாமையை விலக்க வேண்டும் என்பது குறித்து இந்தக் கடிதத்தில் எழுதப் போகிறேன். அநேகம் விஷயங்களில் நான் பழைய கால கொள்கைகளிலும், நம்பிக்கைகளிலும் பற்றுள்ளவன் என்பது உனக்குத் தெரியும். இருந்தும் கூட, பிறப்பிலேயே தீண்டத்தகாதவர் என்று கருதி ஒருவரை ஒதுக்குவதற்கு நியாயம் இருப்பதாகவோ அல்லது காரணமிருப்பதாகவோ நான் எண்ணவில்லை. நாம் ஒவ்வொருவரையும் தொடவேண்டுமென்றோ தொடக் கூடுமென்றோ சொல்லவில்லை. சிலர் ரொம்ப அசுத்தமாயிருக்கிறார்கள். நாம் ரொம்ப சங்கோஜப்படுகிறோம். அல்லது ஒதுங்கியிருந்து விடுகிறோம். ஆனால் பிறப்பிலேயே ஒரு சாரார் தீண்டத்தகாதவர்கள் என்று பெயரிட்டு ஒதுக்கிவைப்பதென்பதற்கு எவ்வித நியாயமும் கிடையாது.

சரித்திர பூர்வமாக நிறம், ஜாதி இவற்றால் உதித்த பூசல்கள் இதற்குக் காரணமாக இருக்கலாம். பூர்வ காரணம் எதுவாக இருப்பினும் இப்போது இதற்கு நியாயமில்லை. "சண்டாளர்கள்" என்று சொல்லி அவர்களை தீண்டத்தகாதவர்கள் என்று சொல்வது கொடுமை. அவர்கள் சண்டாளர்களல்ல.

இந்தியாவில் தற்கால சட்டதிட்டங்கள் காரணமாக ரயில், டிராம், முதலிய பொது வாகனங்களிலும், பொதுக் காரியாலயங்களிலும், தீண்டாமை என்பது இல்லாமலிருக்கிறது. சமீபகாலம் வரையில் ஹரிஜனச் சிறுவர்களைப் பொதுப் பள்ளிக்கூடங்களில் சேர்ப்பது கஷ்டமாயிருந்தது. ஆனால் ஹரிஜனச் சிறுவர்களை வகுப்பில் சேர்த்துக் கொள்ள மறுக்கும் பாடசாலைகளுக்குக் கிராண்டு கொடுக்கமுடியாது என்று சர்க்கார் சொல்லவே மேலே சொன்ன விஷயம் சரிப்பட்டுவிட்டது. இன்றும் சில இடங்களில் பொதுஜன அபிப்ராயம் முன்னணிக்கு வரவில்லை. அவ்விடங்களில் பொதுஜன அபிப்ராயத்தைச் சாதகமான தோரணையில் வளர்த்து உருப்படுத்த வேண்டும்.

சட்டம் தெளிவாகவும், சந்தேகத்துக்கு இடமில்லாத வகையிலும் இருப்பினும் சில இடங்களில் ரஸ்தா, குளம், கிணறு இவற்றைப் பொறுத்து சற்று கஷ்டங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. பொது ஜனங்கள் பணத்திலிருந்து பராமரிக்கப்படும் ரஸ்தா, ஜலம் முதலியவற்றை அனுபவிக்க முடியாமல் எந்தப் பிரஜைக்கும் உரிமை மறுக்கக்கூடாது. சட்டம் செவ்வையாக செய்யப்பட்டுளது. இருப்பினும் அந்தந்த ஸ்தலங்களில் எதிர்ப்பிருந்து வருகிறது. பணக்காரர்களாக இருப்போரும், செல்வாக்குள்ளவர்களும் சகிப்புத் தன்மையுடனில்லை. ஹரிஜனங்கள் பணிந்து போகின்றனர். ஜாதி ஹிந்துக்களும், ஹரிஜனங்களும் ஒன்றுபட்டு ஹரிஜன சேவா சங்கத்தின் உதவியைப் பெறும் பக்ஷத்தில் இந்தப் பிரச்னை துரிதமாயும், திருப்திகரமாயும் தீர்க்கப்பட்டு விடும்.

ஹரிஜனங்களின் தற்கால நிலைக்கு அவர்களே தான் பொறுப்பாளிகள் என்பது ஓரளவு உண்மைதான். அவர்கள் சுகாதார முறையைப் பின்பற்றி நடப்பதுடன் குடியை விட்டொழிக்கவேண்டும். தாங்களாக அவர்கள் குடியை விடாவிட்டால் கட்டாயத்தின் மூலம் அப்பழக்கத்தை அவர்களிடமிருந்து ஒழிக்கவேண்டும். மது விலக்கால் மற்ற சமூகத்தைவிட ஹரி ஜனங்களுக்குத்தான் அதிக அனுகூலம் கிடைத்திருக்கிறது. அதை அனுசரணையாகக் கொண்டு வாழ்க்கை நிலையை அபிவிருத்தி செய்து கொள்ளவேண்டும்.

ஹரிஜனங்கள் ஏழைகள். அதேபோல ஜாதி ஹிந்துக்களும் இருக்கின்றனர். இந்த நிலை நாட்டின் ஏழ்மை நிலையில் ஓர் அங்கம். இது பூராவாகச் சேர்த்து கவனிக்க வேண்டிய விஷயம். ஹரி ஜனங்களின் செல்வ நிலைமையை உயர்த்த விசேஷமாக ஏதாவது செய்யவேண்டும். ஹரி ஜனங்கள் அனைவரும் நல்ல விவசாயிகள். தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து கொள்ளவும், நூல்நூற்று நெய்து ஆடைகளைத் தயாரித்துக் கொள்ளவும் அவர்களுக்கு சகல வழியிலும் ஆதரவளிப்பதுடன் உபயோகமாகவும் ஓரிரு குடிசைத் தொழிலையும் அபிவிருத்தி செய்து கொள்ளச் செய்ய வேண்டும். இவற்றையெல்லாம் விட ஹரிஜனங்களுக்கு கல்வி போதிக்க வேண்டும். பொதுவாகவுள்ள பாடசாலைகளில் சேர்ந்து அவர்கள் படிக்க வேண்டும்.

சட்டசபைத் தேர்தலில் ஹரி ஜனங்களுக்குத் தனித் தொகுதி கூடாது. பொதுத் தொகுதியில் அவர்கள் ஓட்டுக் கொடுக்கவேண்டும். சில வருஷங்கள் வரையில்

சட்ட சபைகளிலும், ஸ்தல ஸ்தாபனங்களிலும் அவர்களுக்கு தனியாக இடம் இருக்கும்படி செய்யலாம். சென்னை நகரைத் தவிர, சென்னை மாகாண ஸ்தல ஸ்தாபனங்களில் ஹரிஜனங்களுக்கு விசேஷமாகத் தனித் தொகுதி ஒழிய வேண்டும்.

அடுத்தபடியாகக் கவனிக்க வேண்டிய பிரச்னை ஆலயப் பிரவேசம். ஆலயங்களிலும், தரிசனத்திலும் எனக்கு நம்பிக்கை அதிகம். ஆனால் ஹரி ஜனங்களை ஒரு வகுப்பாகக் கோயிலுக்குள் போகக்கூடாதென்பதற்கு நியாயம் எதுவுமில்லை. தேக சுத்தமாகவும், மனச்சுத்தத்தோடும் ஆலயங்களுக்குப் போகவேண்டுமென்பதை ஒப்புக்கொள்கிறேன். மலையாளத்தில் ஸ்னனம் செய்யாமல் யாரும் கோயிலுக்குள் போகக்கூடாது. இங்கும் அதேபோல ஓர் கட்டுப்பாட்டைச் செய்யலாம். ஆனால் கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்யக்கூடாது என்று யாரையும் தடை செய்யக்கூடாது. கடவுள் கருணை நிறைந்தவர். எங்கும் நிறைந்தவர். பின்னர் ஏன் இந்த வழக்கம் வந்தது? இதைப் பற்றி விசாரணை செய்வதில் லாபமில்லை. இம்முறை தென்னிந்தியாவிலிருப்பது போல வட இந்தியாவில் கிடையாது.

சில ஹரிஜனத் தலைவர்கள் ஆலயப்பிரவேசத்தை வெறுக்கின்றனர். அவர்கள் ஹரிஜனங்களின் பிரதிநிதியல்ல. சாதாரணமாகவுள்ள ஹரிஜன் இந்த உரிமை தனக்கிருக்கவே விரும்புகிறன். இதனால் ஹிந்து மதத்திலுள்ள களங்கம் நீங்கும். ஹிந்துமதம் பலமும் அடையும். இது கடவுளுக்குத் திருப்தியான சீர்திருத்தமும் ஆகும். ஆகவே

தான் மகாத்மாஜி தீவிரமாக இத்துறையில் சேவை செய்கிறார். திருவாங்கூர் மகாராஜாவும், ஸர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யரும் தைரியமாக ஆலயப் பிரவேசப் பிரகடனம் செய்ததற்காக அவர்களைப் பாராட்ட வேண்டும்.

இதன் முக்யாம்சத்தை நான் உணர்கிறேன். நீ பிறப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன்பு நான் திருவனந்தபுரம் போயிருக்கிறேன். ஸ்ரீ கன்யா குமரி ஆலய தரிசனத்துக்காக நான் போயிருந்தேன். இலங்கைக்கும் போயிருந்தேன். நான் ஆலயத்துக்குள் போகக் கூடாதென்று மரியாதையாகச் சொன்னார்கள். உண்மை பக்தருக்கு ஆலயப் பிரவேசம் மறுக்கப்பட்டால் எப்படி இருக்கும் என்பதை அப்போது நான் அறிந்தேன். நீ பிறந்த பிறகு அங்கு போனபோதும் அப்படியே நேரிட்டது. கூடிய சீக்கிரம் நாமெல்லோரும் அங்கு போய் தரிசனம் செய்யும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

சமூகத்தைப் பொறுத்துச் சட்டம் செய்வது பொதுஜன அபிப்பிராயத்தை வளர்க்க எவ்வளவு தூரம் உதவும் என்பது ஒரு பிரச்னை. அதைப்பற்றி எழுத ஆரம்பித்தால் கடிதம் நீண்டுவிடும் கூடியவரையில் சட்டம் பொதுஜன அபிப்ராயத்துக்கு உகந்ததாயிருக்கவேண்டும். சென்னை ஆலயப் பிரவேசச்சட்டம் சம்பந்தப்பட்ட வரையில் அபிப்ராய பேதம் இருக்கிறது. ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமை இருக்கவேண்டுமென்பது என் அபிப்ராயம். எப்படியும் ஆலயப் பிரவேச உரிமை வந்துவிட்டது. மதுரை ஸ்ரீ மீனாக்ஷியும், பழனியில் ஸ்ரீ ஆண்டவனும் ஹரிஜனங்களுக்குத் தரிசனம் கொடுத்து கருணைக் காட்டுகின்றனர்.

17-7-'41

# பெண்களுக்கு ஓட்டுரிமை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நான் உனக்கு எழுதி வரும் கடிதங்களிலெல்லாம் அரசியலைப்பற்றி அதிகமாக எதையும் பிரஸ்தாபிப்பதில்லை. ஆனால் பெண்களுக்கு ஓட்டுரிமை இருப்பது குறித்து எழுதும்படி நீ கேட்டிருப்பதால் அது சம்பந்தமாக உற்சாகத்துடன் எழுதுகிறேன்.

முற்போக்கடைந்த இங்கிலாந்து முதலிய நாடுகளில் வெகு நாள் வரையில் தீவிரமாகப் போராடிய பிறகுதான் பெண்களுக்கு ஓட்டுரிமை கிடைக்கும்படி யிருந்தது. ஆனால் இந்தியாவில் ஓட்டுரிமை பெண்களைத் தேடி வந்தடைந்திருக்கிறது என்று தான் சொல்ல வேண்டும்.

இந்தியாவுக்கு அரசியலைத் தயாரித்த பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய நாட்டில் நடந்ததை அனுசரித்துச் செய்ததன் காரணமாக இந்தியாவிலும் பெண்களுக்கு ஓட்டுரிமை கிடைத்தது. இந்தியப் பெண்கள் வாக்குரிமை வேண்டுமென்று விரும்பியதும் அதை இந்தியர்களெல்லாம் ஆக்ஷேபிக்காமல் உற்சாகமாக ஆதரிக்கவும் செய்தார்கள்.

ஓட்டு என்றால் என்ன?

ஜன நாயக சர்க்காரில் சாதாரணமான பிரஜையின் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு ஓட்டு ஓர் சாதனம்.

ஜெர்மனி அல்லது ரஷ்யா போன்ற சர்வாதிகாரிகளின் ஆதிக்கத்துக்குட்பட்ட நாடுகளில்கூட ஜனங்கள் ஏதாவது ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் ஓட்டுக் கொடுக்கிறார்கள். ஆனால் ஒரு தனி மனிதனுடைய கொடிய ஆட்சிக்கோ, அல்லது கட்சிப் பிணக்கை ஒட்டியோ அவர்கள் அங்கெல்லாம் ஓட்டுக் கொடுக்கும்படியிருக்கும். ஜனநாயக நாடுகளில்தான் உண்மையான ஓட்டுரிமை இருக்க முடியும்.

ஜனநாயகம் பல உருக்களில் இயங்கலாம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். பொறுப்புள்ள மந்திரி சபைகளை ஏற்படுத்துவதோ விலக்குவதோ போன்ற ஒரு வழி மட்டும் ஜனநாயகமல்ல. அமெரிக்காபோல சாஸ்வதமான ஆட்சியுள்ள நிர்வாகத்தையும் நாம் பெறலாம். ஆனால் மூன்று அல்லது ஐந்து வருஷங்களுக் கொருமுறை ஜனநாயக சர்க்கார் வாக்காளர்கள் முன்வந்து அவர்களுடைய அபிப்ராயத்தை ஓட்டுக்கள் மூலம் அறிந்துகொள்ளுவார்கள். ஓட்டர்கள் தங்களுக்கு எது உசிதமாகப்படுகிறதோ அதன்படி ஓட்டுக்கொடுக்கலாம். ஆகவே ஜனநாயக நாடுகளிலெல்லாம் வாக்காளர்கள்தான் உண்மையில் எஜமானர்கள்.

பெண்கள் பெரும்பாலும் ஆண்களுக்குட்பட்டவர்களென்றும் ஆகவே அனுஷ்டானத்தில் ஆண்களுக்கு ஒரு ஓட்டுக்குப் பதிலாக இரண்டு கொடுப்பதாக இருக்குமென்றும் இந்தியாவில் ஓர் ஆக்ஷேபம் தெரிவிக்கப்பட்டது. இது நமது பெண்களுக்கு நியாயம் வழங்கியதாகாது. படிக்கத் தெரியாத ஆண் ஓட்டர்களும் பெண் ஓட்டர்களும் இருக்கின்றனர். ஆயினும் அவர்கள் யதேச்சையாக ஓட்டுப் போடலாம். போடவும் போடுகிறார்கள். ஆண்களைப்

போல மற்றவர்களை நம்பியிருக்க வேண்டுமென்று அவசியம் பெண்களுக்கில்லை.

இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் காஞ்சீபுரத்தில் நடைபெற்ற மாகாண மகாநாட்டில் எனக்கு ஓர் உன்னதமான அனுபவம் ஏற்பட்டது. அப்போது டாக்டர் பெஸண்டின் பிரேரணைக்கு நான் ஓர் திருத்தம் கொண்டுவந்தேன். டாக்டர் பெஸண்டு செல்வாக்குடன் இருந்த காலம் அது. ஒரு புருஷனும், மனைவியும் அம்மகாநாட்டுக்குப் பிரதிநிதிகள். புருஷன் பிரும்மஞானி என்று நினைக்கிறேன். அவர் டாக்டர் பெஸண்டுக்குச் சாதகமாக ஓட்டுக்கொடுத்தார். புருஷன் எவ்வளவோ மறுத்தும் அவரது மனைவி எனக்குச் சாதகமாகவே ஓட்டுக்கொடுத்தார். இது ஒரு உதாரணம். ஆனால் இது நடந்து இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. இப்போது விஷயங்கள் ரொம்ப அபிவிருத்தி அடைந்திருக்க வேண்டும்.

சட்டசபைத் தேர்தல்களில் பெண்களுக்கு ஓட்டு உண்டு. அதுமட்டுமல்ல; அவர்களுக்குப் பொதுத் தொகுதியிலிருந்து சட்ட சபைகளில் விசேஷ ஸ்தானங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நல்ல காலம் பெண்களுக்குத் தனித் தொகுதியில்லை. அவர்களும் தனித்தொகுதி வேண்டுமென்று கோரவில்லை. சென்னை ஜனப் பிரதிநிதி சபையில் தனியாக ஒதுக்கப்படாத ஒரு ஸ்தானத்துக்கு ஸ்ரீமதி லக்ஷ்மி சங்கரய்யர் தேர்ந்தெடுக்கப்பட்டார். நான் திட நம்பிக்கையுடன் அவரை மேற்படி ஸ்தானத்துக்கு நிறுத்தினேன். அவர் ஜெயிக்கவும் ஜெயித்தார். ஸ்தல ஸ்தாபனங்களில் கூட பெண்களுக்குத் தனியாக ஸ்தானங்கள்

ஒதுக்கப்பட்டிருக்கின்றன. மொத்தத்தில் ஸ்தல ஸ்தாபனங்கள், சட்ட சபைகள் இவற்றிலுள்ள பெண் அங்கத்தினர்கள் தங்களுடைய கடமைகளை தீவிரமாக உணர்ந்து கஷ்டப்பட்டு உழைக்கிறார்கள். அவர்கள் அங்கேயெல்லாம் உபயோககரமான அங்கத்தினர்களாயுமிருக்கின்றனர். ஆனால் ஆடவர்களைப்போல பெண்கள் சேவை செய்வார்களா என்பதுபற்றி எனக்குச் சந்தேகம். இதை மிகுந்த மரியாதையுடனேயே தெரிவித்துக் கொள்கிறேன். மேல் நாடுகளில் கூட ஓரிரு இனங்கள் தவிர, பெண்களெல்லாம் பொது வாழ்வில் வெளிப்படையாக வெற்றி பெறவில்லை. இந்தியாவில்கூட இதே நிலைதான். இதற்குப் பெண்களைக் குற்றம் சொல்லிப் பயனில்லை.

பொது வாழ்வில் கடினமாக ஈடுபட்டுச் சேவை செய்வதற்கும் பெண்களின் தன்மைக்கும் உகந்தபடி நிலைமையில்லை. பொது வாழ்விலிருப்பினும் தாங்கள் பெண்கள் என்பதை அவர்கள் மறக்கக்கூடாது. புருஷர்களுடன் சம அந்தஸ்து வகிக்க வேண்டுமென்று உரிமை கொண்டாடும் அவர்கள், தங்களுக்குத் தனியாக உரிமை கொடுக்க வேண்டுமென்கிறார்கள். இதற்காகவும் அவர்களிடம் நான் குறைபட்டுக் கொள்ள முடியாது. அது அவர்களது சுபாவம்.

முன்னேற்றமடைந்த ஜனநாயக நாடுகளில் எந்த விதமாக உபயோகிக்கப்பட வேண்டுமோ அம்முறையில் ஓட்டுகள் உபயோகிக்கப்படுகின்றனவா? விவேகத்துடன் வெறுப்பு விருப்பின்றி ஆண்களோ பெண்களோ ஓட்டுப் போடத் தகுதி உண்டா? தேர்தலில் அடங்கியுள்ள பிரச்னையை அறிந்து சரியானபடி முடிவு செய்யக்கூடிய முறை

யில் அவர்களுக்குக் கல்வி அறிவுண்டா? நபர்கள், கட்சி பந்தங்கள் இவற்ருல் தேர்தல் பிரச்னை பாதிக்கப்படு கிறதா? இவையெல்லாம் அடுத்து எழுதும் கடிதங்களில் நன்கு பரிசீலிக்க வேண்டிய விஷயங்கள்.

போராட்டம் ஏதுமின்றி இந்தியப் பெண்களுக்கு ஓட்டு ரிமை கிடைத்திருப்பதற்காக அவர்களைப் பாராட்டவேண் டும். இந்த உரிமையை ஆண்களைப்போலவே அவர்கள் உபயோகிக்கிருர்களென்றே நான் நம்புகிறேன் நான் கலந்துகொண்ட தேர்தல்களிலெல்லாம், நீயும் உன் அம்மா வும் செய்த முயற்சி காரணமாக பெண்களெல்லாம் வெகு உற்சாகமாக என்னை ஆதரித்தார்கள். அவர்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். உங்கள் இருவருக்கும் நான் வந்தனம் செலுத்தவேண்டும்.

*18-7-'41*

## II

சென்ற என்னுடைய கடிதத்தின் முடிவிலே ஓட்டுக்கள் பற்றியும், அவற்றை உபயோகிக்கும் முறை குறித்தும் சில முக்கியமான விஷயங்களைத் தெரிவித்திருந்தேன். வாக்கா ளர் எழுதப் படிக்கத் தெரிந்தவராக இருந்துவிட்டால் இந்த விஷயம் அனுஷ்டானத்தில் ரொம்ப எளிதாக இருக் கும். ஆணே பெண்ணே ஓட்டுப்போடும் இடத்துக்குப் போகவேண்டியது. தங்கள் இஷ்டப்படி X போட்டு விடவேண்டும். அவ்வளவே. ஆனல் வாக்காளர்கள் இந்தியாவிலுள்ளதைப்போல ஆயிரக்கணக்காக படிக்கத் தெரியாதவர்களாக இருந்துவிட்டால் விஷயம் வெகு சிக்க லாகிவிடும்.

சென்ற பொதுத் தேர்தல்கள் நடந்தபோது சென்னையில் வர்ண ஓட்டுப் பெட்டிகளை வைக்கும் வழக்கம் ஆரம்ப மாயிற்று. காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கு மஞ்சள் பெட்டி. அவர்கள் தேர்தலில் ஜெயித்தார்கள். மற்ற கக்ஷிகளுக் கெல்லாம் மஞ்சள் வர்ணத்தைக் கண்டு பொறாமை. இதர மாகாணங்களில் அபேக்ஷகர்களுக்கு மிருகங்கள், புஷ்பங் கள், மரங்கள் இவற்றின் அடையாளங்கள் அச்சிட்ட ஓட் டுக்காகிதங்கள் கொடுக்கப்படும். எழுதப் படிக்கத் தெரி யாத வாக்காளர்கள் தங்கள் இஷ்டப்படி ஓட்டுப் போட லாம். இக்குறைபாடு சீக்கிரம் நிவர்த்தியாகி மேற் கொண்டு ஜனங்களுக்கு எழுத்தறிவு ஏற்படுமென்று நம்பு வோம்.

முன்னேற்றமடைந்த நாடுகளில் கூட சாதாரணமாக ஒரு ஓட்டர் எந்த விதமாக ஓட்டுக் கொடுக்க வேண்டுமோ அந்த மாதிரி கொடுக்கிறாரா என்பது பற்றித் திருப்திகர மாக என்னால் பதில் சொல்ல முடியவில்லை. காங்கிரஸ் தேர்தல்களில் ஈடுபடும் வரையில் தேர்தல்களிலெல்லாம் லஞ்சப் பழக்கம் இருந்து வந்தது. பஹிரங்கமாகத் தேர் தல்களில் பணம் கொடுக்கப்பட்டது. ஏதாவது குறை பாட்டைச் சொல்லிக்கொண்டு படிக்கத் தெரிந்த வாக்கா ளர்கள் கூட வாய் மூலமாகவே ஓட்டு கொடுத்து பணம் கொடுத்த அபேக்ஷகர்களைத் திருப்தி செய்தார்கள். இவை யெல்லாம் இப்போது வெகுவாகக் குறைந்து விட்டது. இதுபோன்று பணம் கொடுப்பது என்ற பழக்கம் இதர நாடுகளில் கிடையாது.

பணம் கொடுப்பது மட்டும் தான் லஞ்சமா? நம் நாடு உள் பட இதர நாடுகளிலெல்லாம் வண்டி, மோட்டார் இவை

களைக் கொண்டு வாக்காளர்களை அழைத்துச் செல்வது-ஓட்டர்களுக்குச் சிற்றுண்டி வழங்குதல் முதலியன சட்ட ரீதியாகத் தடுக்கப்பட்டிருக்கின்றன. இருந்தும் பணக்காரர்கள் ஏழைகளிடம் தங்களுடைய செல்வாக்கைப் பிரயோகிக்கிருர்கள். சாதாரணமாகவுள்ள ஓட்டர், ஓட்டுக்கொடுக்க விரும்புவதில்லை. அவரைத் தூண்டி ஓட்டுப் போடச் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே, வண்டிகள், மோட்டார்கள் ஆகிய சாதனங்களை அதிகமாகவுள்ள அபேக்ஷகருக்கு அனுகூலமாயிருக்கிறது நிலைமை. பணக்காரர்கள் வாக்காளர்களுக்கு உபசாரங்களை நடத்துகின்றனர்.

இவையெல்லாம் இல்லாமலேயே தீவிரமான போட்டியுள்ள தேர்தலில் பிரசாரச் செலவே அதிகமாகிவிடும். பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள், ஸினிமாக்காக்ஷி விளம்பரங்கள் இவற்றிற்கெல்லாம் பணச்செலவு. சென்னை நகரில் இந்தியா சட்ட சபைக்காக நடந்த என்னுடைய தேர்தலில் பெருந்தொகை செலவாயிற்று. வாக்காளர்கள் என் விஷயத்தில் உற்சாகமாக இருந்தனர். தாங்களாகவே வலுவில் சேவை செய்ய வந்தவர்கள் பலர். இருந்தும் மேற்சொன்னதுபோல் செலவு.

ஏழை அபேக்ஷகர்களுக்கு இந்தக் கஷ்டத்தை விலக்கி வைக்க ஏதாவது செய்யவேண்டும். ஒவ்வொரு ஓட்டரும், தேகத்தில் குறைபாடிருந்தாலன்றி ஓட்டுப்போட்டே தீர வேண்டுமென்று சட்டம் செய்வது ஒரு பரிகாரமாகத் தோன்றுகிறது. ஆஸ்திரேலியாவில் இது போன்ற சட்டம் உண்டு. இரண்டாவதாக வாக்காளர்கள் தாங்களாகவே சென்று ஓட்டுப்போட வேண்டும். இதனால்

செலவு மிகுதியாகும், நல்ல அபேக்ஷகர் பணக்காரராயி னும், ஏழையாயினும் சரி, தேர்தலில் ஜெயிப்பார்.

இன்னொரு பரிகாரத்தைப்பற்றியும் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். தேர்தல்களை ஏன் ஒரே நாளில் முடிக்கவேண்டும்? ஒரு நாளுக்கு அதிகமாகவே நடத்த லாம். அவசியமான போலிங் ஆபீஸர்களை நியமித்து வாக் காளர்களின் வீடு சென்று அபேக்ஷகர்களின் ஏஜண்டு களின் முன்பாக ஓட்டுப் பதிவு செய்யலாம். இது புரட்சி கரமான மாறுதலாகப் படலாம்; இதனால் அதிகப்படியான ஓட்டுக்கள் கிடைக்கும். ஓட்டுப்போடு மிடத்திலுள்ள கூச் சல், சந்தடி இவைகளுமிராது.

இவை எல்லாம் இருந்தாலும் சாதாரண ஓட்டர் சீராகப் பிரச்னையை நிதானிக்க இடமிருக்கிறதா என்பது கேள்வி. இதில் நாட்டு வேற்றுமைகள் உண்டு. தேர்தல் பிரச்னை கள் சிக்கல் மிகுந்தவை எனவே ஓட்டர் சரியாக நிதானிப் பது கடினம். பத்திரிகைகளும், தலைவர்களும் வாக்காளர்க ளிடையே அபிப்பிராயத்தை வளர்க்கவேண்டும். சாதா ரண காலங்களில் பத்திரிகைகளும் பிரசங்கிகளும் ஜனங் களுக்கு அபிப்ராயம் வளர்ச்சி பெறத் தங்களாலான சேவை செய்கின்றனர். தேர்தல் போட்டியின் போது பிறக்கும் உணர்ச்சிப் பெருக்கு காரணமாக வாக்காளர்களுக்கு குழப் பம் மிகுதியாகும். இருப்பினும் அவர்கள் தங்களாலான தைச் செய்கின்றனர்.

அநேகம் நாடுகளில் அபேக்ஷகர்கள் "சுயேச்சை" யாக நிற்பதில்லை. நல்ல கட்டுப்பாடான அரசியல் கக்ஷிகளின் சார்பாக அவர்கள் நிற்பார்கள். வாக்காளர்கள் ஏதாவது

ஒரு கக்ஷியைச் சேர்ந்தவர்களாகவேதான் இருப்பார்கள். ஆகவே தங்கள் கக்ஷியைச் சேர்ந்தவர்களுக்கே ஓட்டு போடு வார்கள். இந்த சந்தர்ப்பங்களிலே கிடைக்கும் ஓட்டுக் களின் மதிப்பு அதைப் பெறும் கக்ஷியின் நாணயம், தன் னலமற்ற தன்மை, திறமை இவற்றின் போக்கைப் பொறுத்த தாகிவிடும். அநேகமாகப் பணம் படைத்தவருக்கே நிலைமை சாதகமாக இருக்கும். இருப்பினும் தேர்தலில் கலந்து கொள்ளும் கக்ஷிகள் சரியாக நடந்து, அபேக்ஷகர்களைப் பொறுக்கும் பக்ஷத்தில் வாக்காளர்கள் சரியாக நிதானிக் கச் சௌகர்யமாயிருக்கும். எதுவாயினும் சாதாரணமாக ஒரு ஓட்டர் தன்னுடைய நிலைமையை உணர்ந்து இஷ்டப் படி ஓட்டுப்போடும் காலம் வந்து விட்டது.

*19-7-'41*

# புகழுரை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

'முகஸ்துதி' யாருக்கும் பிடிக்குமென்று தோன்றவில்லை. இது பெரிய குறைபாடாகக் கருதப்படுகிறது.

புகழ்ச்சி, பாராட்டு இவற்றிற்கும் முகஸ்துதிக்கும் வித்தியாசம் உண்டு. ஒருவரது வாழ்க்கையின் சிறந்த அம்சங்கள் பூராவையும் பயன் படுத்திக்கொள்ள விரும்பினால் சற்று புகழ்ச்சியாக ஒருவரைப்பற்றிப் பேசித்தான் ஆக வேண்டும் என்பது என் எண்ணம். இதனால் தனி நபருக்கு உற்சாகம் உண்டாகிறது.

சொந்த லாபத்தை உத்தேசித்து அளவுக்கு அதிகமாக மிகைப்படுத்தி யாராவது ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தால் அதுதான் கெடுதியை விளைவிக்கும் முகஸ்துதி. இதனால் புகழுவோருக்கும் புகழப்படுவோருக்கும் கெடுதல்.

யாராவது ஒருவருடைய நல்ல குண விசேஷங்களைப் பற்றியோ சேவையைப்பற்றியோ புகழ்ந்து கொண்டாடினால் அது மனிதவர்க்கத்துக்கே நன்மை பயக்கக்கூடிய காரியமாகிவிடும். இது நியாயமானது.

பகவான்கூட ஸ்தோத்திரத்தை வெறுக்கவில்லை. சர்வ மதங்களும் கடவுளை ஸ்தோத்தரிக்கின்றன. ஸ்தோத்திரங்

கள், மந்திரங்கள், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, அருட்பா, தியாகராஜஸ்வாமி க்ருதிகள் இவை அனைத்தும் ஸ்தோத்திரங்கள்தான் இவை எல்லாம் கடவுளைப் பற்றிப் புகழ்ந்து பாடப்பட்டவை.

இவற்றைப் பாடியவர்கள் பொருள் விரும்பி லாபமடையப் பாடவில்லை. கடவுள் இந்த ஸ்தோத்திரங்களைப் பற்றி என்ன நினைக்கிறார் என்று சாமான்யப்பட்டவர்களால் சொல்ல முடியாது. இந்த பக்தர்கள் எழுத்துக்களிலிருந்தும் பக்திப் பரவசமாகிப் பாடிய பாட்டுக்களிலிருந்தும் பகவானுக்குப் பக்தர்களின் ஸ்தோத்திரத்தில் பரம பிரீதியென்றே தெரிகிறது.

மனிதர்கள் சம்பந்தப்பட்டவரையில் நான் திட்டமாகச் சொல்லமுடியும். "முகஸ்துதி" தங்களுக்குப் பிடிப்பதில்லை யென்று ஜனங்கள் ஏன் சொல்லுகின்றனரோ தெரியவில்லை. தங்களைப்பற்றி பொய்யும் புளுகுமாகச் சிலர் புகழுரை கூறுகிறார்கள் என்று அவர்கள் சொல்லும் பக்ஷத்தில் நான் அதை ஒப்புக்கொள்ளுவேன். ஆனால் உண்மை நிலைமை உணர்ந்து அவர்களது சேவையைப் புகழும் தோரணையில் சற்று ஸ்தோத்திரமாகச் சொல்வதை கூட ஒப்பவில்லையென்று யாராவது சொன்னால் ஒன்று அவர்கள் மகா புருஷர்களாக இருக்க வேண்டும்; அல்லது வஞ்சகர்களாக இருக்க வேண்டும். புகழ்ச்சியை விரும்புவதாக வெளியே காட்டிக்கொள்வது சரியில்லை யென்றாலும் அதை விரும்பாதவர்கள் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

புகழ்மாலை எவ்வளவு தூரம் ஔஷதம்போல வேலை செய்கிறது என்பதற்கு ராமாயணத்திலிருந்து ஓர் உயர்ந்த உதாரணத்தை உனக்குச் சொல்லுகிறேன்.

ஹனுமானுக்கு ஓர் சாபம். அவர் தன்னுடைய சக்தியை மறந்துவிட்டார். அவரைப்பற்றிப் புகழ்ந்தபோது தான் அவருடைய பராக்கிரமங்கள் தெரியவந்தன. வானரசேனைகள் கடற்கரை யோரத்தில் கடலைத்தாண்ட காத்து நிற்கிறது. மற்ற வானரங்கள் கடலைத்தாண்டி திரும்பமுடியாது என்று சொல்கின்றன. ஹனுமான் தனியாக ஓரிடத்தில் மௌனமாக வீற்றிருக்கிறார். அப்போது ஜாம்பவான் ஹனுமானுடைய மகத்தானசக்தியைப்பற்றி புகழ்கிறான். உடனே ஹனுமானுக்குத் தன்னுடைய சக்தியை உணரும் நிலைமை ஏற்படுகிறது. கடலைத் தாண்டித் திரும்பிவிட்டார்! அவர் செய்த சேவையை வேறு யாரும் செய்திருக்க முடியாது. இதில் ஓர் கருத்து அடங்கியிருக்கிறது. மனிதரின் மனோதத்துவ சாஸ்திரத்தை அடிப்படையாக கொண்ட கருத்து அது. ஒரு காரியத்தில் தீவிர சிரத்தை காரணமாக ஒருவர் அதில் ஈடுபடுவதில்லை. அதைச் செய்வதைப்பார்த்து மற்றவர்கள் புகழ்கிறார்கள் என்ற உணர்ச்சியே அக்காரியத்தைச் செய்யத் தூண்டுகோலாக அமைகிறது. இது ரொம்ப சரியானது.

என்னைப்பற்றிப் பட்டவர்த்தனமாக உனக்கு எழுதலாம். என்னைப் புகழுவதால் பிரதிப்பிரயோசனம் எதையும் நாடாமல் உண்மையான நண்பர்களாக இருப்பவர்கள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிய நான் விரும்புகிறேன். அது புகழுரையாக இருந்தால் எனக்குச்

சந்தோஷமே. இது அநேகமாக மிகைப்படுத்தப்படுகிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இதில் நல்ல எண்ணம் இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. என்னைப் புகழ்ந்து பேசிப் பத்திரங்கள் அளித்த சந்தர்ப்பங்களிலே நான் அதைப் பாராட்டாக மதிக்கிறேன் என்பதையும் பஹிரங்கமாக நான் சொல்லியிருக்கிறேன்.

ஸ்ரீ ஆச்சார்யா உனக்கு எழுதிய கடிதத்தை நான் பார்த்தது காரணமாக இக்கடிதத்தை உனக்கு எழுதுகிறேன். அகில இந்திய ரேடியோவில் உன்னுடைய நிகழ்ச்சியைப் புகழ்ந்து அவர் எழுதியுள்ளார். இது முகஸ்துதி போலத் தோன்றும். ஆனால் அவர் நல்ல நண்பர். உன்னைப் புகழுவதால் அவருக்கு லாபமேதுமில்லை! இதுபோன்ற புகழ்ச்சி உரைகள் உன்னுடைய சேவை, குணதிசயங்கள் இவற்றை உத்தேசித்து உனக்கு அடிக்கடி வந்துகொண்டிருக்குமென நான் நம்புகிறேன். அவை வரும்போது ஏற்றுக்கொள். அவற்றை வெறுக்காதே. ஆனால் இவை கண்டு கர்வம் கொள்ளக்கூடாது.

இதேபோல பிறர் விஷயத்திலும் நமக்கு கடமை உண்டு. மற்றவர்கள் நல்ல சேவை செய்வதாகத் தோன்றினால் நாம் அவர்களைப் பொதுவாகவும், தனியாகவும் பாராட்டிப்புகழ வேண்டும். இதுதான் அவர்கள் மூலம் சிறந்த பலன்களை எதிர்பார்க்கும் வழி. குறை சொல்லும்படி நேர்ந்தால் சற்று குறைவாகவே சொல்லவேண்டும். அதுவே தர்மம்.

20-7-'41.

## மிருக வேட்டை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

மிருகங்களிடம் மனிதர்கள் கொண்டுள்ள மனோபாவம் மிகவும் நூதனமானது. மிருகங்களில் எவ்வளவோ வகை. சில மிருகங்களைப் பார்த்தாலே நமக்குப் பயமாக இருக்கிறது. அம்மிருகங்கள் பயிர்களை அழிக்கின்றன. யானைகள், கரடி முதலியவற்றால் நாசம் விளைகிறது. அவை மனிதர்களையும் கொன்று விடுகின்றன. ஆனால், எந்த மிருகமும் தனக்கு ஆபத்து வந்தாலன்றி மனிதரைக் கொல்லாது என்று பொதுவாக எல்லாரும் அபிப்பிராயப் படுகிறார்கள். இதைப்பற்றித் திட்டமாக ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால் சில மிருகங்களால் பயிர்கள், கால் நடைகள், பறவைகள் இவற்றிற்கு நாசம் ஏற்படுகிறது. ஆதலால் தான் கிராமவாசிகளில் அநேகர் ஆயுதங்களை வைத்துக்கொள்ள வேண்டுமென்கிறார்கள்.

காட்டு மிருகங்களை வேட்டையாடுவதென்பது ராஜாக் களுக்கெல்லாம் ஓர் விளையாட்டு. உலகத்திலுள்ள பிரபல பணக்காரர்களும் இதில் ஈடுபடுகிறார்கள். தொன்று தொட்டு நடந்து வரும் வழக்கம் இது. காட்டு மிருகங்கள் மிகவும் பொல்லாதவை யாதலின், அவற்றை ஒழித்துவிட வேண்டுமென்பதே வேட்டையின் நோக்கம். ஆனால் அவை காட்டிலிருந்துகொண்டு மனிதருக்கு ஹிம்ஸை விளைவிக்கா

திருக்கையில் வேட்டை அவசியமா? அது அவசியமாக எனக்குப் படவில்லை. முன்பின் பாராமல் இம்மாதிரியான வேட்டைகளில் ஈடுபடுவதால் காட்டுமிருகங்களில் பல க்ஷீணமடைந்து போகின்றன. திருவாங்கூர் சர்க்கார் காட்டு மிருகங்களுக்காகப் பெரியாறு ஏரிக்குப் பக்கத்தில் ஓர் தனியிடம் அமைத்து, அங்கே அவற்றைப் பாதுகாத்து வருகிறார்கள். இது நல்ல காரியம். அங்கே நாம் போய் ஒருமுறை பார்க்கவேண்டும்.

காட்டு மிருகங்களுக்கும், வேடர்களுக்கும் சரி சமானமாக வேட்டை நடப்பின், அதில் பந்தய விளையாட்டின் நோக்கம் உள் அடங்கியிருக்கும். ஆனால் தன்னை நன்கு பத்திரப் படுத்திக்கொண்டு மிருகங்களை மனிதர்கள் கொல்லுகின்றனர். மனிதனுக்குத் தொந்திரவு விளைவிக்காத பக்ஷத்தில் அம்மிருகங்களைக் கொல்லக் கூடாதென்பது என் அபிப்ராயம்.

காட்டில் வளரும் அழகான சில பறவைகளையும், சாது மிருகங்களையும் வேட்டையாடிக் கொல்லும் இன்னொரு கொடுமை உண்டு. பெண்கள் தங்களுடைய தலைத் தொப்பிக்காக சில அழகிய பறவைகளின் இறகுகளைத் தேடுகின்றனர். அல்லது உடுப்புக்கு உபயோகமாக அவை தேவையா யிருக்கின்றன. எனவே அவற்றைக் கொல்லுகிறார்கள். இப்பறவைகளும், மிருகங்களும், யாதொரு ஹிம்ஸையையும் உண்டுபண்ணுதவை. அவற்றை கொல்வதற்கு வேறு எவ்வித நியாயமும் கிடையாது.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க மனிதர்கள் சில மிருகங்களிடம் பக்ஷமாக இருக்கிறார்கள். அராபியருக்குக் குதிரை;

நியூபவுண்ட்லாந்தினருக்கு நாய்; ஆஸ்திரேலியருக்கு ஆடு கள்; ஆப்பிரிக்கருக்கு ஒட்டகம்; ஹிந்துக்களுக்குப் பசு; என்று ஒவ்வொருவரும் ஒரு பிராணியிடம் அன்புகொண் டிருக்கின்றனர். இம்மிருகங்களெல்லாம் மனிதர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கின்றன. இதில் மனிதருக் கும் மேற்படி மிருகங்களுக்கு மிடையே பரஸ்பரம் அன்பு பரிமளிக்கிறது.

மேலே சொன்ன மிருகங்களுக்கெல்லாம் அபாரமான புத்திசாலித்தனம் உண்டு. பக்ஷமாக நடத்தினுல், அதற்கு அனுசரணையாக அவை நடக்கின்றன. ஆனுல் ஒரு குறை. அவற்றிற்குப் பேசத் தெரியவில்லை. ஆகவே தங்களுடைய தேவையை அவை வெளியிட முடிவதில்லை. நாம் அவற்றை நன்கு பராமரித்தால், அவைகள் எவ்வளவோ நமக்கு அனுகூலமாக இருக்கின்றன.

எல்லாமிருந்தும் நம் நாட்டில் மிருகங்களுக்கு பெருவாரி யாகத் துன்பம் விளைவிக்கப்படுகிறது. இதற்காகத்தான் ஜீவ ரக்ஷக சங்கம் தோன்றியது. காளை மாடுகளைத் தார் போட்டுக் குத்துவதுபோன்ற முறைகளால் ஹிம்ஸிப்பதை நிறுத்த வேண்டும். சென்னையில் கன்றுகளைப் பட்டினி போட்டுப் பால் விடாமல் பரிதவிக்கவிடும் பால்காரர் களின் கொடுமையையும் நிறுத்தவேண்டும். தெருவில் வீணுகச் சுற்றித் திரியும் நாய்கள் பெரிய தொல்லைதான். இருப்பினும் அவற்றை ஜீவகாருண்யத்தோடு அப்புறப் படுத்த வேண்டும்.

மிருகங்களிடம் அன்பாயிருக்க வேண்டியது தான். ஆனுல் அவற்றுல் மனிதர்களுக்குத் தொந்தரவுகள் ஏற்படாமல்

பார்த்துக் கொள்ளவும் வேண்டும். சென்னையில் கவனிப்பாரற்றுத் திரியும் கால் நடைகள், நாய்கள், பன்றிகள், ஆடுகள் இவற்ருல் நகர சுகாதாரத்துக்கே கெடுதல். நகர வாசிகளும் சுகாதார அதிகாரிகளும் ஒன்றுபட்டு ஒத்துழைத்துக் கட்டுப்பாடின்றித் திரியும் கால்நடைகளை நகரில் வைக்க வொட்டாது செய்யவேண்டும்.

எப்படியிருப்பினும் மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் சந்தோஷமான தொடர்பு இருக்கவேண்டும். நாமெல்லோரும் கடவுளின் சிருஷ்டி. நாம் மிருகங்களை வெறுக்கக் கூடாது.

பரமசிவன் ரிஷபத்தை வாகனமாயும், பாம்புகளை ஆபரணங்களாயும், வைத்துக்கொண்டு அவற்றை அன்பாக நடத்துகிருர். மகா விஷ்ணுவோ கருடாருடராக விளங்குகிருர். சரஸ்வதி ஹம்ஸத்தை வாகனமாகக் கொண்டவள். யானைகள் லக்ஷ்மியை தாமரை மலர்களால் பூசிக்கின்றன. ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி மயில் மீதேறி வருகிருர். விக்னேச்வரர் மூஞ்சூறை வாகனமாக்கிக் கொண்டுள்ளார். தத்தாத்ரேயருக்கு நாய். ஸ்ரீ கண்ண பிரானுக்கு கோபிகளைப்போலத் தான் பசுக்கள். இந்த மிருகங்களிடமெல்லாம் கடவுளின் அனுக்கிரகமிருப்பதை நாம் உணர்வோமாக. ஆகவே அவற்றை அன்பாக நடத்தவும் வேண்டும்.

ஜைனர்கள் இவ் விஷயத்தில் ஒரு படி மேலே போய் இன்னும் தீவிரமாக இருக்கின்றனர். ஈ, எறும்பு, கொசு, இவற்றைக் கூட அவர்கள் கொல்லுவதில்லை. இது ரொம்ப ஜாஸ்தி. மனிதர்கள் சுத்தமாக இருந்தால், இந்த புழு பூச்சிகள் வரவே வராது. ரொம்ப அபாய நிலையில்

உள்ள பிராணியைக் கொல்வதா இல்லையா என்று ஒரு பிரச்னையும் உண்டு.

மொத்தத்தில **अहिंसा परमो धर्म** அஹிம்ஸா பரமோ தர்ம என்பது சிறந்த சித்தாந்தம். அதை அனுஷ்டித்தால் எல்லாம் நல்லபடியாக இருக்கும்.

*21-7-'41.*

## பழமொழிகள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பழமொழிகள் எல்லா நாடுகளிலும், எல்லாக் காலத்திலும் வழங்கி வந்திருக்கின்றன. "பைபிளில்" பழமொழிகள் என்ற ஒரு அத்தியாயமே இருப்பதாக நான் நினைக்கிறேன். உலகத்திலுள்ள நாட்டினரின் அனுபவம், சாதுர்யம், விவேகம் இவற்றைத் தாங்கியவை பழமொழிகள். அவற்றில் அடங்கியுள்ள அபிப்ராயம், சொல் நயம் இவை இரண்டும் மிக்க விசேஷமானதாகும். ஆங்கிலத்தில் பழமொழிகளுள்ள அகராதி கூட இருக்கிறது. நீ அதில் ஒரு பிரதியை வாங்கிக்கொண்டு உன் ஓய்வு நேரத்தில் படித்துப் பார். இந்தப் பழமொழிகளெல்லாம் நமது சிந்தனையை கிளப்பிவிடக் கூடியவை. சில சமயங்களில் அவை தமாஷாகவும் இருக்கும். ஒன்று அவற்றில் நம்பிக்கையூட்டக்கூடிய அம்சமிருக்கும்; அல்லது அவநம்பிக்கையைக் காட்டும் கருத்து அடங்கியிருக்கும். பழமொழிகளால் உற்சாகம் பிறக்கிறது. இவை எல்லாவற்றையும் விட மனித வர்க்கத்திடமுள்ள ஒருமைப்பாட்டைக் குறிக்கின்றன அவை.

சமஸ்கிருதத்திலும் சில பழமொழிகள் இருந்திருக்கத்தான் வேண்டும். ஆனால் அவை இன்று பிராபல்யமாக

இல்லை. சம்ஸ்கிருதம், பேசும் பாஷையாக இல்லாததே காரணம். பேசுவதற்காக உபயோகத்திலிருக்கும் பாஷைகளிலெல்லாம் பழமொழிகள் செழிப்பாக இருக்கின்றன. இப்போதுகூட கிரேக்கப் பழமொழிகள் வழங்கி வருகின்றன. அடிக்கடி அவை உபயோகப்படுத்தவும் படுகின்றன. இதேபோல லத்தீனிலும் பழமொழிகளுண்டு. ஐரோப்பிய இலக்கியங்களில் அடிக்கடி அவை உபயோகப்படுவதே இதற்குக் காரணம். 'கடவுள் யாரை அழிக்க விரும்புகிருரோ அவர்கள் முதலில் பித்துப்பிடித்துப் போகிருர்கள்' என்பது ஒரு பழமொழி.

சம்ஸ்கிருதத்தில் கருத்துள்ள பழமொழி ஒன்றுண்டு. **विनाशकाले विपरीत बुद्धिः** விநாசகாலே விபரீத புத்தி: "இறந்தவரைப்பற்றி இழிவாகப் பேசக்கூடாது". இது ஒரு பழமொழி. "செய்த குற்றத்துக்கு சட்டம் தெரியவில்லையென்பது போதிய முகாந்திரமல்ல". இதைப் போலப் பல பழமொழிகளுண்டு.

ஆங்கிலத்திலும், தமிழிலும் உள்ள பழமொழிகள் தான் எனக்கு அதிகம் தெரியும். ஆங்கிலப் பழமொழிகள் பற்றி நான் இங்கு உனக்கு எழுதப்போவதில்லை. ஏனெனில் பள்ளிக்கூடத்தில் நீ அவற்றைக் கற்றுக்கொள்ளுவாய்; புத்தகத்திலிருந்தும் அதிகமாக தெரிந்துகொள்ளக்கூடும். பல வருஷங்களுக்கு முன்னால் பம்பாயில் வெளியான "ஈஸ்ட் அண்ட் வெஸ்ட்" என்ற சஞ்சிகைக்குத் தமிழ் பழமொழிகள் பற்றி நான் சில கட்டுரைகளை எழுதினேன். என் பாட்டி, தாயார் இவர்களிடமிருந்தே அவற்றை நான் தெரிந்துகொண்டேன்.

இந்தத் தமிழ்ப் பழமொழிகள் நமது விவேகம், கலைப்பண்பு இவற்றை அனுசரித்தவை என்றே நான் எண்ணுகிறேன். சிலவற்றில் அவநம்பிக்கை பிரதிபலிக்கிறதாயினும் மொத் தத்தில் அவை மனிதவர்க்கத்திடம் உள்ள சிறந்த நம்பிக்கை யையே காட்டுகின்றன. ஒரு சிறிய கடிதத்துக்குள் பழ மொழிகளின் ஜாபிதாவைக் கொடுக்க முடியாது. என்னு டைய கட்டுரைகளையே நீ படித்துப்பார். அவை நம் வீட் டில் இருக்கின்றன. நீ அவற்றைப் படித்து ரஸிப்பாய் என் பது நிச்சயம்.

தமிழர்களும் தெலுங்கர்களும் நெருங்கி வாழ்ந்திருக்கின்ற னர். இது கீழ்க்கண்ட பழமொழியிலிருந்து புலனாகும் "டில்லிக்குப் பாச்சாவானாலும் தல்லிக்குப் பிட்டாதானே!" ஹிந்துஸ்தானி பதமான "பாஷா" என்பது இதில் இடம் பெற்றுளது. ஒருவன் டில்லி சக்ரவர்த்தியானால் கூட அவன் தன் தாய்க்கு குழந்தை தானே என்பது இதன் பொருள். இதில் "தல்லி" "பிட்டா" இரண்டு தெலுங்கு வார்த்தைகளும் "தாயும்" "மகனும்" என்ற பதத்திற்காக வருகின்றன.

இது சாதாரணமான, ஆனால் நல்ல உண்மையைக் குறிக் கும் சொல். இரண்டு பாஷைக்காரர்களது பரிச்சயத்தை யும் இது தெரிவிக்கிறது.

தமிழர்கள் நுண்ணறிவுள்ள ஜாதியினர். ஜனங்கள் சரே லென்று விஷயங்களைக் கிரஹித்துக்கொள்ள வேண்டு மென்று அவர்கள் எதிர்பார்க்கின்றனர். அப்படியில்லா விட்டால் அவர்கள் பொறுமை இழந்துவிடுகின்றனர்.

"ராத்திரியெல்லாம் மழை பெய்தாலும் ஓட்டாஞ்சல்லி முளைக்குமோ"! என்பது இதற்கேற்ற பழமொழி. உபாத்தியாயர் எவ்வளவு புத்திசாலியா யிருந்தாலும் மாணவன் அதற்கு ஏற்றபடி யில்லாவிட்டால் பயனேதுமில்லை என்பது இதன் அர்த்தம்.

உதாரணமாகச் சகோதரர்களுக்குள் சண்டை வந்து விடுகிறது. ஆனால் அச்சண்டை சீக்கிரம் தீர்ந்து ஒற்றுமை உண்டாகிவிடுகிறது "தண்ணியை என்ன அடி அடித்தாலும் விலகுமா" என்பது இக்கருத்துக்கிசைந்த பழமொழி.

பரம்பரை சித்தாந்தத்தில் நம்மவர்களுக்கு அபார நம்பிக்கை. "விரையொன்று போட்டால் சுரையொன்று முளைக்குமோ!" என்ற பழமொழி இதற்குச் சான்று. 'தாயைப் போல பிள்ளை நூலைப்போல சேலை' என்பதே இதன் கருத்து.

தமிழர்கள் தர்மம் மிக்கவர்கள். ஆகவே தருமம் செய்யாதவர்களைக் கண்டித்து அநேகம் பழமொழிகள் ஏற்பட்டிருக்கின்றன. "எச்சில் கையால் காக்காய் ஓட்டமாட்டான்"! என்பது இதற்கு ஓர் உதாரணம்.

தமிழர்கள் வீரம் செறிந்தவர்கள். ஒரு காலத்தில் அவர்களெல்லாம் அப்படி இருந்தவர்கள் தான். மீண்டும் அவர்கள் வீர உணர்ச்சி பெற்று வருவதாக நான் எண்ணுகிறேன். அடிபட்டுத் தோல்வியுற்ற பின் நொண்டி சமாதானம் சொல்லி வீரம் பேசுவோரைக் கண்டிக்க "குப்புற விழுந்தாலும் மீசையிலே மண் ஒட்டல்லே!" என்று சொல்லும் பழமொழி சிறந்த உதாரணம்.

கோழைகளைக் கண்டால் தமிழர்களுக்கு எரிச்சல். "கோயிலண்டை முட்டையைப் பறிகொடுத்த நாயக்கருக்கு குளத்தண்டை போயி மீசை படபடன்னு துடித்ததாம்!" என்று கோழையை நையாண்டி செய்யும் பழமொழி இது.

தமிழர்கள் மதி நுட்பமுள்ளவர்களென்பதுடன் லௌகிகமும் தெரிந்தவர்கள். அவர்களது பழமொழிகளைச் சேகரித்து அர்த்தத்தோடு பிரசுரிக்க வேண்டும். நீயும் இதை ஒப்புக்கொள்வாய். அவகாசம் கிடைப்பின் இதைச்செய்ய வேண்டுமென்பது என் விருப்பம்.

22-7-'41.

# விவாதங்கள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பள்ளிக்கூடங்களில் நடைபெறும் விவாதங்களிலெல்லாம் நீ அடிக்கடி பங்கெடுத்துக் கொள்வதை நான் கவனித்து வருகிறேன். இம்மாதிரி செய்வது உனக்கு அனுகூல மானதுதான். பேச்சு வன்மையை வளரச் செய்வதற்கு விவாதங்கள் உதவிகரமானவை. புத்தி கூர்மையாகவும் எப்போதும் துடியாகவும் இருப்பதற்கு அவை பயன்படும். எதிர்த்துப் பேசும் சக்தியைத் தருவதும் விவாதங்கள்தான். உங்கள் பள்ளிக்கூடத்தில் நடைபெறும் விவாதங்க ளெல்லாம் மேலே சொன்ன அம்சங்களைக் கொண்டதாக இருக்குமென்றே நான் நம்புகிறேன். ஆனால் இது மாதிரி யாக ஓர் ஏற்பாட்டைச் செய்து அதன்படி நடத்தும் விவாதங்களெல்லாம் இயற்கையாக இல்லை யென்பது என் அபிப்ராயம்.

இதற்கான காரணங்களை நான் உனக்குத் தெரிவிக் கிறேன். விவாதம் என்றால் குறிப்பிட்ட ஒரு விஷயத் தைப் பற்றி தங்களுடைய அபிப்ராய பேதங்களைப் பகிரங்கமாகவோ அல்லது வேறு முறையிலோ விவாதித்து அவற்றை அறிவதற்கு வசதி தருவனவாக இருக்க வேண்டும். அதாவது ஒரு சாரார் தெரிவிக்கும் வாதங்-

களுக்கு மற்றொரு கக்ஷியார் சமாதானம் தெரிவிப்பதா யிருக்கவேண்டும். இதே போல எதிர்க் கக்ஷியார் சொல்லும் வாதங்களுக்கு இன்னொரு சாரார் பதில் சொல்ல வேண்டும். வாதப் பிரதி வாதங்கள் அடுத் தடுத்து நிகழ வேண்டும். இவை முடிவுற்ற பின்னர் சம்பந் தப்பட்ட இரு கக்ஷிகளில் எது ஜெயித்ததோ அக் கட்சி யின் நியாயத்தை எதிர்க் கக்ஷி ஏற்கவேண்டும். அநேக மாக இது மாதிரி நிகழுவதில்லை.

மனிதன் பிடிவாத சித்தமுள்ளவனாக இருப்பது மட்டும் இதற்குக் காரணமில்லை. சரியான விஷயத்தை ஏற்றுக் கொண்டு தவறானவற்றைத் தள்ளிவிட வேண்டுமென்று நிர்ப்பந்திப்பதற்கு அவசியமான காரணமும் இருப்ப தில்லை. புத்தி விஷயத்திலும் சரி, உணர்ச்சி விஷயத் திலும் சரி நாம் பொதுவாக அயர்ந்திருக்கிறோம். அத்தி யாவசியமாக இருந்தாலன்றி நாம் மனதை உறுதி செய்து கொள்வது கிடையாது.

உன்னுடைய பள்ளிக்கூட விவாதங்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவை எந்தக் கட்சியிலாவது உற்சாகம் இருக்கும் வண்ணம் அமையவில்லை. ஜனங்கள் தீவிரமாக எண்ணக் கூடிய பிரச்னைகளைப் பற்றி விவாதிக்க நீ ஏன் முற்படக் கூடாது? ஒவ்வொரு மாணவியாகப் பொறுக்கி ஏதாவது ஒரு கக்ஷியில் சேர்த்து விவாதத்தில் ஈடுபடச் செய்யும் முறை எனக்குப் பிடிக்கவில்லை. இது இயற்கைக்கு விரோதமாகவும் படுகிறது. அடுத்தபடியாக நடக்கும் உன்னுடைய பள்ளிக்கூட விவாதத்தில் எந்த விஷயத்தைப் பற்றி உனக்குத் தீவிரமாகவும் திட்டமாகவும் அபிப்ராயம்

இருக்கிறதோ அந்தக் கக்ஷியை எடுத்துக்கொள்; இல்லை யானால் விவாதத்திலேயே சம்பந்தப்படாமல் இருந்து விட லாம். இது என்னுடைய யோசனை.

விவாதங்களின் தரத்தை உயர்த்த இன்னொரு யோசனை யைக் கூட உனக்குத் தெரிவிக்கிறேன். சில விஷயங்களைப் பற்றிய விவாதத்தை முன்னதாக அறிவிக்காமல் இருக்க வேண்டும். விவாதம் துவங்குவதற்கு ஐந்து நிமிஷங் களுக்கு முன்னதாக விஷயத்தை மாணவிகளிடம் பிரஸ்தா பிக்கட்டும். அப்போது உண்மையான விவாதத்தின் தன்மை துலங்கும். எவ்விதமான விவாதங்களையும் முன்ன தாகத் தயாரித்து வைத்துக்கொண்டு நீ போகக்கூடாது. அவகாசம் கொடுக்கப்பட்டிருந்தால் நீ உன்னுடைய விவாத விவரங்களையும் எடுத்துரைக்க வேண்டிய கட்சி களையும் நிதானித்து சிறப்பாகச் சித்தரித்துக் கொள்ள லாம். ஆனால் எதிர்பாராத விதமாகத் திடீரென்று சம யத்தில் உதிக்கும் கேள்விகளுக்குப் பதிலளிப்பதில் தனி யாக ஓர் அழகு இருக்கத்தான் இருக்கிறது.

இதைக் குறிப்பிடும்போது சட்ட சபைகளில் நடக்கும் விவாதங்களைப் பற்றி எனக்கு நினைவு வருகிறது. அவற் றில்தானே எனக்குப் பரிச்சயம்? அங்கே நடக்கும் விவா தங்களில், சம்பந்தப்பட்டவர்கள் பிரச்னைகளின் உண்மை நிலைமையை வெளிக் கொண்டு வந்து அவற்றின் தரத்துக் கேற்றபடி முடிவு கட்டுவது என்பதுதான் உட்கருத்து. ஆனால் இந்தக் காலத்தில் அம்மாதிரி நடப்பது அபூர்வம். சட்ட சபையிலுள்ள கட்சி முறைப்படி அநேகமாக எல்லா மெம்பர்களும், அநேகமாக எல்லா விஷயங்களைப்

பொறுத்தும் தங்களுடைய மனோ பாவத்தை கட்டுப் பாட்டுக் கடங்கி உறுதி கொண்டு விடுகின்றனர். பிரஸ்தாப விஷயங்கள் கட்சிக் கூட்டங்களில் விவாதிக்கப் பட்டவை என்பது இதன் கருத்து. சபைமுன் வரும் பிரச்னையில் மெம்பர்கள் எப்படி ஓட்டுச் செய்ய வேண்டும் என்பதை சம்பந்தப்பட்ட கட்சி முன்னதாக நிர்ணயிக் கிறது. எனவே திட்டமாக யோசனைகளும் வெளியிடப் பட்டுவிடுகின்றன. எனவே விவாதங்களின் உண்மை அம்சம் இருப்பதில்லை. வெளியேயுள்ள ஜனங்களைத் திருப்தி படுத்துவது வேறு ஒருபுறம். கட்சிக் கொறடா இருப்பதால் மேற்கொண்டும் விவாதங்களில் இயற்கைச் சுவை இருப்பதில்லை. ரொம்ப முக்கியமான சந்தர்ப்பமாக இருந்தோ அல்லது முக்கியமாக நன்கு பேசக்கூடியவர்கள் பேசுவதாகவோ இருந்தாலன்றி மெம்பர்கள் வருவதில்லை.

சில சமயங்களில் கட்சிக் கொறடா முறை இருப்பதில்லை. மெம்பர்கள் யதேச்சையாகப் பிரச்னையின் தரத்துக்கு ஏற்ற படி ஓட்டுக் கொடுக்கலாம். அத்தகைய சந்தர்ப்பங்களில் விவாதம் இயற்கையாக இருக்கும். ஆனால் இது அபூர்வம்தான்.

சில சமயங்களில் பத்திரிகைகளில் விவாதம் நடத்தப்படுவதுண்டு. ஆனால் உடனுக்குடன் பதில் சொல்வது இதில் முடியாது. எனவே விவாதங்களும், எதிர்வாதங்களும் பக்குவமாகக் கொடுக்கப்பட்டிருக்கும். விவாதங்களால் உடனடியாக மாறுதல்களை ஏற்படுத்துவது சாத்தியமில்லை; அப்படி எதிர்பார்ப்பதற்குமில்லை. ஆனால் நன்கு நடக்கும் விவாதங்கள் காரணமாக பொதுஜன அபிப்ராயம் விரிவாக உருவக மடையும்.

விவாத பூர்வமாக முடிவு கண்டு நடத்தும் சர்க்கார்தான் ஜனநாயக சர்க்கார். ஜனங்கள் லேசாகத் தங்கள் அபிப் ராயங்களை மாற்றிக்கொள்ள மாட்டார்கள். ஆனால் பொதுவில் நடக்கும் விவாதங்களால் சமூகத்தில் மாறுதலை உண்டுபண்ண முடியும். அவற்றிற்கு அந்த சக்தி உண்டு.

நீ இப்போது விவாதங்களில் ஈடுபடுவது கண்டு நான் சந்தோஷிக்கிறேன்.

அவற்றை இயற்கையானதாயும், பயன்தரத் தக்கவை யாகவும் நீ செய்துகொள்.

23-7-'41.

# சட்டசபை விவாதம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பந்தய விளையாட்டுகளில் அனுஷ்டிக்கப்படும் நியதிகளுக்கு ஏற்றவாறு பொது விவாதங்களை நடத்த வேண்டுமென்று என்னுடைய சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். இதற்கான அவசியத்தை நீ உணர்ந்துகொண்டிருப்பாய். அம்மாதிரியான விதிகளை விவாதங்களில் அனுஷ்டிக்காமல் போனால் அவை கடுமையான சச்சரவுகளில் முடிவதோடு விளக்கமேற்படுவதற்குப் பதிலாகக் கொதிப்பே அதிகரித்து விடும். உன்னுடைய பள்ளிக்கூட விவாதங்களில் அம்மாதிரியான விதிகளை அனுஷ்டிக்க வேண்டியதற்கான அவசியத்தை கவனித்தறிந்திருப்பாய். இதற்கான அவசியம் உங்களுக்கு முக்கியமாகத் தோன்றாமலிருக்கலாம். நீங்களெல்லாம் நாசூக்கான இளம் பெண்கள் என்பதே அதற்குக் காரணம்.

முதியவர்கள், விவாதங்களில் ஈடுபடும்போது சட்ட திட்டங்களை அனுஷ்டிப்பது மிகவும் முக்கியமானதாக இருக்கும். இதற்கு விஷயம் தெரிந்தவர்கள் இருப்பதவசியம். அந்தமாதிரி சட்டதிட்டங்களை அமுல் நடத்துபவர்கள் நல்ல படிப்பாளியாக இருக்கவேண்டும்; பக்ஷ பாத மனோபாவமில்லாதிருப்பதோடு விவாதத்தில் சம்பந்தப்பட்டவர்

களும் அவரது மனோபாவத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். விவாதங்களைக் கூர்ந்து கவனித்து அதை நன்கு நிர்வகிக்க வேண்டும். அது போன்ற நபருக்குச் சாதாரணக் கூட்டங்களானால் ‘தலைவர்’ என்றும், கார்ப்பொரேஷனானால் ‘மேயர்’ என்றும், சட்ட சபையானால் “ஸ்பீக்கர்” அல்லது ‘தலைவர்’ என்றும் கூறுவது வழக்கம்.

விவாதத்தில் முதல் விதி என்னவெனில், ஒரு சமயத்தில் ஒரு நபர் தான் கூட்டத்தில் பேசலாம்; பேசவேண்டும். இது வெளிப்படை. பார்வைக்குத் தோன்றுவதைப் போல இந்த விதி அனுஷ்டானத்தில் அவ்வளவு சுலபமல்ல. ஆனால் உண்மையான விவாதத்துக்கு அத்யாவசியமானது. ஒருவர் பேசிக்கொண்டிருக்கும் போது மற்றவர்கள் குறுக்கிட விரும்புகின்றனர். இடைமறித்துக் கேள்விகள் கேட்கின்றனர். சட்டசபைகளில் ஒரு மெம்பர் பேசிக்கொண்டிருக்கையில் வேறு எந்த மெம்பரும் எழுந்து குறுக்கிடக் கூடாதென்பது பொதுவான விதி. பேசுபவர் மீண்டும் தம் ஆசனத்தில் அமர்ந்து பேச விரும்புவருக்கு இடமளிக்கும் சந்தர்ப்பங்கள் தவிர இதர சமயங்களில் மேற்படி விதியை அனுஷ்டிக்க வேண்டுமென்பது கருத்து. சில சமயங்களில் மரியாதையை யொட்டி இங்ஙனம் செய்வதுண்டு. சூடான விவாதத்தில் ஈடுபட்டிருக்கையில் அநேகமாக மெம்பர்கள் “முடியாது; நான் இடம் கொடுக்கப் போவதில்லை” என்று சொல்லுகிறார்கள். சொந்தவிதமாக முகாந்திரம் கூறுவதற்காக ஒரு மெம்பர் இன்னொரு மெம்பர் பேசுகையில் குறுக்கிடலாம்.

இவை யெல்லாம் சாதாரணமான குறுக்கீடுகள். சாதுர்யமான குறிப்புகள், பொருத்தமான கேள்விகள், இவைகளை

யெல்லாம் சபை நியதிகளுக்கு ஏற்ற பாஷையில் சுருக்க மாகக் கேட்கலாம். ஆனால் சபாநாயகர் இதில் தலையிடா திருக்க வேண்டும்.

சட்டசபை விவாதங்களில் மெம்பர்கள் சபை விதிகளுக குப் பொருத்தமான பாஷையையே உபயோகிக்க வேண்டும். அதற்கு விரோதமாக எதையும் உபயோகிக்கக் கூடாது.

விவாதங்கள் கண்ணியமான முறையில் நடக்க வேண்டு மென்பதே இதன் நோக்கம். சபையில் உபயோகிக்கத் தகாத வார்த்தைகள் எவை யென்பதற்கு உதாரணம் கொடுப்பது சிரமம். இவற்றைத் தொகுத்துக் சேர்க்க முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் விரிவான ஜாபிதாவைத் தயாரிப்பது சாத்தியமில்லை. மரியாதை யான சொற்களை உபயோகித்துப் பேசவேண்டும். மெம் பர்கள் மீது சொந்த ஹோதாவில் குறைபாடுகளைப் புகுத் திப் பேசக்கூடாது என்பதுதான் இதன் பொதுவான நோக்கம். ஆனால் ஒரு மெம்பர் கீழ்த்தரமான பாஷையைப பிரயோகிப்பாரானால் சபைத் தலைவர் சபையின் ஒழுங்கை எடுத்துக்காட்டி. அம்மாதிரியான பதங்களை வாபஸ்பெறச் செய்து மன்னிப்புக் கோரச் செய்வார்.

சட்டசபை விவாதங்களில் ஈடுபடும் மெம்பர்கள் பரஸ் பரம் ஒருவரையொருவர் நோக்கிப் பேசாமல் சபைத் தலை வரை நோக்கிப் பேசுவதென்பது இன்னொரு விதி. மெம்பர் கள் ஒருவரை யொருவர் நோக்கிப் பேச நேர்ந்தால் விரை வில் அவர்கள் தங்களுடைய நிதானத்தை இழந்து வசை மொழியில் இறங்க நேரிடும். எனவே பேசும் மெம்பர்கள் சபைத் தலைவரை நோக்கியே பேச வேண்டுமென்றே விதி

கண்டிப்பாக எல்லா பார்லிமெண்டுகளிலும் அமுல் நடத்தப்படுகிறது. மெம்பர்கள் இன்னொரு மெம்பர்களை குறிப்பிட்டுப் பேசுகையில் "கனம்" என்றோ "மகாகனம்" என்றோ பெயருக்கு முன்னால் சேர்த்துக்கொண்டு பேச வேண்டும். இது முதல் விதியை அனுசரித்ததாகும். டிவிஷனையோ அல்லது தொகுதியைக் குறிப்பிட்டோ சொல்ல வேண்டுமேயன்றி பெயரைக் குறித்துச் சொல்லக்கூடாது.

சட்ட சபைகளில் செய்யும் பிரசங்கத்துக்குச் சாதாரணமாக நேரக் கட்டுப்பாடு உண்டு. விவாதங்கள் மந்தமாக இருக்காமலும் தொண தொண வென்று போகாமலும் இருப்பதற்காகவுமே இம்மாதிரி வைத்திருக்கிறார்கள். விசேஷமான சந்தர்ப்பங்களைத் தவிர இந்த விதியை சபைத் தலைவர் கண்டிப்பான முறையில் அமுல் நடத்துவார். நிதி மசோதாக்கள், சட்டங்கள், இவைபோன்றவற்றிற்கு நேரக் கட்டுப்பாடு கிடையாது. பொது ஜனங்கள் சிரத்தை கொள்ளக்கூடிய விஷயங்கள் அவை என்பதால்தான் அம்மாதிரி. இதனால் மெம்பர்கள் காலவரையின்றி பேசலாமென்று அர்த்தமில்லை. மெம்பர்கள் தங்கள் பேச்சை விஷயத்துக்குப் பொருத்தமாக இருக்கும்படியும், மற்ற மெம்பர்கள் தெரிவித்த வாதங்களைத் திருப்பிச் சொல்லாமலும் இருக்க வேண்டும். இந்த விதிகளை அனுசரித்தே சட்டசபை விவாதங்கள் நடத்தப்படுகின்றன.

24-7-'41.

## இயற்கை அழகு

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

எனக்கு பன்னிரண்டு வயதிருக்கும். அதாவது இப்போது உன்னைவிட நான்கு வயது நான் சின்னவனாக இருந்த போது—மூன்றாவது பாரத்தில் வாசித்துக் கொண்டிருந் தேன். அப்போது "வீட்டின் மாலை நேரங்கள்" என்ற ஆங் கிலம் புத்தகத்தை படித்தேன். அது எனக்குப் பரிசாக வந்த புத்தகமென்று நினைக்கிறேன். இங்கிலாந்தில் ஜனங் கள் மாலை வேளைகளில் வீட்டிலிருக்கும் போது எப்படிப் பொழுதைப் போக்குகிறார்கள் என்பது பற்றிய விவரம் கதைகளின் ரூபமாக அப்புத்தகத்தில் கொடுக்கப்பட் டிருந்தன.

அக் கதைத் தொகுதியில் முதலில் உள்ளது "கண்களும், கண்களின்மையும்" என்பதாகும். முதலில் இந்த தலைப் பின் அர்த்தம் இன்னதென்று எனக்குப் புரியவில்லை. கதை யைப் படித்த பின்னர் விஷயம் விளங்கிற்று. கண்களுள்ள ஒருவர் வயல் பக்கமாகப் போய்ச் சுற்றி அங்கே நடக்கும் விஷயங்களைப் பதிவு செய்து கொள்ளுகிறார். அந்த அனு பவமே அக்கதை. நமது கண் பார்வையை எப்படி உப யோகிப்பது என்பதை உணர்ந்து அதைச் சரியாகப் பயன் படுத்திக் கொண்டால் அதனால் ஒப்பற்றலாபமுண்டு.

வாழ்க்கையில் நாம் பல ஜோலிகளைக் கவனிக்கும்படி யிருப்பதால் விஷயங்களை உற்று நோக்குவதில்லை. சில சமயங்களில் கவனிக்காமலேயே விட்டும் விடுகிறோம். எப் போதும், நம் பக்கத்திலுள்ள விஷயங்களைக் கவனித்துக் கொண்டு பொழுதை போக்கவேண்டுமென்று நான் சொல்ல வில்லை. இது காலத்தை வீணுக்குவதாகும். அப்படிச் செய்தால் நாம் சலித்தும் போய் விடுவோம். வேறு வேலை களையும் நாம் கவனிக்கவேண்டி யிருக்கிறது. ஆனால் விசேஷமாகவாவது நம் அருகேயுள்ள மனித சிருஷ்டி, இயற்கை முதலியவற்றை நன்கு கூர்ந்து கவனிக்க வேண் டும். ஒரு மனிதனை நன்கறிவதே மனிதனுக்குள்ள லக்ஷ ணம் என்பது ஒரு கவிஞனின் வாக்கு.

ஆனால் ஒருவர் இன்னொருவரைப்பற்றி ஆய்ந்து ஆராய்ச்சி செய்வது குறித்து இக்கடிதத்தை நான் எழுதவில்லை.

இயற்கை, அவற்றின் அற்புதம் இவை பற்றி எழுதுகி றேன். இவைபற்றி யெல்லாம் கூறும் ஓர் தனிப் புத்தகமே இருக்கிறது. ஆனால் நேரில் கண்ணால் பார்ப்பதற்குச் சம மாக அவைகளை யெல்லாம் சொல்ல முடியாது.

ஆகாயத்தை எடுத்துக்கொள். இது அநேக விதங்களில் அற்புதமானது. அதைப் பார்த்து மகிழ்வதிலும் சரி, இர வில் களங்கமில்லாத வானத்தில் நக்ஷத்திரங்கள் பிரகாசிப் பதைக் கண்டானந்திப்பதிலும் சரி நமக்கு அலாதியான ஓர் அனுபவ உணர்ச்சி ஏற்படுகிறது. கிரஹங்களைக் காட்டி லும் நக்ஷத்திரங்கள் மிகவும் பிரகாசமானவை. வான சாஸ்திரிகள் நக்ஷத்திரங்களின் தூரம் முதலியவை பற்றி சொல்லுவார்கள்.

இரவில் வானத்தின் வனப்பு ஒரு புறமிருக்க அதனால் ஏற்படும் ஆச்சர்ய உணர்ச்சி மிக்க விசேஷம். சிருஷ்டி கர்த்தாவின் பெருமையும், தன்னடக்கமும் உனக்கு ஏற்படுகிறது.

வானத்துக்கு அடுத்தபடியாக உள்ளது கடல்கள். கடல் அலைகள் பொங்கி எழுந்து மோதி அடிப்பதைக் காண்பது தனியான உணர்ச்சி தரக்கூடியதாகும். பூமியைவிடக் கடல் பகுதியே அதிகம். கடலுக்குள் எத்தனை உலகங்கள்? என்ன அழகான மீன்கள்! என்னென்ன பவளங்கள்! ஆஹா! பெரிய மிருகங்கள்! எப்படி இவை உயிர் வாழ்கின்றன? கடல்களும், அவற்றுள் அடங்கியிருக்கும் விசித்திரங்களும் தனியான பயிற்சி விஷயங்களாகும். கடல் வாழ்வைப் பற்றி ஓரளவு உணரச் சென்னையிலுள்ள "கடல் ஜந்துக்கள் காட்சிச்சாலை" யைப் பார்த்தால் தெரியும்.

அடுத்தபடியாக மலைகள். தூரத்திலிருந்து ஹிமயமலையை நாம் கண்டோம். அங்கு ஒரே பனி, சூரிய வெளிச்சத்தில் பனியில் மூடியிருக்கும் அம்மலையைப் பார்க்க எவ்வளவு நேர்த்தியாயிருக்கிறது! டார்ஜிலிங் என்ற இடத்தில் சூர்யோதயம் வெகு அற்புதம் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நாம் அங்கு போய் பார்க்கவேண்டும். தெய்வ சங்கல்பம் எப்படியோ? மலையிலுள்ள காடுகள், ஓடைகள், காற்று இவைகள் ஒருபுறம். ஏன்? குற்றாலம் சிறிய இடம் தானே? குற்றாலக் காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்கிறது பகவத் கிருபையால் கூடிய சீக்கிரம் அம்மாவுடன் நான் அங்கே போக உத்தேசித்திருக்கிறேன். நீயும் அங்கு வந்து கொஞ்ச நாள் இருக்கவேண்டும்.

அடுத்தபடியாக வனங்கள் இருக்கின்றன. அங்கே எங்கும் மரங்கள், செடிகள், புஷ்பங்கள் எல்லாம் நிறைந்து குளு குளு வென்றிருக்கிறது.

ரிஷிகள் கடவுளை நாடித் தவம் புரிவதற்கு வனங்களைப் பொறுக்கிக்கொண்டது சரியென்றே தோன்றுகிறது. காளிதாஸன் வரைந்த குமார ஸம்பவத்தில் வனங்களைப் பற்றிய வர்ணனை விசேஷமென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நாமிருவரும் ஒன்று சேர்ந்து அதைப் படிக்கவேண்டும்.

தினசரி சூர்யோதயம், அஸ்தமனம் இரண்டும் சம்பவிக்கின்றன. வான சாஸ்திரப்படி சூரியன் உதிப்பதுமில்லை, அஸ்தமிப்பதுமில்லை. உலகம்தான் சுற்றுகிறது. ஆனால், நமது திருஷ்டியில் படும் மேற்படி இரண்டு காட்சிகளும் வெகு அழகாக இருக்கின்றன.

கூடுமானவரை சூர்யோதயம், அஸ்தமனம் ஆகிய இரு காட்சிகளையும் அநேகம் தடவைகள் பார்க்கவேண்டும். இதுவே ஞான வளர்ச்சிக்கு சாதகமாக இருக்கும். சந்திரோதயம் இருக்கிறது. சந்திரிகையின் அழகை வர்ணிக்காத கவியே இல்லை. ஆம், அது உண்மைதான், சந்திரன், அதன் கிரணங்கள் இரண்டும் அழகு நிறைந்தவை.

உலகத்திலும் முக்கியமாக நம் நாட்டிலும் எவ்வளவோ நதிகள் இருக்கின்றன. கங்கை யமுனை சங்கமம் முதலியன தேவர்கள்கண்டு களிக்கக்கூடிய இடம். நீ பிறப்பதற்கு முன் நானும் உன் தாயாரும் அங்கே நீராடி யிருக்கிறோம். உன்னோடும் ஒரு தடவை அங்கு போகவேண்டும். கங்கை, பிரும்மபுத்திரா ஆகிய நதிகள் புனிதமானவை. இதே போல உலகில் பல நதிகள் உண்டு.

இயற்கை சிருஷ்டிகளான இவை ஆச்சர்யகரமானவை. என்றாலும் மனிதனும் உலகமும் நிலைப்பதற்கு இவைகள் அத்தியாவசியம். சூரியன், சந்திரன், மலைகள், வனங்கள், ஆறுகள் இவையின்றி உலகத்தில் வாழமுடியாது. எனவே இயற்கையில் அழகும், அத்துடன் உபயோகமும் சேர்ந்து கலந்திருக்கின்றன.

*25-7-'41.*

## கோபம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

"சுயமரியாதை, சுய உணர்வு, தன்னடக்கம் இவை மூன்றுமே வாழ்க்கையில் உன்னத நிலையை அடைவதற்கான மார்க்கங்கள்" என்று மேனாட்டு கவி டென்னிஸன் குறிப்பிட்ட வார்த்தைகளைச் சமீபத்தில் உனக்கு எழுதியதாக எண்ணுகிறேன். இந்த மூன்றில் தன்னடக்கம் என்பது மற்ற இரண்டுக்கும் அஸ்திவாரம்போல. காகிதத்தில் எழுதிப் பார்த்தால் இது ரொம்ப சுலபமாகத் தோன்றுகிறது. அனுஷ்டானத்தில் இது மிகவும் கஷ்டமானது. தன்னடக்கத்தை அனுஷ்டித்து ஒரு காரியத்தை வெற்றிகரமாக செய்யும் பக்ஷத்தில் அதனால் உனக்கு மிகுந்த திருப்தி ஏற்படுகிறது.

இந்த அம்சத்தை நான் ஒரு நாள் ஒரு சின்ன விஷயத்தில் ஆனால் மிகவும் முக்கியமான கட்டத்தில் உணர்ந்தேன். தினசரி க்ஷவரம் செய்ய ஒரு நாவிதன் இங்கு வருகிறான். அவன் நற்குணங்கள் பொருந்தியவன். தன்னுடைய வேலையில் அவன் மிகவும் கெட்டிக்காரன் என்று சொல்ல முடியாது. ஆனால் நல்ல ஜாக்கிரதையோடு நடப்பவன் நோயாளிகளுக்கெல்லாம் க்ஷவரம் செய்பவன். க்ஷவரம் செய்து கொள்ளுகையில் நான் என் முகத்தை சவுகர்ய

மில்லாத நிலைமையில் உயர்த்தவேண்டு மென்கிருன். நான் குனிந்தாலும் அவன் என் முகவாயைத் தூக்கி மெதுவாக உயர்த்துகிருன். இதனுல் எனக்கு அன்று கோபம் வந்தது. ஆனுல் அடக்கிக்கொண்டு விட்டேன். இதில் எனக்குச் சந்தோஷம்.

கோபமடைவதால் ஏற்படக்கூடிய பலாபலன்களை என் வாழ் நாளில் நான் உணர்ந்திருக்கிறேன். கோப உணர்ச்சியோடு நான் போராடி யிருக்கிறேன். சில சமயங்களில் வெற்றி யடைந்திருக்கிறேன். ஆனுல் நான் விரும்பும் அளவுக்கு வெற்றி அநேகமாகக் கிடைப்பதில்லை. ஒருவருக்குக் கோபம் வந்தால் இரு சாராருக்கு மட்டும்தான் அதிகக் கஷ்டநஷ்டம். இதை என் அனுபவித்திலிருந்து சொல்லுகிறேன். அதாவது கோபித்துக் கொள்பவருக்கும், அவரைச் சேர்ந்து அண்டி நிற்பவருக்குமே நஷ்டம். மற்றவர்கள் இது கண்டு அனுதாபப்படலாம் அல்லது வெறுக்கவும் கூடும்.

எந்த விதத்திலும் கோபித்துக் கொள்வதென்பது நல்லதல்ல. கோபம குறிப்பிட்ட அந்த சமயத்தில் ஏதோ சவுகர்யமாக இருப்பது போல் தோன்றும். அவ்வளவுதான். ஆனுல் இதனுல் ஏற்படக்கூடிய விளைவுகளோ ரொம்ப மோசமானவை. தேகாரோக்கியத்துக்குக்கூட இதனுல் கெடுதி. ஒருவர் ரொம்ப உணர்ச்சியுள்ளவராக இருந்தால் கோபச் சொற்களால் தினக் கணக்கில்கூட வேதனைப்படும்படி யிருக்கும். கோபத்தில் நிதானம் போய்விடுகிறது. பிறகு அவமானப்படும்படியான பேச்சுகளிலும், செயல்களிலும் ஈடுபட நேருகிறது. சுந்திர காண்டத்திலே

ஸ்ரீ ஹநுமான் கோபக்காரரின் சொல், செயல் இவை இரண்டையும் மிக்க பொருத்தமாக விளக்குகிறார். அந்த ஸ்லோகங்களை உனக்கு வாசித்துக் காட்டி ஒரு நாள் விளக்கமாகச் சொல்கிறேன்.

ரொம்பக் கடினமாகவும், எரிச்சலுண்டாகும்படியான சந்தர்ப்பங்களிலும் நிதானமிழக்காமல் இருப்பின் அத் தன்மையை மதிப்பிட முடியாத ஓர் வரம் என்றுதான் சொல்ல வேண்டும். இது ரொம்ப கஷ்டமானதுதான். ஆனால் நமது கோபத்தை சொல்லிலோ செயலிலோ காட்டாமலாவது இருக்கலாம்.

இதற்காகச் சில அனுபவ பூர்வமான காரியங்கள் இருக்கின்றன. கோபம் வரும்போது, பேசவோ ஏதாவது செய்யவோ தோன்றினால் ஒரு முறைக்குப் பத்து முறையாக யோசனை செய்ய வேண்டும். சிறிது நேரம் மௌனமாக இருக்க வேண்டும். இருக்கும் இடத்தைவிட்டு வெளியே போய்விடலாம். வேறு ஏதாவது ஒன்றில் யோசனையை செலுத்தலாம். இவையெல்லாம் தானாகச் செய்துகொள்ளும் வெறும் உபாயங்கள். ஆனால் உண்மையான பரிகாரம் வேறு. கோபம் வந்து, நிதானம் இழப்பதற்கான காரணங்கள் எவை என்பதை அமைதியாக ஆலோசனை செய்து பிறகு நிவர்த்தித்துக் கொள்வதே முறை.

நாம் கோபத்திலிருக்கையில் நாம்தான் சரிபோலவும் மற்றவர்களெல்லாம் தவறிழைத்தது போலவும் கருதுகிறோம். அநேகமாக இது நேர் விரோதமாகவுமிருக்கும். நாமே தப்பாக நடந்திருக்கலாம்; அல்லது நாமும் தப்பாக நடந்திருக்கக்கூடும். இன்னொருவர் தவறாக இருப்பினும்

நாம் கோபமடைந்து, எதிராளி நம்மை ஏதோ அவமானப் படுத்திவிட்டது போல முற்கூட்டி முடிவு செய்துகொண்டு விடுகிறோம். இது நியாயமில்லாத எண்ணம்.

நமது கோபத்தாலும், அதை வெளிக் காட்டுவதாலும் எதிராளியைச் சரிப்படுத்த முடியும் என்று நினைக்கிறோம். எப்போதும் இது பிசகு. பிறர் சரியாயிருக்கையில் அவரைக் கேவலமாக நடத்தினால் அவருக்குத் துக்கமே ஏற்படும். அவர் நல்லவராயிருந்தால் நீங்கள் சொன்னதை மறந்து மன்னித்துவிடலாம். அதில்லாமல் வேறு தினுசாக இருப்பின் அவர் ரொம்ப மோசமாவும் நடக்கக்கூடும். குழந்தைகளைக்கூட மிகவும் கெடுதலாக இருந்தாலன்றி அவர்களைத் தண்டிக்கக் கூடாது. அப்படியே தண்டித்தாலும் கோப உணர்ச்சியோடு எதையும் செய்யக்கூடாது. நமது வேலைக்காரர்கள் விஷயத்தில் நாம் அடிக்கடி முரட்டுத்தனமாக நடந்துகொள்ளுகிறோம். இது கூடாது. இதனால் யாருக்கும் லாபமில்லை.

இதெல்லாம் தனிப்பட்டவர்களைப் பொறுத்த காரியம். கோபத்தை அடக்கிக்கொள்ளத்தான் வேண்டும். நாட்டுக்கோ நாட்டினருக்கோ அவமானம் ஏற்படுவது இன்னொரு விஷயம். இதனால் மன வருத்தம் ஏற்படலாம். இந்த இடத்தில்கூட கோபத்தால் பயன் ஒன்றும் இல்லை. 1919-ல் அமிர்த சரஸில் நடந்த காங்கிரஸ் எனக்கு ஞாபகம் வருகிறது. விஷயாலோசனைக் கமிட்டி கூடிய போது சில ஐரோப்பியர்கள் நம்மவர்களை இரக்கமில்லாமல் நடத்தியதற்காக நமது ஜனங்கள் சில ஐரோப்பியரைத் தாக்கியது சரிதான் என்று நான் கூறினேன். மகாத்மாஜி

அப்போது "இந்த அட்டூழியங்களைக் கேட்டு ஸ்ரீ சத்திய மூர்த்திக்கு ஆத்திரம் வருவது போல எனக்கும்தான் கோபம் வருகிறது. ஆனால் நமது கோபத்தால் எதிர் அட்டூழியம் புரிய விடக்கூடாது. கோபத்தை அடக்கி அதை எதிர்காலத்தில் இதுபோன்ற அட்டூழியங்கள் நடவாமல் செய்வதற்கான செயல்களில் திருப்பவேண்டும்" என்றார். ஆகவே எந்தவிதத்திலும் தன்னடக்கத்தால் சுய உணர்வையும், சுயமதிப்பையும் பெற வழி உண்டாகும்.

இந்த அருங்குணங்களை ஆண்டவன் உனக்கு அருள்வாராக!

*26-7-'41*

## சுயமரியாதை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

தன்னடக்கம் என்பது பற்றி என் நேற்றையக் கடிதத்தில் எழுதி யிருக்கிறேன். சுய மரியாதையும் சுய உணர்வும் தன்னடக்கத்தையே அஸ்திவாரமாகக் கொண்டவை என்பதையும் அதில் தெரிவித்திருந்தேன். சுய மரியாதைக்கு விரோதமாக யாரும் எதையும் செய்ய முடியாது.

சிலர் சில காரியங்களைச் செய்யத் தயாரில்லாத நிலைமையையே சுய மரியாதையின் முதல் சின்னமெனலாம். அக் காரியங்களைச் செய்வது தம்முடைய சுய மதிப்புக்கு பங்கம் என்று அவர்கள் எண்ணுவதே அதற்குக் காரணம். மற்றவர்கள் கேவலமென்றோ, தவறென்றோ தடுத்து ஒதுக்கி யிருப்பது காரணமல்ல.

வெளியில் கண்டு பிடிக்க முடியாததாயினும் சிலர் சொந்தமாகவே சில காரியங்களை தவறென்றோ அகௌரவம் என்றோ எண்ணி அவற்றைச் செய்யாதிருக்கக்கூடும். இதில் தான சுயமதிப்பு என்பது முன்னின்று வேலை செய்கிறது. எந்தக் காரியம் இழிவு என்பது அவரவர்கள் சுய மரியாதைப்பற்றி கொண்டுள்ள அபிப்ராயத்தைப் பொறுத்திருக்கிறது. இது கல்வி, கலா நாகரிகம், முதலியவற்றை அனுசரித்ததாகும்.

ஆகவே சரியான முறைப்படியுள்ள நல்ல கல்வி ஞானம் இருப்பது அவசியம். நல்ல இலக்கியங்களை வாசிக்க வேண்

டும். நல்ல சிநேகிதர்கள் இருப்பது அவசியம். பிரபலஸ்தர்களின் நடத்தையையும், குணத்தையும் அறிய வேண்டும். இதன் மூலம் சுயமதிப்பு உயரும். சரியாகவும் கண்யமாகவும் நடக்கவும் வழி உண்டாகும்.

சுய மரியாதை உள்ளவராக இருந்தால் அவர் எங்கேயும் நல்ல காரியங்களுக்கு அசைக்க முடியாத பலமாக இருப்பார். அவரது சொல், செயல், நடத்தை ஆகிய அனைத்தும் அவருடன் பழகுவோரைத் திருப்தி செய்யும். ஆனுல் சுய மதிப்புள்ளவர்களுக்கு தங்களிடம் விசேஷமான நடத்தை படிந்திருக்கிறதென்பதான எண்ணமே இராதென்பதுதான் தனி விசேஷம். அவர் சாதாரணமாக இயற்கையாக நடக்கிருர். அவரது சுபாவம் சுயமதிப்புள்ளதாகும். எனவே அதற்கேற்றவாறு நடக்கிருர்.

பிறர் சொல்வதற்காக இல்லாமல் தானே சுய மதிப்பைப் பிரதானமாக எண்ணி நடப்பதென்பது மிகவும் விசேஷமானதாகும். தானுகவே அறிந்து நடப்பதென்பதால் அக் குணம் எப்போதும் நிலையாக இருக்கும். இரண்டாவதாக இதற்கு வெளியே யிருந்து ஆதாரம் வேண்டுமென்பதும் கிடையாது. நீதான் அதற்கு ஆதாரம். ஆங்கிலத்தில் சொல்லுவதுபோல " அது செய்யப் படுவதில்லை " ஆகவே நாமெல்லோரும் சுயமதிப்பைப் பெருக்கிக்கொள்ள வேண்டும்.

தன்னடக்கம், சுய மதிப்பு இவை ஏற்பட்டுப்போனுல் உன்னை நீனே கண்யமாக எண்ணிக் கொள்ள இடமேற்படும். மற்றவர்களின் அபிப்ராயத்தை விட உன்னுடைய அபிப்பிராயமே முக்கியமாகும். நீ தைர்யமாகவும்,

சத்தியத்தோடும் இருப்பதாக எண்ணம் உதிக்குமானால் உன்னையே கண்யமாகக் கருதும் மனோபாவமும் தானே ஏற்படும். எதுவும் உன்னைத் தடுக்க முடியாது. உன்னைப்பற்றி உனக்குநல்ல அபிப்ராயம் இல்லாமல் போய் விட்டால் வேறு எதுவும் அதற்கு ஈடு செய்ய முடியாது.

தன் மதிப்பிற்கு பிறகுதான் சுய உணர்வு ஏற்படுகிறது.

"நான்" என்பது என்ன? 'நீ' என்பது யார்? அதன் இறுதி என்ன? இவையெல்லாம் முக்கியமான பிரச்னைகள். நமது ரிஷிகள், அவதாரங்கள் இவற்றிற்குப் பதில் தெரிவித்திருக்கிறார்கள். நாம் என்பது உடலல்ல. புலன்கள் அல்ல. மனமோ, புத்தியோ அல்ல. எல்லாவற்றிற்கும் மேலானது. தத் த்வமஸி என்பது அத்வைதக் கோட்பாடு. நீ சின்ன பெண். நான் தெரிந்துகொண்ட அளவில் கூட உனக்கு இவை பற்றியெல்லாம் எழுதுவதற்கில்லை. ஆனால் சுய உணர்வு இருக்க வேண்டியதன் அவசியத்தை மட்டும் நீ அறிந்து கொள்ளவேண்டும்.

நீ உன்னைப்பற்றி முடிந்தவரையில் ஆராய்ந்து பார்த்துக் கொள்ள வேண்டும். இதன் மூலம் கிட்டும் சுய உணர்வு மக்களின் உன்னத லக்ஷியத்தை அடைய உதவி செய்வதாயிருக்கும். தன்னடக்கம், சுயமரியாதை, சுய உணர்வு, இவையெல்லாம் ரொம்ப சாதாரண முடிவுபோலத் தோன்றும். மனிதவர்க்கத்தின் முன்னேற்றத்திற்கான முறையிலேயே அம்மூன்று குணங்களைப்பற்றியும் கவி குறிப்பிட்டிருக்கிறார். அக்குணங்களை உனக்கும் பகவான் கொடுப்பாராக.

27-7-'41

## புத்தகம் படித்தல்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

புத்தகங்கள் படிப்பது குறித்து ஏதாவது எழுதும்படி நீ என்னிடம் சொன்னுயல்லவா? இன்று அதுபற்றி எழுதுகிறேன். உனக்குப் புத்தகங்கள் படிப்பதில் மிகவும் ஆசை என்று எனக்குத் தெரியும். இது எனக்கும் உண்டு. சென்ற சில மாதங்களாக எனக்கு அவகாச மிருந்தது. எனவே கொஞ்சம் வாசித்தேன். அதனுல் எனக்கு சந்தோஷமே. புத்தகங்களைப்போல உற்ற தோழன் வேறில்லை. இஷ்டம் போலப் படிக்கலாம்; இல்லாவிட்டால் சும்மா இருக்கலாம்.

படிக்கும்படியாக நன்ருக அச்சிட்ட புத்தகங்கள் விலை அதிகம். சென்னை போன்ற இடங்களில் தற்கால முறையில் புத்தக சாலைகள் ஏற்பட்டுள்ளன. குறைவான மாதச் சந்தாவில் அநேகமாக ஒவ்வொரு விஷயத்தைப்பற்றியுமுள்ள புத்தகங்களெல்லாம் படிப்பதற்குக் கிடைக்கின்றன. சென்னை சர்வ கலாசாலைப் புத்தகசாலை இந்தியாவில் சிறந்த புத்தகசாலைகளில் ஒன்ருகும். நீ இதில் சேரலாம். நான் அதில் ஒரு அங்கத்தினர். என் மூலமாக நீ புத்தகங்கள் பெறலாம். சென்னை இலக்கிய சங்கத்திலும் நல்ல புத்தகங்கள் இருக்கின்றன. இரண்டு புத்தகசாலைகளிலிருந்தும்

புத்தகங்கள் பெறலாம். கானிமரா புத்தகசாலை வேறு இருக்கிறது. வேண்டிய விஷயங்களைப் போய் பார்த்துத் தெரிந்துகொள்ள இது உபயோககரமானது. அரசியல், பொருளாதாரம், சரித்திரம் முதலியவற்றைப்பற்றிய புத்தகங்களெல்லாம் சென்னை சட்ட சபை புத்தகசாலையில் இருக்கின்றன. சில அங்கத்தினர்கள்தான் இதைப் பயன்படுத்திக் கொள்வதாகத் தெரிகிறது. நிபந்தனைகளின் மீது இதையும் பொது மக்கள் உபயோகித்துக்கொள்ளும்படி செய்யலாம்.

புத்தகத்தில் எவ்வளவோ இருக்கின்றன. நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது முக்கியமாகும். பத்திரிகைகளில் வெளிவரும் விமர்சனங்கள் காரணமாக நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது சுலபம்.

அச்சிடுவது என்ற கலை சமீபமாக ஏற்பட்டது. அம்முறை வருவதற்குமுன் எழுத்துப் பிரதிகளே. இன்றும் அவை மாதிரிக்குக் கிடைக்கும். பனை ஓலையில் உள்ள சுவடிகள் இருக்கின்றன. எழுத்தாணி கொண்டு அவற்றை எழுதியிருக்கின்றனர். அவைகளை இன்று கூட நாம் காணலாம்.

எழுத்துப் பிரதியும் இல்லாத காலமுண்டு. அக்காலத்தில் தங்கள் ஞாபகத்தை கொண்டே விஷயங்களைத் தெரிவித்து, அறிவைப் பெருக்கி வந்தனர். நமது வேதங்களெல்லாம் கர்ண பரம்பரையாகவே வந்திருக்கின்றன. ஞாபகத்திலிருந்தே பெருவாரியான விஷயங்கள் பிற்காலத் தலைமுறைக்குக் கிடைத்திருக்கின்றன. இலக்கணம், உச்சரிப்பு முதலியவற்றிற்குக்கூட வாய்மொழியாக விதிகள் அமுல் செய்யப்பட்டன. இன்று கூட வேதங்களை மனப் பாடத்தி

லிருந்து சொல்லக்கூடிய பண்டிதர்கள் இருக்கிறார்கள். வேதங்களுக்கு ‘சுருதி’ என்றும் பெயர்.

இதிலிருந்து நாம் கற்கவேண்டிய பாடம் ஒன்றுண்டு. எந்த அளவுக்குச் சாதகப்படுத்திக் கொள்ளவேண்டுமோ, அந்த அளவில் ஞாபக சக்தியைத் தயார் படுத்திக்கொள்ளும் வழக்கம் இப்போதில்லாமலிருக்கிறது. ஞாபக சக்தி மிகவும் உயர்ந்த புத்தித் திறம். இதை நீ பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். பரீட்சையில் பெருமையோடு தேர்ச்சி பெறுவதற்கானாலும் சரி; அல்லது வாழ்க்கையை வெற்றி கரமாகவும் சந்தோஷகரமாகவும் நடத்துவதற்கானாலும் சரி; நல்ல ஞாபக சக்தி இருப்பது உபயோககரமானது. இந்தத் திறமையைத் தேடிக்கொள்ள தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம், இவற்றிலுள்ள நல்ல கவிதைகளைக் கற்க வேண்டும்.

புத்தகங்கள் படிப்பதற்கு அநேகம் வழிகள் உண்டு. இது-புத்தகங்கள், அவற்றைப் படிப்பவர் இருவரையும் பொறுத்த காரியம். தமிழ் சமஸ்கிருதம், கிரேக்க பாஷை, லத்தின், ஆங்கிலம் இவற்றை அக்கரையோடு படித்துணர வேண்டும். என் அனுபவத்திலிருந்து நான் உனக்கு எழுத முடியும். வால்மீகி ராமாயணத்தை நான் திரும்பத் திரும்ப பல தடவைகள் படித்திருக்கிறேன். இப்போது முப்பதா வது தடவையாக சுந்தர காண்டத்தைப் படிக்கிறேன். இருப்பினும் எனக்கு அலுக்கவில்லை. நிலையான சந்தோ ஷத்தைத் தரும் அம்சமே நூல்களிலுள்ள விசேஷம்.

ஷேக்ஸ்பியர், கம்பராமாயணம், துளஸிதாஸ் ராமாயணம் முதலிய நூல்களையும் குறிப்பிடலாம். எப்படியிருப்பினும்

சில நல்ல நூல்களை நீ தேர்ந்தெடுத்துக்கொண்டு அவற்றை அடிக்கடி முடிந்தவரையில் படிக்கவேண்டும்.

இந்த இலக்கியங்களைப் படிக்கும்போது வியாக்யானங்களைப் படிக்காமல் இருந்து விடலாம். சில வியாக்யானங்கள் ரொம்ப நன்றாயிருக்கின்றன என்றாலும் மூலத்தின் அழகுடன் அவற்றை ஒப்பிடமுடியாது.

இந்த இலக்கியங்களிலே கஷ்டமான பகுதி ஏதாவது வருமாயின், அதை உணரப் பன்முறை படிப்பதே மேல். அப்படியும் புரியவில்லையானால், அப்போது நிறுத்திவிட்டு திரும்பவும் பார். கூடிய விரைவில் விஷயம் விளங்கும் நல்ல அகராதியை மட்டும் நீ வைத்திருக்கவேண்டும்.

*28-7-'41*

## II.

ஞாபக சக்தியைப் பெருக்கிக் கொள்வதற்குக் கவிதைகளை மனப் பாடம் செய்வது சிறந்த மார்க்கமென்று என்னுடைய சென்ற கடிதத்தில் உனக்கு எழுதினேன். ஞாபக சக்தியில் வைத்துக் கொள்ளத் தக்க உயர்வான வசனப் பகுதிகளும் உண்டு. டெமாஸ்தனிஸ், ஸிஸிரோ, எட்மண்ட் பர்க், ஷெரிடான் முதலியவர்கள் வரைந்தவற்றை நினைவில் இறுத்திக் கொள்ளலாம். சார்லஸ் லாம்ப், ஹாஸிலிட், டிக்வன்ஸி, ராபர்ட்லூயி ஸ்டீவன்ஸன் முதலியவர்களது நடை உன் ஞாபகத்தை விட்டு அகலாதிருக்கக் கூடியவை. காதம்பரி என்ற வசன நூல் மிக்க அழகான நடையுடன் கூடியது.

ஒரு பாஷையை அறிய வேண்டுமானால், அதிலுள்ள சிறந்த இலக்கியங்களைப் படிக்க வேண்டும். இதுவே அனு

பவத்தில் நான் கண்டுகொண்டது. இலக்கணத்தின் அடிப் படைகளை அறிய வேண்டியது அவசியம் தான். ஆனால் இலக்கணமென்பது பெயரளவுக்குத்தான். இலக்கியமே பாஷையின் ஜீவன். ஆகவே புத்தகங்களை நீ படிப்பது கண்டு எனக்குச் சந்தோஷம். ஆனால், நீ நல்லதாக இருப்ப வற்றைப் பொறுக்கிக் கொள்ள வேண்டும்.

நாவல் என்பது இலக்கியத்தில் சாதாரணமானதொரு அம்சம். பூர்வ காலத்தைச் சேர்ந்த ஸ்காட், டிக்கன்ஸ், தாக் கரே முதலியவர்களது நாவல்களும், பிற்காலம் வந்த மெரி டித், ஜார்ஜ் எலியட் முதலியவர்கள் எழுதிய நாவல்களும் உண்மையான இலக்கியங்களாகும். தற்கால நாவல்களில் எனக்குப் பிரியம் கிடையாது. ஆனால், இதிலும் விலக் குண்டு. அவற்றிலுள்ள ஆங்கில நடையும், கருத்தும் விசேஷமாயில்லை. துப்பறியும் நாவலைக் கண்டால் எனக் குப் பிடிக்கவில்லை. ஸர் ஆர்தர் கானன்டால் எழுதிய ஷெர்லக் ஹோம்ஸ் ஒன்று மட்டுமே இதில் விலக்கு.

யாத்திரை, தீவிரச் செயல்களின் அனுபவம் இவற்றைப் பற்றியுள்ள புத்தகங்களைப் படிக்கவேண்டும். யாத்திரை செய்து அனுபவங்களை புத்தகமாக எழுதித் தெரிவிக்கும் ஆசிரியர்களிருக்கின்றனர். சீனதேச யாத்ரீகர்களான ப்ராஹியான், ஹீன்த்ஸாங் இருவரும் இந்தியாவுக்கு வந் தார்கள். பின்னர் போர்த்துகேசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் முதலியவர்கள் வந்தார்கள். அவர்களெல் லாம் தங்களது யாத்திரையைப்பற்றி புத்தகங்கள் எழுதி யிருக்கின்றனர். நமக்கு அவை முதல்தரமான தகவல்களைத் தருகின்றன.

உன் போன்ற சிறு பிராயமுள்ளவர்களுக்கு வீரச் செயல்கள், வேட்டை, மலைகள் மீதேறி ஆராய்ச்சிகள் செய்வது போன்ற விஷயங்கள் பற்றிப் புத்தகங்கள் இருக்கின்றன. புத்தகாசிரியர்கள் நல்ல எழுத்தாளர்களாகவும், விஷயமறிந்தவர்களாகவும் இருந்தால், அவர்களது புத்தகங்களால் ருசி ஏற்படுவதுடன் நாமும் அவர்களைப்போல நடக்கவேண்டுமென்ற இச்சையும் பிறக்கும். நீ அத்தகைய புத்தகங்களைப் படிக்க வேண்டுமென்பது என் விருப்பம். சர்வ கலாசாலைப் புத்தகசாலை நிர்வாகியிடம் அப்புத்தகங்களைப்பற்றிய ஜாபிதா கிடைக்கும்.

அந்நிய பாஷைகளிலுள்ள புத்தகங்கள் இருக்கின்றன. அவற்றின் மொழிபெயர்ப்புகளையாவது படிப்பதவசியம். 'டான் க்விக்ஸாட்' என்ற ஸ்பானிய புத்தகம், ரஷ்ய பாஷையில் சிறந்த டால் ஸ்டாய் நாவல்கள், புகழ்பெற்ற பிரஞ்சுப் புத்தகங்கள் இவற்றின் மொழி பெயர்ப்புகளைப் படிக்க வேண்டும்.

படிப்பதற்குச் செயற்கையில் செய்து கொள்ளக்கூடிய உபாயங்களுண்டு. அவற்றை நீ பழகிக்கொள்ள வேண்டும். சரியான தோரணையில் புத்தகங்களை நீ படிக்கவேண்டும். உட்கார்ந்து படிப்பது விசேஷம். நாம் சில சமயங்களில் சோம்பேறித்தனமாக இருக்கும்படி நேருகிறது. அப்போது படுத்துக்கொண்டே வாசிக்கிறோம். அந்த மாதிரியெல்லாம் படிப்பது சுலபமானதல்ல. கண்ணுக்குக் கெடுதல். அப்படியே படிக்க வேண்டுமானால் வெளிச்சத்துக்குள்ளபடி நம்மைச் சரி செய்துகொள்ள வேண்டும். இரவில் நாம் அதிக வெளிச்சத்தைத் தரக்கூடிய மின்சார விளக்கு வெளிச்சத்தில் படிக்கிறோம். நான் அப்படிச் செய்

கிறேன். நீ போதிய வெளிச்சத்தோடு படிக்கவேண்டும். அதிகமாகவும் வெளிச்சம் கூடாது.

காகிதம், எழுத்து, புத்தகங்களின் பைண்டு இவையெல்லாம் சரிவர இருப்பது அவசியம். புத்தகங்கள் படிப்பதை ருசி பெறச் செய்வதற்கு அவை முக்கியம். சமீப காலம் வரையில் மலிவு என்பதற்காக கிரந்தம், தமிழ் புத்தகங்கள் இவற்றை ஆபாசமான காகிதங்களில் அச்சிட்டு வந்தனர். அவற்றையெல்லாம் நீ பார்த்திருக்கிறாயோ என்னவோ எனக்குத் தெரியாது. அவை விகாரமாகவும், பிடிக்காமலும் இருக்கின்றன. அப்படியே நீ அவற்றைப் படிப்பதனாலும், அவற்றின் தோற்றம், வாசனை இவை காரணமாக நீ தொடர்ச்சியாக அவற்றை படிக்க முடியாது. இப்போது சம்ஸ்கிருதம், தமிழ் இவற்றிலுள்ள புத்தகங்கள் நல்ல காகிதத்தில் அச்சிட்டு செவ்வையாக வைக்கப்படுவது திருப்திகரமான விஷயம். ஸ்ரீ ரங்கம் ஸ்ரீ வாணி விலாச அச்சுக்கூடம், திருநெல்வேலியிலுள்ளதைப் போன்றுள்ள பிரசுர சங்கங்கள் இந்த வேலையைத் திறம்படச் செய்கின்றன. அவற்றிற்கு ஆதரவு அளிக்கவேண்டும்.

சிலர் நல்ல புத்தகங்களைப் படிக்கும்போது புத்தகத்திலேயோ அல்லது வேறு காகிதத்திலேயோ குறிப்பெழுதுகின்றனர். நான் ஒருபோதும் அப்படிச் செய்வதில்லை. இது பற்றி நீ என்ன நினைக்கிறாய் என்று எனக்குத் தெரியாது. புத்தகத்தைப் படிக்கும்போது அது பற்றிய உன் அபிப்பிராயங்களைத் தனியாக ஒரு நோட் புத்தகத்தில் குறிப்பெழுதிக் கொள்ளலாம். ஞாபகசக்தியை வளர்த்துக்கொள்ள இது உதவியாயிருப்பதுடன் கையெழுத்தும் நன்கு படியும்.

எனவே, படித்துப் பயன் பெறு.

*29—7—'41.*

## நல்லவர் பழக்கம்

என் அன்புள்ள
**லக்ஷ்மிக்கு,**

உண்மையில் நல்ல முறையிலுள்ள சகவாஸத்தின் விசேஷத்தை மிகைப்படுத்தத் தேவையில்லை. மஹாபுருஷரான ஸ்ரீ சங்கராச்சாரியார் பின் வருமாறு கூறுகிறார்,

> सत्संगत्वे निःसंगत्वं निःसंगत्वे निर्मोहत्वं ।
> निर्मोहत्वे निश्चलतत्वं निश्चलतत्वे जीवन्मुक्तिः ॥

நல்ல சகவாஸத்தால் பந்தத்திலிருந்து விடுபட முடிகிறது. விடுபட்ட தன்மையிலிருந்து அறியாமை விலகுகிறது. இதனுல் சத்தியத்தில் நாட்டம் பிறக்கிறது. அதிலிருந்து வாழ்க்கையில் உலக இச்சைகளை விலக்க முடிகிறது. இது மிகவும் உயர்ந்த அத்வைத விஷயம், இப்போது இதை உனக்குப் போதிப்பதற்கில்லை. நல்லவர் சேர்க்கையின் பெருமையைச் சொல்லவே இதை உனக்குத் தெரிவித்தேன்.

நல்லவர்களாகவும், மேதாவிகளாயும் இருப்பவர்களிடையே இருப்பதால் திருப்திகரமான பலன் கிட்டிவிடுகின்றன. ஒருவர் இன்னெருவரின் மஹிமையைத் தெரிந்து கொண்டுவிட்டால் அவர் அதன் பயன்களை அனுபவிக்க நேரிலேயே சம்பந்தப்பட்ட பெரியாருடன் இருக்கவேண்டுமென்ற அவசியமிராது.

ஸ்ரீ பரதன் உதாரணத்தை இங்கு குறிப்பிடலாம். ஸ்ரீலக்ஷ்மணன் ஸ்ரீ ராமபிரானிடம் அத்யந்த பக்திகொண்ட சகோதரர். எப்போதும் ஸ்ரீ ராமன்கூடவே இருந்தார். ஸ்ரீபரதன் இன்னும் ஒரு படி மேலான பக்தன். தன் சகோதரரின் ஆக்ஞைக்குப் படிந்து பதினான்கு வருஷகாலம் நந்திகிராமத்தில் தங்கியிருந்தார்.

மனிதவர்க்கத்தின் முன்னேற்றம் ஸத் புருஷர்களின் உதாரணத்தையே பொறுத்திருக்கிறது. கடவுள் ஒருவர் உண்டென்பதை அறிந்து நாம் நம்பிக்கை கொள்வதற்கு முனிவர்கள், தவசிரேஷ்டர்கள் இவர்கள் தான் காரணம்.

இதே மாதிரி பால்ய பருவம் முதல் நமது பழக்க வழக்கங்களெல்லாம் தொடர்ச்சியாக மற்றவர்களைப் பார்த்தே படிந்து வருகிறது. இயற்கையாக இல்லாமல் வேண்டுமென்றே மற்றொருவரைப்போல் நடப்பதென்று வந்தால் அது தற்கொலைக்கொப்பானதாயிருக்கும். ஆனால் நாம் இயற்கையாகப் பெரிதும் விரும்பிக் கொண்டாடுபவர்களைப் போலவே நடந்து நமது வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொள்கிறோம். நல்லவர்களோடு இணங்குவோமானால் நல்லது, அதுதான் அதிருஷ்டம்.

சில சமயங்களில் இதில் தேர்ந்தெடுப்பது சிரமம். உறவினர்கள் இருக்கின்றனர், இவர்களிடையே யிருந்து நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும். நண்பர்களைக் கூட பொறுக்கி யெடுத்துக்கொண்டு விடலாம்.

நல்லவர்கள் யார்? கெட்டவர்கள் யார்? இதற்கு திட்டமாக பதில்சொல்லமுடியாது.யாரையும் முற்றிலும் நல்லவர்

என்றோ கெட்டவர் என்றோ சொல்ல முடியாது, என்று ஏற்கனவே நான் ஒரு முறை எழுதியிருக்கிறேன். ஆனால் யார் நல்லவர்கள் என்பது நமக்குத் தெரியும். அவர்களுடைய நல்ல தன்மையின் ரகசியமென்ன? இது வெளித் தோற்றத்தில் இல்லை. சுத்தமாகவும் நல்ல உடையணிந்திருப்பதும் அவசியமென்பது என் கருத்து என்றாலும் வெளித்தோற்றத்தினால் மட்டும் நல்ல தன்மை புலப்படாது. வாழ்க்கையில் கொள்ளும் மனோபாவம், மற்றவர்களிடம் நடந்துகொள்ளும் முறை இவற்றிலிருந்தே யார் பெரியவர் என்பதை நிர்ணயம் செய்ய முடியும். குழந்தைகளிடமும், பெண்களிடமும் அவர்கள் அன்போடு நடப்பார்கள், கோபமூட்டினால் கூடப் பதட்டமாகப் பேசமாட்டார்கள். அவர்களுக்குக் கோபம் வருவது அபூர்வம். அபாரமான பொறுமைசாலிகளாயும் இருப்பார்கள். மற்றவர்களைப் பற்றி நன்கறிந்திருப்பார்கள். உன்னதமான அடக்கத்தைப் பெற்றிருப்பார்கள். தெய்வபக்தி உண்டு. சுயநல மிராது. பிறருக்காகக் கஷ்டப்பட்டு சேவை செய்வார்கள். அன்பர்களுக்கு அரும்பணி ஆற்றுவார்கள். விரோதிகளை மன்னித்துவிடும் சுபாவமும் இருக்கும். அந்தமாதிரியான நபர்கள் உண்மையில் பெரியவர்கள். அவர்களால் நமக்கு ஓர் உத்வேகம் ஏற்படும்.

நாம் இருக்கும் தோரணைக்கு ஏற்ற அளவிலேயே நல்லவர்கள் பழக்கத்தால் பயன் கிடைக்கும். இது சுலபமானதில்லை. ஆனால் கஷ்டமென்று சொல்லவும் முடியாது. கெட்டவை சீக்கிரம் பற்றிக்கொள்கிறது என்கிறார்கள். ஆனால் இது வெறும் பிரமை. உறுதி யிருக்கும்பக்ஷத்தில் நல்ல உதாரணங்களும் சுலபமாக வந்தடையும். முயற்சி வேண்

டும். வெற்றிகரமாக அம்முயற்சி அமைந்தால் அடுத்தபடியாகச் செய்யவேண்டியவை சுலபமாகும்.

இதை டாக்டர் ஜான்ஸன் நன்கு வருணித்து உவமை கூறியிருக்கிறார். உனக்குப் பால்யம். எனவே மேலே சொன்னது உனக்குச் சுலபம். ஆகவே நீ எப்போதும் நல்லவர்கள் பழக்கத்தை, பின் பற்றி நடக்கவேண்டும். நல்ல முறையில், நல்ல படியாக நடக்க முடியாது என்று யாரும் சொல்ல முடியாது. திறமையின் உச்சத்தை அடைய நமது வாழ்நாள் முழுதும் ஓர் முயற்சியாக அமையவேண்டும். இதில் நீ வெற்றி பெறுவாயாக!

*30—7—'41.*

## பிறந்த நாள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இன்று உனக்குப் பதினுருவது பிறந்த நாள்

இதர காரணங்கள் ஒருபுறமிருப்பினும் நான் இன்று இங்கிருந்து உன்னைச் சந்திக்கும்படியாக இருப்பது எனக்குச் சந்தோஷமே.

உன்னைப் பரிபூர்ணமாக ஆசிர்வதிக்கிறேன்.

சந்தோஷகரமாகவும், சுயநலமில்லாமலும், நல்லறிவோடும் தீர்க்காயுளுடனும் நீ வாழ பகவான் அருள் புரிவாராக!

மார்க்கண்டேயனைப் போல நீயும் என்றும் பதினுருக, சிரஞ்சீவியாக யிருக்கப் பகவானைப் பிரார்த்திப்போமாக!

நமது பிறந்த நாட்களை வைதிகக் கிரமப்படியும், உற்றூர் உறவினர்களைச் சந்தித்துக் கொண்டாடுவதும் மிகச் சிறந்த சம்பிரதாயம். மலையாளத்தில் ஜன்ம தினக் கொண்டாட்டம் தவருமல் நடை பெறுகின்றது. நம்மவர்களில் குழந்தையின் முதல் ஆண்டு நிறைவைக் கொண்டாடுவதைத் தவிர இதர ஜன்ம தினங்களைக் கொண்டாடுவதில்லை. அறுபது ஆண்டு பூர்த்தியை மாத்திரம் கொண்டாடுகிறோம், எல்லா பிறந்த நாட்களையும் கொண்டாட வேண்டுமென்பதே என் அபிப்ராயம், நீ என்ன நினைக்கிருய்?

ஒவ்வொரு பிறந்த தினம் வரும்போதும் நாம் கடவுளைப் பிரார்த்தித்து வணங்கவேண்டும். நமக்கும், பிறருக்கும் தீர்க்காயுளையும், சந்தோஷத்தையும் அளிக்குமாறு பகவானைத் துதிக்கவேண்டும். ஒவ்வொரு பிறந்த தினமும் நாம் ஒரு வருஷத்தைக் கழித்துவிட்டோம், புது வருஷம் ஆரம்பமாகிறது என்பதை ஞாபகப்படுத்தும்.

நாமெல்லோரும் அனைத்திலும் முழு பக்குவம் அடைந்தவர்களில்லை. தவறிழைக்கக் கூடும்; தவறுகள் செய்கிறோம்; ரொம்பக் கேவலமாக இருந்தாலன்றி, நாம் விஷயங்களை நன்கு தெரிந்து கொள்கிறோம், அதே தவறுகளால் நல்வழிப் படுத்தப்படுகிறோம்.

தவறு செய்வது சகஜம். அதையே தொடர்ந்து செய்வது மனிதவர்க்கத்துக்கு உகந்ததல்ல; எனவே பிறந்த நாளென்று கடவுள் வழிபாடு ஒருபுற மிருக்க, போன வருஷத்தில் செய்தவற்றைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நல்ல காரியங்கள் செய்திருந்தால் சந்தோஷப்படலாம். கெடுதலானவற்றைச் செய்திருந்தால் வருத்தமும் படலாம். புது வருஷத்தில் நல்ல காரியங்களைச் செய்வதென்று உறுதி செய்து கொள்ளலாம். மனிதவர்க்கம் முன்னேறுவது என்பது நிதானமாக நடக்கவேண்டிய விஷயம். உன்னதமான தீர்மானங்களைச் செய்து கொள்வதற்கு பிறந்த நாட்கள் சிறந்த சந்தர்ப்பங்களாக இருக்கும்.

ஹிந்துக்களாகிய நாம் பிறந்த நாளன்று ஆயுஷ் ஹோமம் செய்கிறோம். இது கடவுளை வழிபடுவதற்கான வழிகளில் ஒன்று. அதைப் பரிசுத்தமான சடங்கு எனலாம். பிராமணர்களுக்குச் சன்மானம் வழங்கி போஜனம் செய்கிறோம்.

நல்ல காரியம் கட்டுப்பாடாகவுள்ள தர்ம ஸ்தாபனங்களின் மூலம் ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது நல்லதென்று நான் எண்ணுகிறேன். அன்று கோயில்களுககுச் சென்று அங்கு வழிபடுகிறோம். மேலும் மொத்தத்தில் நாம் பிறந்த நாளன்று பிரார்த்தனையிலும், கடவுள் வழிபாட்டிலும் ஈடு படுகிறோம்.

வாழ்வில் அவநம்பிக்கை கொண்டு அதில் பற்றில்லாமல் ஓர் ஆங்கிலக்கவி 'உன் இதயத் துடிப்பு மாயனத்திற்கு செல்லும், வாத்தியத்தின் அடிப்பு' என்று பாடியிருக் கிறார். ஹிந்துக்களாகிய நாம் சாகாவரம் பெற்றவர் களாக நினைந்து வாழ்ந்து வருகிறோம். அந்த நினைப்போடு விஷயங்களை உணர்ந்து கொண்டு நல்ல கருமங்களை நீ இயற்ற வேண்டும்.

இங்கிலீஷ் பஞ்சாங்கப்படியும், நமது பஞ்சாங்கப்படியும் நமக்குப் பிறந்த நாட்கள் வரும். இதில் ஹிந்துக்கள் பஞ் சாங்கத்தை அனுஷ்டிப்பதே சிறந்ததென நான் எண்ணு கிறேன். இக்கொண்டாட்டத்தில் தேதி முக்கியமல்ல; நக்ஷத்திரமே முக்கியம். ஆகவேதான் நமது ஜன்ம தினங் கள் ஜன்ம நக்ஷத்திரத்தன்று நடைபெறுகின்றன.

பிறந்த தினக் கொண்டாட்டத்தி லிருந்து ஜோதிடம் அதில் நமக்குள்ள நம்பிக்கை முதலிய கேள்விகள் எழுகின் றன. எனக்கு ஜோதிடத்தில் நம்பிக்கை உண்டு. எனக்கு ஆறேழு வயதிலிருந்தே அந்த நம்பிக்கை ஏற்பட்டது. என் அப்பா நல்ல ஜோதிடர். அவர் எனக்கு மூன்று விஷயங் களைச் சொன்னார்.

"நீ ஓர் பிரசங்கியாக இருப்பாய். நீ அயல் நாடுகளுக்கு போவாய்: எனக்கு கயையில் நீ சிராத்தம் செய்வாய்," இவை மூன்றும் எனக்குத் தெளிவாக நினைவிருக்கின்றன.

ரொம்பச் சில்லரையான விஷயங்களை யெல்லாம் ஜோதிடர்களிடம் நாம் எதிர்பார்க்கக் கூடாது. அவ்வளவுதான். நன்கு படித்தறிந்த ஜோதிடர்களிடம் நாம் நல்ல காலத்தையும், கெட்ட காலத்தையும் கேட்டறிந்து முன்னெச்சரிக்கையாக இருக்கலாம்.

"விதியை மனிதன் வெல்ல முடியாதா?" என்ற கேள்வி பிறக்கும். அனுபவத்தில் பார்த்தால் அறிய முடியாத சக்திகளின் வேலைகளிலிருந்து யாரும் தப்ப முடியாதென்று நான் சொல்வேன். சில சமயங்களில் சாதகமாயும், சில சமயங்களில் பாதகமாயும் சம்பவங்கள் நிகழும். அறிவைக் கொண்டுதான் அனுகூலம் தேடிக்கொள்ள வேண்டும்.

ஜோதிடத்தில் நம்பிக்கை யிருக்கிறதோ இல்லையோ, கடவுளை வழிபட்டு நல்ல வழி அடைவதில் நம்பிக்கை வேண்டும். கடவுளை நினைத்து நல்வழி கோரிப் பிரார்த்திக்க பிறந்த நாட்கள் சிறந்த சந்தர்ப்பமாக இருப்பதாகவே நான் சம்பந்தப்பட்டவரை கருதுகிறேன். ஆனால் பிரார்த்தனை ரொம்ப பணிவுடன் இருக்கவேண்டும். நல்லது எது வென்றே நமக்குத் தெரியவில்லை என்ற தோரணையில் வழி பட வேண்டும்.

இந்தப் பதினாறுவது வயதில் உனக்கும் உன் உற்றார் சுற்றத்தாருக்கும் பகவான் நல்லவற்றை அவரவர்கள் தகுதிக்குத் தக்கவாறு வழங்கப் பிரார்த்திப்போமாக.

*1-8-'41.*

# ஆனந்தம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நீன் வாழ்நாள் பூராவும் கற்றுக்கொள்ள வேண்டிய அளவு எவ்வளவோ கலைகள் இருக்கின்றன. ஆனந்தம் என்பது ஒரு தனிக்கலை. அதற்கு உன்னதமான ஸ்தான முண்டு. தானும் சந்தோஷமாக இருந்து பிறரையும் சந் தோஷிக்கச் செய்வதென்பது தெய்விக அருள்வாய்ந்த குணம். வாழ்க்கை முழுதும் சந்தோஷகரமான தென்பது கிடையாது. நெருக்கடியான சந்தர்ப்பங்கள், கஷ்டங்கள், துரதிருஷ்டங்கள் இவையெல்லாம் வாழ்க்கையில் சம்பவிக் கின்றன. இதைச் சமாளிக்க வேண்டும். கஷ்டங்களைக் கண்டு சிலர் வெருண்டு போகிறார்கள். நல்ல வீரனுக் குள்ள உணர்ச்சியோடு கஷ்ட நிஷ்டூரங்களைச் சமாளிக்க வேண்டும்.

ஒருவருடைய வாழ்க்கையில் சில சம்பவங்கள் ரொம்ப துக்கப்படும்படியாக நேரக்கூடும். அதைத் தவிர்க்க வழி கிடையாது. இருப்பினும் அவற்றையெல்லாம் பொறுமை யுடன் சகித்துக்கொள்ளவே வேண்டும். முன்னெச்சரிக்கை யாக இருந்து அவற்றின் வேகத்தையும், அளவையும் குறைத்துக் கொள்ளலாம்.

இன்னும் சில சங்கடங்கள் இருக்கலாம். அம்மாதிரியான நிலைமைகளில் எதிர்கால நம்பிக்கை கொண்ட மனோபாவத்

துடன் தைரியமாகச் சமாளிக்க வேண்டும். "கறிய வானத்தில் வெள்ளிக் கீறு விழுந்தாற்போலே" என்றும் இன்னும் இதைப் போலவே "ரொம்பக் கஷ்டமான நிலைமையிலும் நல்லதைக் காண முடியும்" என்றும் இன்னொரு பழமொழியும் ஆங்கிலத்தில் உண்டு. இந்தக் கட்டத்தில்தான் சந்தோஷமாக, மனந்தளராமல் இருக்க வேண்டும்.

வாழ்க்கையில் நல்ல விஷயங்களில் ஆனந்தப் படுவதிலும் ஓர் தனி அழகிருக்க வேண்டும். அனுதாபத்தோடும், விஷய உணர்வோடும் இருந்து நல்ல விஷயங்களை ஆனந்திப்பதென்றால் அது அலாதியான சந்தோஷம். உதாரணமாகச் சங்கீதம், நடனம், ஓவியம், நடிப்பு முதலியவற்றை எடுத்துக் கொள்ளலாம். அக்கலைகளிலுள்ள அழகு, கட்டுப்பாடு, பயிற்சி முதலியவற்றை நன்கு உணர்ந்திருந்திருந்தால் அக்கலைகளை விசேஷமாக ரஸித்து ஆனந்தப்பட முடியும்.

கலையை அனுபவிக்க வேண்டுமானால் அதன் நுணுக்கங்கள் தெரிந்திருக்க வேண்டுமா? என்ற பிரச்னை இந்த சந்தர்ப்பத்திலும் எழக்கூடும். இதைப்பற்றி உன்னோடும், உன் அம்மாவுடனும் நான் சிற் சில சமயங்களில் விவாதித்திருக்கிறேன். எனக்குச் சங்கீதத்தில் ரொம்ப அபிமானம். ஆனால் சங்கீத சாஸ்திர லக்ஷணங்கள் எனக்குத் தெரியாது. ஆகவே, ஹாஸ்யமாக, "நல்ல விருந்துணவை ருசிப்பதற்கு நன்றாகச் சமைக்கத் தெரியவேண்டுமென்ற அவசியமில்லை" என்று நான் சொல்லுவதுண்டு. உண்மையில் உயர்வாக உள்ள கலையானால். அது பாமரருக்கும், பண்டிதர்களைப் போலவே சுவை தரும். சம்பந்தப்பட்ட கலைகளில், சொற்ப ஞானமும் இருந்துவிட்டால் ரஸானுபவம் விசேஷமாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இன்னொரு அம்சத்தை நான் வற்புறுத்திச் சொல்லவேண்டும். ஞானபாவம் இருந்தால்தான் வித்வானுக்குள்ள கஷ்டங்கள் தெரியும். சாதாரணமாகவுள்ள ஒருவர் ரொம்பத்தரமான கச்சேரியோ அல்லது நடனமோ இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறார். அதற்காக அவர் பணம் கொடுத்திருக்கிறார் அல்லவா? ஆனால் கலையின் ஆழம் அவருக்குத் தெரியாது. **विद्वानेव विजानाति विद्वज्जनपरिश्रमम् ।**

எனவே மனதில் கலையைப்பற்றி அனுதாபம் தொனிக்க வேண்டுமானால் ஞானம் சிறிது வேண்டும்.

நமது கலைத்தரம் மட்டமாயிருக்க வேண்டுமென்றோ அல்லது சாதாரணப் பேர்வழிகளை எல்லாம் ஆதரிக்க வேண்டுமென்றோ நான் சொல்லவில்லை. உள் விஷயமறிந்து, ஞானபாவத்தோடுள்ளவர்கள் சபையில் இருப்பதால் வித்வானுக்கு உற்சாக மேற்படும்.

ஆனந்தமடையும் விஷயத்தில் இன்னொரு அம்சமும் உண்டு. ஆனால் இதைக் கவனிப்பதில்லை. அநேகர் கலையின் நுணுக்கங்களை கூர்ந்து கவனித்து ஆனந்திப்பது கிடையாது. அநேகமாக நாம் ஒரே பாட்டையும், ஒரே படத்தையும் கேட்டு, பார்த்துத் திருப்தி அடைந்துவிடுகிறோம். இதனால் கஷ்டமில்லை. ஆனந்தத்தில் இன்னொரு வகை. ஆனால் அது கொஞ்சம் கஷ்டமானது. புதிதாகவும், நெரடாகவும் உள்ள கச்சேரிகளுக்குப் போய் அனுபவிப்பதென்பது ரொம்ப ஆனந்தப்பட வேண்டுமென்ற அக்கரையுள்ளவர்களுக்கு உண்டு. அந்த ஆனந்தம் அவர்களுக்கு கிட்டும்.

ரஸிகத் தன்மையை தாமிருக்கும் இடத்தில் உள்ளவர்களுக்கும் அபிவிருத்தி அடையும்படி செய்வதென்பதும் மகிழ்ச்சிகரமானதுதான். சந்தோஷம் என்பது தொடர்ந்து பரவக்கூடியது. சந்தோஷமாக நீ இருக்கிறாய் என்று தெரிந்தால் உன்னை அண்டியிருப்பவருக்கும் ஆனந்தம். சிலர் தங்கள் ஆனந்தத்தை வெளிக்காட்டமாட்டார்கள், நான் அப்படியில்லை. நீயுமில்லை.

நாம் கலைக்காக்ஷிகளைக் கண்டானந்திக்க வேண்டும். இதன் மூலம் கலைஞர்களையும் மற்றவர்களையும் ஆதரிக்க வேண்டும்.

*2-8-'41.*

# சீதையின் பெருமை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இந்த வாரம் உனக்குச் சொந்த விஷயமான கடிதங்களை எழுதிக்கொண்டு வந்தேன். இன்று உனக்கும் எனக்கும் நேரடியாகச், சம்பந்தமில்லாத ஆனால் ருசி தரக்கூடிய விஷயம் பற்றி மறுபடியும் எழுதுகிறேன்.

மிக்க ருசியைத் தரும்படியான ஓர் கதை உண்டு. அநேகம் வருஷங்களாக நான் அக்கதையை படித்து வருகிறேன். அதாவது இராமாயணத்தையே குறிப்பிடுகிறேன். வால்மீகி இராமாயணத்தை நீ படிக்க ஆரம்பித்தால் உனக்கும் அந்த கையை ருசி பிறக்கும். இராமனைப்பற்றிக் கூறுவது இராமாயணம் என்றாலும் உண்மையாகப் பார்க்கப்போனால் அது சீதா தேவியின் கதை என்று சொல்லவேண்டும். “सीतायाः चरितं महत्” அதாவது: “சீதா தேவியின் பெரிய கதை” என்றுகவியே சொல்லுகிறார்.

ஏன் என்பதை நான் உனக்குச் சொல்லுகிறேன். நம்மையெல்லாம் போல ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி சகோதரர்களுடன் பிறந்தார். ஆனால், சீதை அப்படியில்லை. “अयोनिजा” கர்ப்ப வாஸமின்றி ஜனித்தவள். பூமியிலிருந்து உதித்தவள். இதுதான் அவளது ஜனனத்திலுள்ள தனி விசே

ஷம். அவளுடைய திருமணம் ஸ்ரீராமனின் தெய்வீக சக்தியால் நிர்ணயிக்கப்பட்ட வைபவம். சிவனின் தனுஸை வளைக்கக்கூடிய சக்தி சாமான்யமாக எந்த மனிதருக்கும் சாத்தியமல்ல. ஜனக மஹாராஜா வேறு யாருக்கும் தன் பெண்ணை மணம் முடித்திருக்கமாட்டார். ஸ்ரீ ராமனே சீதா தேவியை மணக்க நேரில் முன் வந்தார். விஸ்வாமித்திர மஹரிஷி இவ்விவாஹத்துக்கு ஏற்பாடு செய்தார். விஸ்வாமித்திர முனிவரும், ஜனக மஹாராஜாவும் முற்கூட்டி எதிர்பார்த்துச் சொன்னதுபோல "**पतिव्रता महाभागा छायेव अनुगता सती**" வரப்போகும் சம்பவங்கள் முற்கூட்டித் தெரிகின்றன.

சீதா எப்போதும் இராமனுடனேயே இருக்கவேண்டும். ஸ்ரீராமன் வனத்துக்குச் செல்ல முற்பட்டபோது சீதையை விட்டுப்போக எண்ணுகிறார். அப்போது சீதை இராமனைப் பார்த்து "நீங்கள் ஒரு பெண்" என்று சொல்லிவிட்டு இராமனுக்கு முன்னால் காட்டுக்கும் புறப்படுகிறாள். வனத்தில் ஸ்ரீ ராம லக்ஷ்மணனுடன் சுகதுக்கங்களைப் பகிர்ந்து கொள்கிறாள்.

ரிஷிகளின் தவத்துக்குப் பங்கம் விளைத்த ராக்ஷஸர்களைத் தண்டிக்க ஸ்ரீராமன் தண்டகாரண்யம் சென்றபோது சீதா தேவி தாய் அன்புடன் யாரையும் அனாவசியமாகக் கொல்லக்கூடாதென்று இராமனிடமிருந்து வாக்குறுதி கோருகிறாள். சீதை தன் வாழ்நாளில் ஒரே ஒரு முறை தன்னுடைய நிதானத்தை இழந்து ஸ்ரீ லக்ஷ்மணனை மட்டமான பாஷையில் திட்டுகிறாள். மாரீசன் மான் உருக் கொண்டு வந்த கட்டத்தில் இது நடக்கிறது. ஸ்ரீ லக்ஷ

மணன் சொல் தாங்காமல் மனமின்றிப் போகிறான். அப்போது இராவணன் சீதையைத் தூக்கிச் சென்று விடுகிறான்.

ஹனுமான் அசோக வனத்தில் சீதையைச் சந்தித்தபோது ஸ்ரீ ராமனைப்பற்றி இரண்டு சுலோகங்களுடன் சொல்லி நிறுத்திவிட்டு,எட்டு—ஒன்பது சுலோகங்கள் லக்ஷ்மணனைப் பற்றிச் சொல்லுகிறாள். இளைய பெருமானுடைய பக்தி விசுவாசத்தை அவள் தக்கவாறு புகழ்ந்திருக்கிறாள். உண்மையான ஒரு ஸ்திரீ, மன்னிப்பைத் தெரிவிப்பதற்கு இது ஒரு சான்று. இவற்றை யெல்லாம் ஹனுமான் லக்ஷ்மணனிடம் தெரிவித்தாரா இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை. வால்மீகி அப்படிச் சொல்லவில்லை. ஸ்ரீ லக்ஷ்மணன் அதைக் கேட்டிருந்தால் திருப்திப்பட்டிருப்பார்.

இலங்கையில் சீதைஇராவணனால் சிறைபிடிக்கப்பட்டுத் கஷ்டத் தவிக்கிறாள். ஸ்திரீயின் பெருமை, தன்னலமற்ற தன்மை, தீரம், பரிசுத்தம் இவையெல்லாம் சீதையிடம் எவ்வளவு உயர்வா யிருந்தது தெரியுமா? ஸ்ரீராமனிடம் அழைத்துப் போவதாக ஹனுமான் சீதையிடம் சொல்லுகிறார். இதை வேண்டாமென்று யாராவது சொல்வார்களா? சீதை சொன்னாள். "நான் மற்றொருவரைத் தீண்டேன். (இராமன்) என் நாயகன் வரட்டும், இராவணனை முறியடித்து என்னை அழைத்துப்போகட்டும். அதுவே அவருக்கும் பெருமை; எனக்கும் பெருமை" என்று சொல்லிவிட்டாள்.

இராவணனுக்கு நல்லதாகவும், எச்சரிக்கையாகவும் சீதை சொல்லும் கருத்துக்களெல்லாம் அவளுடைய பெருமையை விளக்கக்கூடியவை. அவளுக்கு இராவணனிடம் பயமே இல்லை. இராவணன்கூட அவள் முன்னால் தலை கவிழ்ந்து நின்றான்.

இராவணனைவென்ற பிறகு இராமன் சீதையைச்சந்தேகிக்க நேரிட்டபோதுதான் சீதைக்கு பெரிய சோதனை ஆரம்பம். ஆதாரமில்லாத சந்தேகத்தின் பயனுக சீதையை ஏற்க மறுக்கிருர் இராமன். அப்போது மிகுந்த ஆவேசத்தோடு ஸ்ரீராமனை அவள் கேட்கிருள் " प्राकृतः प्राकृतात्मिका " உடனே அக்னிப் பிரவேசம் செய்து பரிசுத்தமாக வெளிவருகிருள். இராமனுக்கு சமாதானம் ஏற்படுகிறது.

இராமனைப் பலவாருக நாம் அழைக்கிறோம். ஆனால் சீதாராமன் என்பதே நமக்குப் பொருத்தமாக இருக்கிறது. சீதாதேவி உண்மையில் ஒரு பெரிய ஸ்திரீ ரத்தினம். அவள் சந்தோஷத்தைவிட கஷ்டத்தையே அதிகம் அனுபவித்தாள். ஆனால் அவள் நிலையான பெயரைப் பெற்று விளங்குகிருள்.

நம் அனைவரையும் சீதாராமன் ஆசீர்வதிப்பாராக!

9-8-'41.

## ஸ்ரீ ஹனுமானின் சக்தி

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இராமாயணத்தில் மிகவும் முக்யஸ்தராக விளங்கிய மற்றொரு வீரன் ஸ்ரீ ஹனுமான். கவி அவரை பின்வருமாறு வர்ணிக்கிறார் :—

**मनोजवं मारुततुल्यवेगं जितेन्द्रियं बुद्धिमतां वरिष्ठम् ।**
**वातात्मजं वानरयूथमुख्यं श्रीरामदूतं शिरसा नमामि ॥**

" ஹனுமான் மனோ வேகத்துக்கும், வாயு வேகத்துக்கும், ஒப்பானவர் ; மேதையில் சிறந்தவர். வாயுவின் புத்திரன் ; வானர சேனையின் அதிபன் ; ஸ்ரீராமபிரானின் தூதன் ; அவருக்குத் தலைவணங்குகிறேன்."

சுந்தர காண்டத்தை இப்போது நான் தினசரி பாராயணம் செய்கிறேன். அதில் ஹனுமானைப்பற்றி வருகிறது.

கடலை வெகு துரிதமாக, எளிதில் தாண்டித் திரும்பிச் சேர்ந்த மகா ஆச்சர்யமான சம்பவத்துக்கு அவர் காரணஸ்தர். அந்தக் காலத்தில் இம்மாதிரி எவராலும் செய்திருக்க முடியாது. இந்தக் காலத்திலும் சாத்தியமில்லை. எவ்வளவோ தடைகளெல்லாம் குறுக்கே யிருந்தனவென்றாலும் இந்த அற்புதமான சம்பவத்தை அவர் வெற்றிகரமாகச் சாதித்துவிட்டார். கடலைத் தாண்டித் திரும்பிவந்தவுடன்

ஸ்ரீ ராமபிரான் ஹனுமானுக்கு விசேஷமாக நன்றி தெரி வித்ததில் ஆச்சர்யமில்லை.

ஹனுமானை "ஜிதேந்திரியன்" என்று கவி நாமஞ் சூட்டி யழைத்திருக்கிறார். அதாவது இந்திரியங்களை வென்றவன் ஹனுமான் என்பது பொருள். சுந்தரகாண்டத்திலே இந்த அம்சமும் இடம் பெற்றிருக்கிறது. பரிமளமிகுந்து, அலங் காரங்கள் செய்யப்பட்டிருக்கும் இராவணனின்சயன அறை யில் ஹனுமான் அங்குமிங்கும் சஞ்சரிக்கிறார். இவற்றால் தன் மனோநிலை சபலமடைகிறதாவென்று சிந்திக்கிறார். இப் படி ஒரு நிமிஷந்தான்! ஆனால் அவைகளை லட்சியம் செய் யாமல் அவர் இந்திரியங்களை வென்றுவிட்டார்.

சீதா தேவியினுடைய துக்ககரமான நிலைமையை நினைந்து தனக்குத் தானே "இந்த மாதிரியான காக்ஷிகளைக் கண்டு மனவேறுபாடு அடையக்கூடாது" என்று அவர் கூறிக் கொள்கிறார்.

"விவேகிகளில் ஹனுமான் சிரேஷ்டர்" என்று கவிசொல்லு கிறார். வானமண்டலத்தில் எழும்பிக் கடலைக் கடக்கையில் நேர்ந்த தடைகளை அவர் சமாளித்து; லங்காதேவியை முறி யடித்தது; சீதா தேவியுடன சம்பாஷணை; இராவணனுடன் பேசிய முறை இவைகளெல்லாம் அவருடைய அறிவுத் திற னைக்காட்டக்கூடிய அம்சங்கள். இராவணன்சீதையைப் பய முறுத்தி ராக்ஷசிகளைக் காவல் போட்டுவிட்டுப் போனபின் னர் அசோகவனத்தில் ஹனுமான் பிரவேசிக்கிறார். அப் போது அவருடைய நிலைமை ரொம்பக் கஷ்டமாக இருக் கிறது. தான் தோற்றத்தில் வெறும் குரங்குமாதிரி யிருக் கையில் சீதாதேவியிடம் சென்று தாம் இராமனின் தூத

னென்று அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதோடு ராக்ஷஸிகளைப் பயமுறுத்தாமல் எச்சரிக்கையோடு நடந்துகொள்ளவும் வேண்டும்! ஆகையால் ஸ்ரீராமன்• சீதா இவர்களுடைய கதையைச் சொல்ல ஆரம்பிக்கிறார். அதன் மூலம் அவர்நோக்கம் வெற்றி பெறுகிறது.

ஒரு சந்தர்ப்பத்தில் சீதாதேவி ஹனுமானைப் பின் வருமாறு கேட்கிறாள் :—

**वानराणां नराणां तु कथमासीत्समागमः।**

மனிதர்களுக்கும், குரங்குகளுக்கும் எங்ஙனம் தொடர்பு இருக்க முடியும்? என்ற கேள்விக்கு ஹனுமான் பதில் கூறுகிறார். நிலைமையை விளக்கிச் சீதாதேவியைத் திருப்தி செய்யவேண்டி வந்தது. இதை அவர் மிக்க அபூர்வமாகச் செய்திருக்கிறார். தன்னுடைய பிறப்பு விசேஷத்தையும், சக்தியின் பெருமையையும் விளக்குகிறார். உடனே தன்னுடைய அடக்கத்தையும் காட்டுகிறார். "இதையெல்லாம் தேவிக்கு உறுதி ஏற்படுவதற்காக சொல்லுகிறேன்" என்கிறார்.

**तत्र प्रत्ययकारणात् ।**

இராமனிடம் மற்றொருவர் உதவியோடு திரும்பிப் போக சீதாதேவி மறுத்ததைச் சென்ற என்னுடைய கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். ஹனுமான் சீதா தேவியை அப்போது பாராட்டிப் புகழ்கிறார். "இம்மாதிரி தாங்கள் கூறுவது தங்களுக்கும், தங்கள் பர்த்தாவுக்கும் உள்ள பெருமைக்கு உகந்ததாகும்" என்றார்.

இராவணனின் தர்பாரில் ஹநுமானின் பேச்சுவன்மை உச்சத்தை அடைகிறது. இராமாயணத்திலேயே ஹனுமானே

நாவன்மை படைத்தவர் என்று நான் கருதுகிறேன். இராவணனின் தவறுகளை எடுத்துக்காட்டி, சீதையை இராமனிடம் திருப்பி அனுப்பும்படி எவ்வளவோ அவர் தூண்டிப் பேசுகிறார். இராவணன் கேட்கவில்லை. பதில் சொல்ல முடியாதபடி ஹனுமான் தெரிவித்த வாதங்களுக்கு இராவணன் பதில் சொல்ல முயற்சி செய்யவில்லை. அப்படியே செய்திருந்தாலும் முடிந்திராது.

ஹனுமான் ஏன் இலங்கையைத் தீயிட்டு அழித்திருக்க வேண்டுமென்று நான் சிந்தித்ததுண்டு. இதற்கு ஹனுமான் காரணம்சொல்லியிருக்கிறார். இராவணனும், ராக்ஷஸிகளும் சீதையை நடத்திய முறை கண்டு தமக்குக் கோபமேற்பட்டதால் அங்ஙனம் செய்ததாக பின்னால் ஒரு இடத்தில் அவர் தெரிவிக்கிறார்.

சுந்தரகாண்டத்தில் இரண்டு இடங்களில் ஹனுமான் தாம் கண்டவற்றைத் தெரிவிக்கிறார். தமது நண்பர்களிடம் ஒரு முறை அதைச் சொல்லுகிறார். ஸ்ரீராமனிடம் வேறு தெரிவிக்கிறார். இந்தக் கட்டம் இரண்டும் இலக்கிய ரத்தினங்கள். அதில் முக்கியமான எதுவும் விடப்படவில்லை; அவசியமற்றவையும் கிடையாது. சுற்றி வளைத்து எதுவும் கூறவில்லை; சொன்னதையே திருப்பிச் சொல்லவுமில்லை. இரண்டு இடங்களிலும் ஹனுமான் தன் அடக்கத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறார்.

**मत्तः प्रत्यवरः कश्चित् नास्ति सुग्रीवसन्निधौ ।**

ஹனுமான் நம்மை ஆசீர்வதிப்பாராக!

*10-8-'41.*

# பகவத் கீதை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இராமாயணத்துக்கு அடுத்தபடியாக பகவத் கீதை. அதையும் நான் தினசரி பாராயணம் செய்து வருகிறேன். பகவத் கீதையில் உபதேசம் செய்யப்பட்டிருக்கும் கருத்துக்களுக்கிணங்க லோகமான்ய பால கங்காதர திலகர் தமது அரசியல் வாழ்க்கையை அமைத்துக் கொண்டார். அவர் கீதையைப்பற்றி மிக்க அற்புதமாக வியாக்யானம் எழுதியிருக்கிறார். இந்திய தேசீய இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் அநேக ஹிந்துத் தலைவர்கள் பகவத்கீதையைத் தழுவி நடப்பவர்கள்தான். **स्थितप्रज्ञः** என்று பகவத் கீதையில் இரண்டாம் அத்தியாயத்தில் கூறியுள்ளபடி மகாத்மாஜி தமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயன்று வருகிறார்.

அவரை வர்ணிப்பதாகக் காணப்படும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் ஸ்லோகங்கள் அவரது தினசரிப் பிரார்த்தனையின் போது சொல்லப்படுகின்றன.

'சொந்த விஷயமாயினும், சமூகம், குடும்பம், வகுப்பு, தேசம், சர்வ தேசம் ஆகிய பொது விவகாரங்களாயினும் சரி *அஹிம்ஸா தர்மமே பரிகாரம்' என்று மகாத்மாஜி நம்புகிறார். இந்த நம்பிக்கை அவருக்குக் கீதையி

விருந்து பிறந்ததாகும். பல இடங்களில் அஹிம்ஸையின் மேன்மைபற்றி கீதையில் பிரஸ்தாபிக்கப் படுகிறதென் பதில் ஆக்ஷேபனையில்லை. வேறு வகையில் வியாக்யா னத்தைத் திரித்தாலல்லாது கீதை நியாயமான போரைப் பற்றி உபதேசிக்கிறது என்றே முடிவு செய்யும்படி யிருக்கும்.

**धर्म्याद्धि युद्धाच्छ्रेयः अन्यत् क्षत्रियस्य न विद्यते ।**

ஆத்மீக சம்பந்தமான போராட்டத்தைப் பற்றிச் சொல்வ தாகக் கூறும் வியாக்யானத்தை நான் ஏற்கவில்லை.

பகவத்கீதை வாக்கியத்தை நாம் சந்தர்ப்பத்துக்கு உகந்த மாதிரியில் கொள்ள வேண்டும். கவுரவர்களும், பாண்டவர்களும் இருபிரிவிலும் யுத்த சன்னத்தமாக இருக்கின் றனர். திடீரென்று அர்ஜுனனுக்குச் சந்தேகங்களும் சங்கடங்களும் ஏற்பட்டுவிடுகின்றன ; போராட அவன் விரும்பவில்லை. ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அப்போது அவ னுக்கு கீதையை உபதேசிக்கிறார் ; பிறகு அர்ச்சுனன் போராடி கவுரவர்களை முறியடிக்கிறான்.

இது தர்ம யுத்தம். ஸ்ரீ கண்ணபிரானே நேரே கவுரவர் களிடம் தூதுசென்று பாண்டவர்களுக்கு ஐந்து சிறிய கிரா மங்களையாவது கொடுக்கும்படி கேட்கிறார். இதையும் கொடுக்க அவர்கள் மறுத்துவிட்டனர். எனவே பாண்டவர் கள் போராடவேண்டி வந்தது. யுத்தமுறை சம்பந்தப் பட்ட வரையில்கூட அது தர்ம யுத்தமாகவே யிருந்தது. போர் க்ஷத்திரியர்களுக்குள் மட்டுமே நடந்தது. சாதாரண ஜனங்கள் பத்திரமாகப் பாதிக்கபடாமலிருந்தனர். ஜன சஞ்சாரமே இல்லாத ஒரு இடத்தில் குரு க்ஷேத்திரத்தில்

இந்த யுத்தம் நடந்தது. நகரத்தின் மீது குண்டுகள் வீசுவதே அப்போது கிடையாது. மஹாபாரத யுத்தம் பாண்டவர்களுக்குப் பெயரளவில் வெற்றி கொடுத்ததேயன்றி அந்த யுத்தத்தால் எந்தப் பிரச்னையும் தீரவில்லை. க்ஷத்திரிய வம்சமே அழிந்து விட்டது. ஆகவே கீதை தற்கால யுத்தத்தை ஆதரிப்பதாகச் சொல்வதற்கில்லை.

கீதையின் முக்கியமான உபதேசம் என்னவெனில் மனிதன் பற்றில்லாமல் தன்னுடைய கடமையை உணர்ந்து அதை நிறைவேற்ற வேண்டும் என்பதாகும். இதை ஒப்புக்கொண்டுவிட்டால் தற்கால யுத்தத்துக்கு நியாயமில்லை என்றாகிவிடும். ஒரு நாடு இன்னொரு நாட்டை ஆள வேண்டுமென்பது; மற்ற நாடுகளின் சாதனங்களைச் சுரண்ட வேண்டுமென்ற எண்ணம்; உலகில் ரொம்பப் பெரிய, பணக்கார நாடாக விளங்க வேண்டுமென்ற பேராவல்; இவைதாம் தற்கால யுத்தத்துக்குக் காரணம். இது போன்ற யுத்தங்களைக் கீதை நியாயமாகக் காட்டவில்லை.

அதர்மத்தை அடக்கக் குறைந்தபக்ஷ ஹிம்ஸா முறையை **विनाशाय च दुष्कृतां** தன்னலத்துக்காக இன்றி உலக நலத்துக்காக அனுமதித்தால் இன்று அனுஷ்டிக்கப்படும் அநேகம் ஹிம்ஸா முறைகளுக்கு நியாயமே இல்லை, எனவே மாத்மாஜி அஹிம்ஸா தர்மத்தைத் தமது கோட்பாட்டுக்கு ஆதாரமாகக் காட்டுவது தவறா?

சத்தியம், கடவுள், நல்வாழ்வு இவற்றை நம்புபவர்களுக்குக் கீதையில் அநேகம் உபதேசங்கள் இருக்கின்றன.

**न मे भक्तः प्रणश्यति ।**

**न हि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ।**

இந்த உணர்ச்சிமிகுந்த பதங்கள் எனக்கு அடிக்கடி துணை நிற்கின்றன. உனக்கும் அவ்வாக்கியங்கள் துணையாக நிற்கட்டும். நமது வேதாந்த முறையிலுள்ள உன்னதமான உண்மையை கீதை ரத்னச் சுருக்கமாக எடுத்துக் கொடுக்கிறது.

விளக்கத்தையும் விமோசனத்தையும் நாடும் சாதாரண பக்தனுக்கு கீதையில் மூன்று ஸ்லோகங்கள் தக்க பதில் அளிப்பதாக அமைந்திருக்கின்றன.

**शाधि मां त्वां प्रपन्नम् ।**

“நான் தங்களை சரணமடைந்தேன்; என்னை ரக்ஷிப்பீராக”

**निमित्तमात्रं भव सव्यसाचिन् ।**

“நான் தங்கள் கட்டளையை நிறைவேற்றுகிறேன்”

**करिष्ये वचनं तव ।**

நாம் எல்லோரும் அங்ஙனமே நடப்போமாக!

*11-8-’41.*

